உ

கணபதி துணை.



திரிசிரபுரம் மஹாவித்துவான்

ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்

இயற்றிய

# சீகாழிக் கோவையும்,

நூதனமாக எழுதிய

## அரும்பதவுரையும்.



இவை,

இடமணல்

ம - ள - ள - ஸ்ரீ

M R. விஜயராகவலுநாயடு அவர்கள்

உதவியைக்கொண்டு,

இந்நூலாசிரியர் மாணாக்கரும்

கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

சென்னபட்டணம்:

வைஜயந்தி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சோபகிருது௵ சித்திரைமீ

1903.

விலை அணா - அ.

# இப்புத்தகத்திலடங்கியவை.







கணபதிதுணை.

# முகவுரை.



சீகாழிக்கோவையென்பது, சீகாழியிற் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீ பிரமபுரேசர்மீது திரிசிரபுரம் மஹாவித்துவான் ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றியது. இதில் ௫௱௧-செய்யுட்களுள்ளன. இன்றியமையாத ஓசையினிமைமுதலியவைகளும், உள்ளுறையுவமமுதலானவைகளும், சங்கச்செய்யுட்பிரயோகங்களும், சைவசாஸ்திரக்கருத்துக்களும் இந்நூலிற் பரக்கக்காணலாம். பல சிவபுராணகதைகளையும், உண்மை நாயன்மார்களுடைய திவ்யசரித்திரங்களையும் இந்நூலுள் உரியவிடங்களில் நூலாசிரியர் உவமையாக எடுத்துக்காட்டியிருக்கும் அருமை மிகப்பாராட்டற்பாலது. இந்த அழகு எந்தநூலிலும் காணப்படுவதன்று. மற்றக்கோவைகளில் அருகிவழங்குந் துறைகளை இக்கோவையில் ஒருங்கேகாணலாம். எவ்வளவுநயங்கள் அமைந்திருக்கவேண்டுமோ அவ்வளவும் இதிற் பூர்ணமாக அமைந்துள்ளன.

சீகாழியென்பது சோழவளநாட்டிற் காவிரிநதியின் வடகரையிலுள்ள சிவக்ஷேத்திரங்களுள் ஒன்று; திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அவதரித்தருளிய பெருமைபேறுடையது; ௭௧ - தேவாரத்திருப்பதிகங்கள்பெற்றது. இதற்குச் சீகாழியென்பதனோடு பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம் அல்லது கொச்சை, கழுமலம் என்கிற ௧௨ - காரணத்திருநாமங்கள் உண்டு. இதுபற்றிப் பன்னிருநாமப்பதியெனவும் குருலிங்கசங்கமங்களின் விசேடமுண்மையின், குருலிங்கசங்கமப்பதியெனவும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் அருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கை, திருமாலைமாற்று என்பனவற்றைப் பெற்றிருத்தலின், திருவெழுகூற்றிருக்கைப்பதி, திருமாலைமாற்றுப் பதியெனவும் இத்தலம் பெயர்பெற்றுவழங்கும்.

சுவாமிதிருநாமம் - பிரமபுரேசர்.

அம்பிகைதிருநாமம் - திருநிலைநாயகி.

இத்தலத்தில் சிவபெருமான் பெரியநாயகரென்னும் திருநாமம் பூண்டு பெரியநாயகியாரோடு திருத்தோணிமேல் எழுந்தருளியிருக்கும் மலை ஒன்றுண்டு. அது திருத்தோணிமலையென்று பெயர்பெற்றுவழங்கும். அம்மலையின்மேல் ஒருபாகத்தில் ஸ்ரீ சட்டைநாதப் பெருமானுடைய திருக்கோயிலொன்றும் இருக்கின்றது.

தீர்த்தம்—பிரமதீர்த்தம்.

இத்தலத்தின் மற்றவிசேடங்களை இத் தலபுராணம், பெரிய புராணம் முதலியவற்றாலுணர்க. இதுநிற்க.

இந்நூலாசிரியரும், கவிஞர்பெருமானென்று உலகமுழுவதும் புகழ்விளங்கியவரும், குணக்கடலும், திருவாவடுதுறையாதீனத்து வித்துவானும், என்னுடையகண்ணையும் கருத்தையும் விட்டுநீங்காத அருமைத் தமிழாசிரியருமாகிய பிள்ளையவர்களை அறியாதார் யாவர்? அவர்களுடைய அருமையான செய்யுட்களைக் கேட்டுமகிழாதார் யாவர்? கேட்பதற்கு விரும்பாதார் யாவர்? அந்த மஹானுடைய இனிய சரித்திரத்தைத் தனிப்புத்தகமாக்கி வெளிப்படுத்தநினைந்து வசனரூபமாக இப்பொழுது நான் எழுதிவருதலால், இங்கே அதனை எழுதவில்லை.

இவர்கள், இற்றைக்கு சஉ - வருடத்திற்குமுன்னதாகிய சித்தார்த்திவருடமுதலில் இந்நூலைப்பாடி ௯௨வருடம் புரட்டாசிமீ ௴த்தில் சீகாழியில் ஸ்ரீ பிரமபுரேசருடைய திருக்கோயிலில் வலம்புரிமண்டபத்தில் வடமொழி தென்மொழிகளில் மிக்க பயிற்சியுள்ள பலவித்துவான்களும் பலபிரபுக்களும்கூடிய மஹாஸபையில் அரங்கேற்றினார்கள். [சாலீவாகனசகாப்தம் கஎ௮உ; கி. பி. 1859 - 1860.] இவர்களுடைய அருமை நண்பரும் இந்நூலைச்செய்வித்தவர்களுள் ஒருவரும் அக்காலத்துச் சீகாழியில் நீதிபதியாகவிருந்தவரும் (Late District Munsiff of Shyali.) இதனை அரங்கேற்றுகையிற் சபாநாயகராக வீற்றிருந்துகேட்டு ஆனந்தித்தவருமாகிய குளத்தூர் ச. வேதநாயகம்பிள்ளையவர்கள் அப்பொழுதப்பொழுது மகிழ்ந்து மனமுருகிப்பாடிய செய்யுட்களுள், "தேமாரி பொழிபொதும்பர்"

என்னும் செய்யுளால் இஃது இனிதுவிளங்கும். அக்காலத்து இந் நூலைக்குறித்து மற்றவர்கள்செய்த செய்யுட்கள் இப்பொழுது கிடைக் கவில்லை.

இந்நூற்செய்யுட்களுள் ஒவ்வொன்றனுடைய நுட்பங்களையும் பிறவற்றையும் தனித்தனியே விளக்கியெழுதப்புகின் மிகவிரியுமென் றஞ்சியே சுருக்கமாக இந்நூற்கு அரும்பதவுரை எழுதியிருக்கிறேன்.

இந்நூலின் அருமை பெருமையை அறிந்து அச்சிடுவிக்கவிரும் பிப் பொருளுதவிசெய்த இடமணல் ம-ள-ள-ஸ்ரீ விஜயராகவலு நாயடு அவர்களுடைய அருமைக்குணம் மிகப் பாராட்டற்பாலது. இப்படி யே அங்கங்கேயுள்ள தமிழ்ப்பாஷாபிமானிகளாகிய தனவான்கள் தத்தமக்கு இயன்றஅளவு பொருளுதவிசெய்வார்களாயின், இந்நூ லாசிரியராகிய பிள்ளையவர்களியற்றிய அருமையான நூல்களுள், அச் சிடப்படாமலிருக்கும் ஸ்தலபுராணங்களையும் பிரபந்தங்களையும் அரு ம்பதவுரையுடன் ஒழுங்காகப்பதிப்பித்து வெளிப்படுத்துதற்கு நிரம்ப அனுகூலமாக இருக்கும். அங்ஙனஞ்செய்யும்பொருளுதவிக்கு யா தொரு பிரதியுபகாரமுமில்லையென்பது உண்மையாலும், அவர்க ளுதவிய பொருளுக்கு ஏற்றஅளவு, பதிப்பிக்கும் பிரதிகளை உட னுடன் அவர்கள்பாற் சேர்ப்பிக்க ஸித்தனாகஇருக்கிறேன். பிள்ளை யவர்களியற்றிய நூல்களுள் இப்பொழுதுதெரிந்தவை ௭0; அவற்றுள் இன்னும் அச்சிடப்படாதவை - ௫௪.

இந்தக் கோவையை ஆராயுங்காலத்தும் பதிப்பிக்குங் காலத்தும் சலிப்பின்றிப் பேருதவிபுரிந்துவந்த அன்பர்கள், சென்னை ந்யூ இங்டன் ஸ்கூல் மதபோதகாசிரியராகிய (Religious Instructor to the Tamil Speaking Wards at Newington) தமிழ்வித்வான் பிரஹ்மஸ்ரீ தி. கிருஷ்ணையரவர்களும், கும்பகோணம் டவுன் ஹைஸ் கூல் தமிழ்ப்பண்டிதர் பிரஹ்மஸ்ரீ இ. வை. அநந்தராமையரவர்களும்.

மகோபகாரிகளாகிய பிள்ளையவர்களியற்றிய நூலைப் பதிப்பிக் கும்படிசெய்த எனது நல்வினையின்பால் மிக்க நன்றியறிவுடையேன்.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.



குளத்தூர், ச. வேதநாயகம்பிள்ளையவர்களியற்றிய

# சிறப்புக்கவிகள்.



எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

வாதவூருதித்தநா டிருக்கோவை யுரைத்த மாணிக்க வாசகரே சிரபுரத்தி லிந்நா, ளாதவனிற் றோன்றிமீ னாட்சிசுந் தரனென் றரும்பெயர்பூண் டொருகோவை யறைந்தனர்கா ழிக்கே, யேதமில் லைக்கோவை யாயுவதின் மூத்த தென்னினுங்கற் பனைநயத்தி லிக்கோவை முன்னும், மூதறிஞர் வைகலும்பா டப்பாட வாக்கின் முதுமைகொள்வா ரெனவுலக மொழியுமொழி மெய்யே. (க)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருவமர்கோ வையைமகிழ்ந்து வாதவூ ரரைத்தன்பாற் சேர்த்துக் கொண்ட, பொருவில்சிதம் பரநாதன் பின்னுமொர்கோ வைக்காசை பூண்டன் னோரை, மருவுசிர புரத்தின்று மீனாட்சி சுந்தரப்பேர் வழங்கிக் காழிக், கொருகோவை செய்வித்தான் சிதம்பரநா தன்சேயென் றுரைத்தன் மெய்யே. (உ)

[இந்நூலாசிரியருடைய தந்தையார்பெயர் சிதம்பரம்பிள்ளையென்பது.]

பிரமபுரத் தீசர்மேன் மீனாட்சி சுந்தரமால் பெட்பிற் செய்த
வரமுறுகோ வையைக்கேட் டோர் மகிழுவரஞ் சுவன்றமியேன் வள்ளி னிற்கேட்
டரவரசு சிரமசைக்கிற் றரையசையும் வரையசையு மசையு மாழி
மரமசையு மனையசையு மன்னுயிரெ லாமசைந்து வருந்து மென்றே. (ங)

[வள் - காது.]

குற்றமில்சீர் மீனாட்சி சுந்தரவா ரியநின்னைக் கோயின் மேவ
நற்றவமென் செய்தனனோ மகடமிழ்செய் தவமெவனீ நவிலு மேன்மை
யுற்றதிருக் கோவைபெறப் புகலிசெய்பாக் கியமெவனவ் வுயர்நூல் கேட்கப்
பெற்றவென்போ லியர்புரிந்த மாதவமென் னோதுறுவாய் பெருமை மிக்கோய்.

வித்தகமார் மீனாட்சி சுந்தரவே ளேயொருநூல் விளம்பு மென்னைப், புத்தமுதார் நின்வாக்காற் றுதித்தனைநீ பாடியதிப் பொருளா லொன்றோ, வெத்தனையோ கோவைகண்மற் றெத்தனையோ புராணமின்னு மெண்ணி னூல்க, ளத்தனையு மித்தனையென் றெத்தனைநா விருந்தாலு மறையப் போமோ. (ரு)

[ஒருநூல் - நீதிநூல்.]

பன்னூலு மாய்ந்தாய்ந்தோர் பயனுறு துளம்வருந்தும் பாவ லீரே
நன்னூலோர் மீனாட்சி சுந்தரமா லொருகோவை நவின்றான் காழிக்
கந்நூலு ளொருபாவி லோரடியி லொருசீரை யாய்வீ ராயி
னெந்நூலுங் கற்றவரா யிகபரமும் பெற்றவரா யிலகு வீரே. (சு)

பரமசுக மறியாதார் சிற்றின்பம் பெரிதென்னும் பான்மை போல
வுரமுறுமுற் கோவைகளே சிறந்தவென வின்றளவு முன்னி னோர்நந்
தரமு சீர் மீனாட்சி சுந்தரப்பேர்த் தமிழ்ப்புலமைத் தலைமை யோன்சொல்
பிரமபுரக் கோவையே பரிதியக்கோ வைகளுடுக்கள் பேசி னெஞ்சே. (எ)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தண்டமிழ்முன் பாலுணர வாசைகூ ரனந்தன் றனமீய வகையின்றி நின் சேட னாகிக், கொண்டனனந் நாமமே யகத்தியன் றன் றன்னைக் கூடாம லுனை மேவிக் குலாவுதமி ழுதனை, யண்டலரின் முனிந்தனுற் றமிழ்முனிவ னெ னும்பே ரடைந்தனனு தலினகிலத் தியாவருனை நிகர்வார், வண்டமர்தார் மீனா ட்சி சுந்தரவே ளேநீ வளப்புறவக் கோவைசொலின் வியப்பவரா னையா. (அ)

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

இன்பாவிற் கோவைசொன்ன மீனாட்சி சுந்தரப்பே ரிறைவ யானு, முன் பாவிற் கவிசொல்வே னென்கவிபார்ப் போரிறைமீண் டோரா தான்றோர், முன்பாச்சொ னூல்களையே துதிப்பருன்பா வுணர்வோர்கண் முன்னோர் நூலை ப், பின்பாகச் சொலிவெறுப்பர் நல்லவனீ யோயானே பேசு வாயே. (கூ)

விண்ணேறு மாதவனோர் மீனாட்சி சுந்தரவில் வேளே நீசொ
லெண்ணேறு கோவையினைப் புகழயான் றிறமில்லே னெனினு முன்சீர்
மண்ணேறும் வானேறு மதியினர்த நாவேறும் வகையா லுன்னைக்
கண்ணேறு மேவாமற் கறையேறு மென்புகழுங் கைக்கொள் வாயே. (க0)

நலம்விளக்கு மீனாட்சி சுந்தரமா லொருகோவை ன்றுன் சண்பைத்
தலம்விளக்க வவற்குநாம் புரிகைம்மா றெவனழியாத் தனமே கங்கா
குலம்விளக்குங் கற்பகமே குருமணியே திருவணியே குணக்குன் றேயிந்
நிலம்விளக்குந் தினகரனே யெனவவனை வாழ்த்திடுவாய் நிதமு நெஞ்சே. (கக)

ஷை வேறு.

சொல்வள முறுமீ னாட்சி சுந்தரப் புனிதன் சொல்லு
நல்வள முடைய கொச்சை நகர்த்திருக் கோவை யாயிற்
பல்வள முடையே ஞானம் பதிவள முடையே மாலை
வெல்வள முடையே மின்ப மிகுவள முடையே நெஞ்சே. (கஉ)

ஷை வேறு.

விதியெதிரி லரிமுதலோர் புகல்புகலி யீசரே விண்ணோர் மண்ணோர்
துதிபொதிபல் பாமாலை பெற்றிருப்பீர் மீனாட்சி சுந்தரப்பேர்
மதிமுதியன் கோவையைப்போற் பெற்றீர்கொ லிக்காழி வைப்பி னீதி
யதிபதிநா மெனவறிவீர் நம்முன்னஞ் சத்தியமா வறைகு வீரே. (கரு)

நம்மாலே பெரியனெனும் வைணவரே சுரர்க்கமுத நல்கச் சென்று
நம்மால்வெண் மேனிகரு மேனியா னைரர்தா நுகர வேண்டி
யெம்மாலா மீனுட்சி சுந்தரவேள் கோவையமு தீந்து சீர்த்தி
வெம்மாலில் விறலிவற்றால் வெண்மேனி செம்மேனி விரவி னனால். (கச)

காளேடு மிளிர்தாரான் மீனுட்சி சுந்தரமால் காழிக் கோவை
தேனேடு பாலோடு நிகருமவன் பிரதாபஞ் சீர்த்தி யோங்கி
வானேடு மண்ணோடு மற்றோடும் வகையின்றி வடிவி ரண்டாய்
மீனேடு வான்றிரியும் பானுமதி யென்றுலகோர் விளம்பு வாரால். (கரு)

தண்டமிழ்மு நீர்பருகி மீனுட்சி சுந்தரப்பேர்த் தருமக் கொண்ட
லொண்டர்கள்சூழ் சிரபுரத்திற் பொழிகோவை யெனுமமுதத் தூய மாரி
மண்டலமும் விண்டலமுங் கரைபுரண்டு திரைசுருண்டு வருத லோக்கி
யண்டர்தொழும் புகலியிறை தோணியுற்று னஃதின்றே லமிழ்ந்து வானே. ()

தேவேநேர் மீனுட்சி சுந்தரக்கோ னெருகோவை செப்பிப் பாரிற்
றுவேயில் புகழ்படைக்கி னமக்கென்ன வவற்குமவன் றமர்க்கும் பாடாம்
நாவேகா தேமனனே யவன்சீரைச் சொலிக்கேட்டு நனியிங் குன்னி
யோவேயி லாதருங்கா லங்கழித்தீர் பிறவினைமற் றென்றி லீரோ. (கஎ)

அரியவமு தொருங்குகவர்ந் தசுரரைவஞ் சித்தவிண்ணுட் டவரே மேன்மைக்
குரியவனு மீனுட்சி சுந்தரமால் கோவையமு துவந்தீந் தானுந்
தரியலர்பெற் றிடினவரை வெலலரிது வென்ரவினீர் தாம தைக்கொண்
டரியயன்சூழ் புகலியிறைக் கர்ப்பணஞ்செய் துண்டெய்மாறி னவி தானே. ()

நல்லார்க்கு நல்லவனு மீனுட்சி சுந்தரவே ணவின்ற கோவை
யில்லார்க்கு நிதிதுறவா வில்லார்க்கு விதிபுவிவாழ் வெல்லா நீத்த
வல்லார்க்குத் திதிஞானங் கல்லார்க்கு மதிவேலை வைய கத்திற்
பல்லார்க்குக் கதிபுகலிப் பதியார்க்குத் துதியதன்சீர் பகர்வோர் யாரே. (கக)

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தேமாரி பொழிபொதும்பர்த் திருக்காழி யிறைமுன் றிகழாண்டு சித்தார்த்தி திங்கள்பாத் திரத்திற், பூமாரி சுரர்பொழியச் செல்வர்பலர் கூடிப் பொன்மாரி மிகப்பொழியப் புலவர்குழாந் துதித்துப், பாமாரி நனிபொழியப் பல்லியங்கண் முழங்கப் பலம்புரிய நலம்புரியும் வலம்புரிமண் டபத்துத், தூமாரி யெனப்புகலிக் கோவையைமீ னுட்சி சுந்தரப்பேர் மதிவல்லோ னரங்கேற்றி னனே. (உ0)



கணபதிதுணை.

# சீகாழிக்கோவை.

## காப்பு.

*கட்டளைக்கலித்துறை.*

### ஆபத்துக் காத்தவிநாயகர்துதி.

*குருக்காழிக் கோவைகொ லென்றுமை யோடு குலைத்தலைகோ*
*டுருக்காழிக் கோவைச்செ யாபத்துக் காத்த வொருகளிறு*
*தருக்காழிக் கோவை யுரித்தருப் பாயந் தரித்தவர்க்குத்*
*திருக்காழிக் கோவை தனைச்செயுங் கோபஞ் செயாதுவந்தே.* (௧)

### ஆண்டவிநாயகர்துதி.

*தரக்கோவை வாய்விலங் கோசிய மோவெனத் தாயுறுவ [றெண்*
*துரக்கோவை வாளிற் றுணிக்கோவென் றென்முனந் தோன்றிநின்*
*கரக்கோவை யெத்தனை யோகண்ட சீரிற் கமழ்பிரம*
*புரக்கோவை பாடுவிக் குங்காழி யாண்டசெம் போதகமே.* (௨)

### அவையடக்கம்.

*திருகோட்டு மன்பர் திருக்கோவை யார்முனந் தீட்டியதா*
*லிருகோட்டு நீர்முடி யாளர் பிரியரென் றெண்ணிவிண்ணம்*
*பொருகோட்டுக் காப்புக லிக்கோவை பாடப் புகுந்தவனுக்*
*கொருகோட்டு மாவையுள் ளூன்றினன் மேற்படர்ந் தோங்கிடுமே.* (௩)

## கைக்கிளை.

### காட்சி.

*பூமேவு கஞ்சமு மேந்தெழி னீலமும் பூந்தளவு*
*மாமேவு கோங்கமும் பாங்கமர் காந்தளும் வாய்ந்தழிஞர்*
*நாமேவு கொம்பரொன் றுற்றது வானிலை நங்கைபங்கர்*
*தேமேவு கொன்றைச் சடையாளர் காழிச் சிலம்பகத்தே.* (௧)

### ஐயம்.

*வெள்ளாம்ப லான்கொல்செந் தாமரை யான்கொலொண் மேனிகருங்*
*கள்ளாங் குவளையன் ஞன்கொனங் காழிக் கடவுள்வெற்பி*
*னுள்ளா மிவரடி தோய்தவ முன்ன ருஞற்றுலக*
*நள்ளாங் குடிகொண் டரசா டவஞ்செய் நலத்தினனே.* (௨)

### துணிவு.

நாமகண் மாமகள் சேர்காழி நாதர் நகுமியக்
கோமகள் பாகர் விடைப்பாகர் தென்கழுக் குன்றத்தொப்பி
லாமகள் கோதைநம் போல்வா டலினிமை யாடலிற்றுள்
பூமகள் சூடலி னையமின் றுலிவள் பூமகளே. (௩)

### துணிந்தவழி வியத்தல்.

பிறைபு முழுமதி யுங்கருங் கொண்டலும் பெற்றமின்கொ
ணிறையு முனிவர் பெரும்பகை பாற்ற நினைந்துவில்வே
ளுறைபு மெழுலி னமைத்தபொற் கொம்புகொ லொத்துலகோ
ரறையும் புகழ்ச்சண்பை யாண்டகை யார்வரை யாயிழையே. (௪)

### குறிப்பறிதல்.

போர்கால்வெஞ் சூலப் படையார் பிரம புரத்திறைவர்
சீர்கான் முகத்திரு நோக்குள் வலத்துச் செறிகணிய
லோர்கா லெழுமற் றிடக்க ணியலொரு காலெழுமிப்
பார்கால் கொழுந்தனை யாரிரு நோக்குஞ்செய் பார்வையினே. (௫)

### குறிப்பறிந்தவழித் தெய்வத்தை மகிழ்ந்துரைத்தல்.

மேக்குங் கிழக்கும்பொற் குன்றகம் வாழ்நர் விராவவளைத்
தாக்குந் திறத்திற் கழுமலத் தீச ரருட்பெரியர்
போக்கும் படியில் கிளையிற் பிரித்திப் பொலிமினையெற்
றுக்கும் படியளித் தாரவ ரேதெய்வஞ் சத்தியமே (௬)



## இயற்கைப்புணர்ச்சி.



### இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

கல்லா ரலர்முற் றுங் கற்றும்வன் றெண்டரங் கால்பரவை
வில்லார் முலையின் படையப் பிறரடி வீழ்ந்திரந்தார்
செல்லார் பொழிற்பு கலியார் பொதியச் சிலம்பமரிக்
நல்லா ரடியடைந் தேயிரப் பாமின்ப நாம்பெறவே. (௭)

### இரந்துபின்னிலைநிற்றல்.

விண்பர வாதிப் பிரான்றிருத் தோணிமுன் மேவிமிக்க
தண்பர ஞான வமுதமும் வாங்குந் தரமுடையே
னெண்பர வாயநுஞ் செவ்வா யமுதமின் னேயிரந்தேன்
பண்பர வாய மொழியிர் மதிர்பழி பற்றிடவே. (௮)

### முன்னிலையாக்கல்.

நாகங் கருதுஞ் சிரபுரத் தீசர் நகுவளைவாய்க்
கோகங் கருது முலையிர்நல் லாயக் குழுவினகன்
றேகங் கருதிச் சுனையாட லாதிய வின்றிநின்றீர்
யோகங் கருதியென் றேநினைத் தேன்சொன்மி னுண்மையையே. (௯)

### வண்டோச்சி மருங்கணைதல்.

மோதுந் திரைக்கடற் காழிப் பிரான்வரை பொய்த்தவண்மர்
யாதும் பெயர்பொய்ம்மை யேயளி யென்றறைந் ரிளிறெடு
தீதும் படவிடை கூந்தலிற் பாய்ந்து சிலீமுகமென்
றோதும் பெயர்மெய்செய் தீரிவர் பாலிங்கொ தொத்தகன்றே. (௧௦)

### மெய்தொட்டுப் பயிறல்.

எய்தவஞ் செய்கழல் காணெனுங் காழி யிறைவர்வெற்பின்
மெய்தவஞ் செய்த மனமே முகமு மிளிர்புயமு
மைதவஞ் செய்தடை கண்ணார்பொற் றோளும் வருடநந்தங்
கைதவஞ் செய்தநுண் டில்லையென் றாலது கைதவமே. (௧௧)

### பொய்பாராட்டல்.

வார்க்குங் குமமுலை யாணிலை யாளமர் வாமத்தர்நீ
ரார்க்குஞ் சடையர்தென் காழியன் னீர்நும் மலர்த்தொடையல்
போர்க்குங் குழற்கிணை யாமா கருதிப் புயல்கறுத்துப்
பார்க்குமொவ் வாமை விளர்க்குமிவ் வாறு பயின்றிடுமே. (௧௨)

### இடம்பெற்றுத் தழால்.

எண்ணார் புரஞ்செற்ற வல்லார்வில் லார்பொரான் னெயிற்புகலிக்
கண்ணார் சிராமலை வாயெவ ருங்கல வாதவண்டின்
பண்ணா ரிளமரக் காவுண்டு மாதவிப் பந்தருண்டு
தண்ணா ரிலவர்கட் கடையரு ளுண்டு தழுவுவமே. (௧௩)

### வழிபாடுமறுத்தல்.

விண்ணியன் மாமதி வேய்ந்தார் கழுமல வித்தகர்தந்
தண்ணியன் மால்வரை வாய்விரை வாய்மலர்த் தண்கொடியே
பெண்ணிய லென்று வடநூலி னுமம் பெறுமிலச்சை
கண்ணிய லாமெனக் கீழ்த்தொழி யாதின்று காத்தருளே. (௧௪)

### இடையூறுகிளத்தல்.

ஞாலம் பொலியப் பொலிகாழி நாதர் நறுமலர்க்கைச்
சூலம் பொலியக்கொள் வார்பவர் வேணிச் சுடர்மதிபோற்
பாலம் பொலியநிற் பீர்மிசை யேயன்றிப் பாணியுள்ளா
னீலம் பொலியவைத் தீர்தகு மோவென் னிலைகண்டுமே. (௧௫)

### நீடுநினைந்திரங்கல்.

அருளாற் பரமர் புகலியிற் பாலுண்ட வையர்தென்னற்
கருளாற் புகுத்திய நோயவ ரேயொழித் தாங்கிவரெற்
கருளாற் புகுத்திய நோயிவ ரேதெற லன்றிமற்றோ
ரருளாற் புகன்மந் திரமாதி யாளெழி யாததுவே. (கரு)

### மறுத்தெதிர்கோடல்.

பேரியல் வையைப் பெருக்கன்பர் காமப் பெருக்கதனுட்
சீரிய லன்பர் விடுமேடு போலச்செல் லாதமணர்
காரிய லேட்டிற் கழிந்தது நாணங் கனாவதென்னே
யாரியல் செஞ்சடை யார்காழி நாத ரருளிதுவே. (கஎ)

### வறிதுநகைதோற்றல்.

பொருந்தும் பரவை புலவியிற் றேம்பும் புலவர்முனஞ்
சருந்தும் பிரான்முளைத் தாலெனக் காழி யணிவளைவாய்
வருந்துந் தலைவன் றடுமாற்றந் தீர வறிதுநகை
முருந்து நிகர்நகை யார்செய்ய வாயின் முளைத்ததுவே. (கஅ)

### முறுவற்குறிப் புணர்தல்.

அடியார் குறித்த தருள்காழி நாதர்வெள் ளானுயர்த்த
கொடியார் புரிந்த குறுநகை முப்புரங் கொன்றதிடைத்
துடியார் புரிந்த குறுநகை யென்னையென் றோல்குலத்து
நெடியார் பலரை யுயச்செய்த தீது நிகரரிதே. (கசு)

### முயங்குதலுறுத்தல்.

ஆடிய பாதர் பிரம புரேச ரருளனையார்
கூடிய மாமுலை பற்றி நிதம்பங் குடைந்துதுவர்
நீடிய வாயமு துண்டாம் வரைபற்றி நேமிகுடைந்
தோடிய வாரமு துண்டார்கொ லோநமை யொப்பவரே. (உ0)

### புணர்ச்சியின் மகிழ்தல்.

தண்ணொளி தேயன்பர் மேலிக் கலப்பத் தனையருளு
மெண்ணொளி காழிப் பிரானெனத் தன்னை யிகழ்றெறுமைத்
கண்ணொளி யாதுங் கருதா தளிக்கக் கலந்தனம்யாம்
விண்ணொளி யாரண ஞாணன் போகமும் வேண்டிலமே. (உக)

### புகழ்தல்.

தண்டா ரரவர் சிரபுரத் தீசர் தனிவிழிபோன்
மண்டா ரழற்சுரம் போய்வெயில் வாய்நின்று வாடித்தவ
மெண்டா ரணிவியப் பப்புரிந் தாலு மெனையடிமை
கொண்டார் வனமுலை போலுவ ரோசொலுங் கோங்கங்களே. (உஉ)

### ஏற்புறவணிதல்.

*சேலிற் பிறழ்விழிக் கஞ்சனந் தீட்டித் திகழ்தொடையைப்*
*பாலிற் புனைந்து முலைமேற் கலன்கள் பலதிருத்தி*
*மாலிற் பொலியொரு பாலார்தென் காழியில் வண்சிலம்பு*
*காலிற் புனையவுங் கற்றன வாநங் கரதலமே.* (உ௩)

## வன்புறை.

### அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல்.

*மறிவா ளனையகண் ணைய்பரன் காழி மணிவரைவா*
*யெறிவா ளுடைக்கல மெல்லாநின் றோழியி னின்றணிந்தேன்*
*குறிவா ளுடையக் கலம்வாய் படைத்துண்மை கூறிடுமே*
*லறிவா ளஃதுள்ளி யுட்கொள்ள ளுணமு மச்சமுமே.* (உ௪)

### பெருநயப்புரைத்தல்.

*நலரா யினரன்றி வேதா கமநன் னடைபிறழுங்*
*கலரா யினரணு காப்பாழி யார்புகழ்க் காழியின்வாய்ப்*
*புலரா விளம்பொழில் சூழ்வாவி வாயொண் பொறிவண்டுகாண்*
*மலரா வரும்புங் குவியா மலருங்கொள் வல்லியுண்டே.* (உ௫)

### தெய்வத்திறம்பேசல்.

*துருவின மாலுக் கரியர் பெரியர்வண் டோணிபுரத்*
*திருவின பற்றுடை யார்விடை யார்த மிலங்கருளா*
*லுருவின ராய முருகனும் வள்ளியு மொப்பெனயா*
*மருவின மாலிலி திபாரிடை நீக்கும் வலியினரே.* (உ௬)

### பருவரலுணர்தல்.

*மயலா ரெனக்கு மலமாயை கன்ம மடித்தருளு*
*மியலா ரமலை பயலார்தென் காழி யிளங்கொடியே*
*புயலார் பொழில்கம் பாணிக் துறையிற் புகுந்தமரு*
*மயலா ருணரவுங் கூடுமென் றேவின் றழுங்குவதே.* (உ௭)

### பிரிவச்சம்.

*நில்லா துயிர்பிரிந் தாற்கணப் போழ்துமிந் நேரிழைக்குச்*
*செல்லாது பாணித் திருப்புரிச் சோலையிற் செய்வதென்பா*
*மல்லார் களத்தன் புகலிப் பிரான்பிரி வஞ்சியன்றே*
*வல்லார் முலைநிலை மாதோடு மொற்றித்து வாழ்கின்றதே.* (உ௮)

### இன்றியமையாமை எடுத்துரைத்தல்.

புகலும் படிபுகல் வார்புக லாய புகலியுள்ளான்
மிகலுங் குறைவுமில் லானருள் சாரினு மீன்கரையோ
டிகலும் புனலை யகலினெனத் தன்மைத் தியலுகினே
யகலும் படியுறி னற்றென தாருயி ராரணங்கே. (உசு)

### பிரியேனென்றல்.

வரியேன் மதர்விழிச் சங்கிலி காண மகிழடியிற்
பிரியேனென் றோதிப் பிரிந்தவன் றொண்டர்முன் பெற்றதையான்
றெரியே னலேன்வண் புகலியன் வீர்நுமைப் பிரிந்துமுயிர்
தரியேன் பிரியே னெனச்சட்டை நாதர்முன் சாற்றுவனே. (௩௦)

### பிரிந்துவருகேன்றல்.

இருந்துமுன் சங்கத் தருந்தமி ழாய்ந்த விறைகடனஞ்
சருந்துமுன் னோன்றிருக் காழியன் வீரரும் புஞ்சரும்புந்
திருந்துமுன் றோன்றும் பொழிலைத் தேகிநுஞ் சேற்கணிமை
பொருந்துமுன் வந்து புகுவே னகுமிப் புனத்தகத்தே. (௩க)

### இடமணித்தேன்றல்.

கயலம ருங்கொடி யானை முனிந்து கனிந்துமெய்யிற்
பயலமர் வாட்புணர்ந் தாருணர்ந் தார்சண்பைப் பாங்குறுமென்
வயலமர் வஞ்சிநின் குன்றம ரானே மருவுபயி
லியலமர் நின்னொடு மென்னொடு மாறுபட் டென்னமின்னே. (௩உ)

---

## தெளிவு.

---

குழைதரு காத ருழைதரு கையர் குலவுகரு
மழைதரு கண்டர் தழைதரு காழியில் வாழ்க்கைபெற்ற
பிழைதரு தன்மையில் யாவருங் கூற்றம் பிழைப்பரென்பார்
விழைதரு தன்மையி லாக்கொலைக் கூற்றத்தின் மேற்றுண்மையே. ()

---

## பிரிவுழிமகிழ்ச்சி.

---

### செல்லுங்கிழத்திசெலவு கண்டு உளத்தொடு சொல்லல்.

காணு மரபின தாலுயி ரென்று கரைதருவார்
நாணு மரபின ரென்னுயிர் காணு நலத்தினதாய்க்
கோணு வருளொடு செல்லுதல் பார்களி கூர்மனமே
மாணு வெனக்கு மருள்காழி நாதர்பொன் மால்வரைக்கே. (௩௩)

### பாகனோடு சொல்லல்.

அற்றே மலர்க்குழ லோர்கைபின் றாங்க வவிழ்ந்தகலை
சிற்றே ரிடையி லொருகைமுன் றாங்கச் சிலம்பொலிக்கப்
பற்றே யிலார்தம் பரன்காழி வாயருட் பார்வையென்மே
லுற்றே நடப்பது பார்வலை வாவென் னுயிர்த்துணையே. (ரு௫)

## பிரிவுழிக்கலங்கல்.

### ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோவென்றல்.

தீயிடை யாடும் பரமர் தமக்குந் திருநிலைக்குஞ்
சேயிடை மேவப் பொலிவார்தென் காழிச் சிலம்பின்மெலிந்
தோயிடை யாரிவர் மாண்பின்ன தேன்மகிழ் வுற்றிவளை
யாயிடை மேவி யதுநன வோகன வாயதுவே. (ரு௬)

### நெஞ்சொடுகிளத்தல்.

இலம்பாடு ளார்பெருஞ் செல்வர்தம் வாழ்வெய்த வெண்ணுவதி
னலம்பாடு மேவுங்கொல் காழிப் பிரான்பொன் னருவரைவாய்
நிலம்பாடு மாதவஞ் செய்திலம் யாநெஞ்ச மேயினிச்சஞ்
சலம்பாடு கோடு மெளியர் கொலோவிந்தத் தையலரே. (ரு௭)

### வாயில்பெற்றுய்தல்.

வேண்டா ருறவென்றும் வேண்டா ரரிக்கும் விரிஞ்சனுக்கு
நீண்டார் தலைக்கலம் பூண்டார்தென் காழி நெடுவரைப்பான்
மூண்டார் மயற்கு மருந்துணர்ந் தாமுனி யாதுநம்மை
யாண்டார்கண் மாறொரு மாதர்கட் பார்வை யவாவியதே. (ரு௮)

### பண்புபாராட்டல்.

கலரா யினரணு காக்காழி யார்வரைக் காரிகையார்
புலரா முகத்தை மலரினொவ் வாயம் புணர்முலையை
யுலரா தரும்பினொவ் வாய்விதி யாயு ளுளவரைக்கு
மலரா திருமற் றலரெனக் காவதெ னம்புயமே. (ரு௯)

### பயந்தோர்ப்பழிச்சல்.

கழிபடு வெண்டலை மாலையன் காழிக் கடவுள்வெற்பின்
மொழிபடு நான்முக னுயுள் வடதிசை மூர்த்திசெல்வம்
விழிபடு மேனியன் போகமிம் மூன்றும் விராயெனக்கோர்
வழிபடு தெய்வந்தந் தார்நீடு வாழ்கவிம் மாநிலத்தே. (௬0)

### கண்படைபெறாது கங்குனோதல்.

அனம்போ லியங்கு மணங்கனை யாரிடத் தாய்துயிலென்
மனம்போ லடைந்தது மீண்டில தானெடு வானமுய்யக்
கனம்போ லிருண்ட களத்தார்தென் காழியிற் கங்குலொரு
வனம்போல் வளைவுற்ற தம்புலி வெம்புலி மானுவதே. (சக)

## இடந்தலைப்பாடு.

### தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

வன்றந்த யானை யுரித்தார் புகலிவல் லாரருளா
லென்றந்த காரமெஞ் ஞான்றுங் கெடுத்தொளி யேகொடுக்குந்
துன்றந்த வாயத்தி னீக்கிநம் மாவித் துணைபுணர
முன்றந்த தெய்வமின் னுந்தருஞ் சேறுமம் மொய்ம்பொழிற்கே. (சஉ)

### தலைவன் நெஞ்சோடுவினாதல்.

வானோக்கி நிற்கு மயில்போற் பொழிலை மருவியெனைத்
தானோக்கி நிற்குங்கொ லோருங்கொ லாயத்திற் சாருங்கொலோ
மீனோக்கி பாகர் விடைப்பாகர் காழி விமலரருண்
மானோக்கி யின்னளென் றியானுண ரேன்புகல் வாழிநெஞ்சே. (சங)

### அவளமரிடம் அவளாகக்கூறல்.

பொன்னா ரிளந்தளிர் மேனியு நீன்மணிப் பூங்குழலு
மன்னார் பசுங்கழைத் தோளுங் குவட்டு வனமுலையு
மின்னார்செங் காந்தட்கை யும்மையர் வெங்குரு வெற்பமைந்தீங்
கென்னா ருயிரனை யார்போன்று தோன்று மிதுவியப்பே. (சச)

### மன்னனை நினைந்து மின்னிடைமெலிதல்.

என்னிரு கண்ணனை யாயக லேனென் றிசைத்தகன்று
மின்னிரு தோளிங் கெய்துவ ரோதமர் வெள்ளமிகத்
துன்னிருஞ் சாரவ ணெய்துவ ரோவென்ன சூழுவரோ
பன்னிரு நாமப் பதிச்சட்டை நாதர் பழுமலைக்கே. (சரு)

### முந்துறக் காண்டல்.

பொன்னே வெனுஞ்சடை யார்காழி நாதர்செம் பொன்வரைவாய்த்
தன்னேடொன் றுமெனை யல்லாது வேறொன்று தான்புகுதற்
கன்னே கொடாவகத் தோடெங்கும் வீசி யவிரொளிபி
தென்னே வெனவுற்ற தென்முடி மாணிக்க மின்றுவந்தே. (சசு)

### தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தல்.

ஒருவரு மின்றி யசோகடி மேவினர் யோகியரே
பொருவரு நீர்மை யிவரொரு நால்வர் புடைவளைப்ப
மருவரு மாலடி மேவு படாத வளம்படுவெங்
குருவரு யோகியின் மிக்கா ரிவர்க்குக்கை கூப்புதுமே. (சஎ)

### முயங்கல்.

பெருமான் புகலிக் கவுணியர் முன்னம் பெருமணஞ்சார்ந்
தொருமான் கரம்பற்றி யுற்றவின் பேயிதற் கொப்பெனவித்
திருமான் கரம்பற்றிச் சேராப் பெருமணஞ் சேர்ந்துறமே
வருமான வின்பமுற் றேனிது வேபெரு வாழ்வெனக்கே. (சஅ)

### புகழ்தல்.

பாவியல் சீர்த்திப் புகலிப் பிரான்பொற் பரங்குன்றின்வாய்த்
தேவியன் மேனித் திருவே திரிநேத் திரம்படைத்து
மேவிய தொத்தது கொல்லோநின் கொங்கைக்கு மேலெழுந்து
தாவிய தாயெப் படிவரி னும்பந்து தானுமற்றே. (சகூ)

### உடன்புணராயத்துய்த்தல்.

கதிர்நோக்கி நிற்குங் கமலத்தில் வானங் கலந்தகொண்மூ
வதிர்நோக்கி நிற்கு மயிலிற்றென் காழி யமலைருண்
முதிர்நோக்கி நிற்குமெய் யன்பரி னீவரன் முன்னியதற்
கெதிர்நோக்கி நிற்குநின் னாயத்துண் மெல்ல வெழுந்தருளே. (௫௦)



## பாங்கற்கூட்டம்.



### தலைவன் பாங்கனைச் சார்தல்.

பற்றா வெனக்கு மருள்காழி மேய பரமர்திருக்
குற்றால மன்னசெவ் வாய்வெண் ணகைக்கருங் கூந்தன்மின்னார்
முற்றா முலையின் படையத் தடையென் முழுக்கலையுங்
கற்றா னொருமறை யோனுள னென்மிகு காதலனே. (௫௧)

### பாங்கன் தலைவனை உற்றது வினாதல்.

கண்கொண் டவிர்நுதற் காழிப் பிரான்பொற் கயிலைவெற்பா
மண்கொண் டடங்கலர்க் கீந்தனை யோவிண், மணிபொன்முத
லெண்கொண் டவைகொண் டுயிரீந் தனைகொ லெறும்கனிந்து
திண்கொண்ட நின்புயம் வாடுதற் கேதுவென் செப்புகவே. (௫௨)

### தலைவன் உற்றதுரைத்தல்.

நிலைமுழு துங்கெடு நாளய ஞாதி நெடும்புலவர்
தலைமுழு துந்தரிப் போன்காழி நாதன் றமிழ்வரையோர்
கொலைமுழு துஞ்செய்கண் ணுண்முக மாய குரூஉமதிக்கென்
கலைமுழு துங்கொடுத் தேனடுத் தேனிணைக் காதலனே. (௫௩)

### பாங்கனை நின்குறையாக இது முடிக்கவேண்டுமென்றல்.

மயில்கா யியலின டுந்தவெங் காமம் வரப்பொருவி
வெயில்கா யறைவெண்ணெய் போலப் பரந்தது மேனியெங்கு
மெயில்காய் நகையர் தகையர் புகலி யிறைவர்வெற்பிற்
குயில்கா யெழிலியி னீகாயின் மாயுமக் கோளினதே. (௫௪)

### கற்றறிபாங்கன் கழறல்.

கரும்பைச் சிலைசெய்த காம னெரியக் கனல்விழித்தா
ரரும்பைப் பொருமுள் ளடையார்தென் காழி யடையலர்போற்
றுரும்பைப் பொருள்செய்து வாடுநின் றோட்பெருந் தூணமென்று
விரும்பைச் சிதல்சென் றரிக்குமண் ணுனிற் கிதுதகுமே. (௫௫)

### கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

பண்பார் திருவெழு கூற்றிருக் கைப்பதிப் பற்றுடையார்
நண்பா ரருளி னெ [illegible]க்ககப் பட்ட நறுநுதலை
விண்பாரின் மிச் [illegible] றெலன பேசுர் விளங்கிழையைக்
கண்பாரப் ப[illegible]னா யாடுவ யாவுமென் காதுறுமே. (௫௬)

### [illegible]வோன் பாங்கனை ஆண்டுச்செல்லவேண்டுமென்றல்.

நன்று லடியுடை வார்ப்பிறை வார்சடை நம்பர்செம்பொற்
குன்று லமைத்த மதிற்காழி யார்கொடுங் குன்றகநீ
சென்றானண் பாசென் றனுமனி ராகவன் சிந்தைத்துயர்
கொன்று லெனவென் மனத்துயர் யாவையுங் கொல்லுவையே. (௫௭)

### கிழவோற்பழித்தல்.

வண்மையு ளோன்றன துண்மை விராவ வினிதருளுந்
தண்மையு ளான்கொச்சை யாளியண் ணுமலைச் சாரலினோர்
பெண்மைகண் டாண்மை யுடைந்ததென் றுய்பிற ருக்குணர்த்தும்
வண்மையெங் கேமனத் திண்மையெங் கேயெங்கண் மன்னவனே. ()

### கிழவோன் வேட்கை தாங்கற்கருமைசாற்றல்.

இரியாவெப் பாளரைச் சூழ்வெந் தீயிட் டெரிந்ததென
வரியா வுகைக்கும் புகலிப் பிரானரு ளாயமின்செய்
பிரியா வுளர்பெரு கப்பேச வாயென் பிறதுயர்க்குத்
தரியாநின் மேற்குற்றம் யாதுநண் பாவென் றலையெழுத்தே. (௫௯)

### பாங்கன் தன்மனத்தழுங்கல்.

படியே பொலியப் பொலிதொண்டை நாட்டிற் படர்ந்தமுல்லைக்
கொடியே குறிஞ்சிக் கொடிபிறி தாய கொடியெனிற் பொன்
முடியே புனையுங் களிறுகட் டுண்ணுங்கொன் மொய்த்துவண்டு
குடியே கொளுங்கொன்றை யான்காழி வாயென் கொடுவினையே. ()

### தலைவனுடழுங்கல்.

வெங்கூற்ற மாய்க்கும் விறற்காழி நாதர்பொன் மேருவின்வாய்
மங்கூற்றந் தீர்பெரு மானீ யொருசிறு மான்பொருட்டென்
சங்கூற்ற முற்றுங் கருங்கூற்றஞ் செப்பிலென் செய்குவல்யான்
பொங்கூற்ற வாழி புரண்டாலெங் கேகளா போகடலே. (சுக)

### எவ்விடத் தெவ்வியற்றென்றல்.

நளையோ விலாவலி யேமிரு வேமிது கட்டுளைகா
ணளையோ திமனுண ராமுடி யார்சண்பை நாடனைய
விளையோ வருங்குழ லாளியல் யாதவண் மேவிடம்பொன்
வளையோ திளையோ வுளையோ கருட்புகழ் மன்னவனே. (சுஉ)

### அவன் அஃது இவ்விடத்து இவ்வியற்றென்றல்.

ஒருபா லுமையினர் தென்காழி மால்வரை யோர்மூலைக்குத்
தருபால்பொற் றுள மொழிமுலை யானத் தரளநகை
பொருபா லிளாதசெர் பொன்மேனி வெற்றி பொலிவியலோ
ரிருபான் முகிறவீ ழவ்வளா யேயிட மென்னுயிர்க்கே. (சுங)

### பாங்கன் இறைவனைத்தேற்றல்.

கலங்காரி னுள்ளங் கலங்கக் கலக்குங் கருங்குயிலை
மலங்காய் பவளா விலங்கான் புகலி மணிவளைசார்ந்
துலங்கா முறுபயத் தாய்கண்டு மீள்வ னுறையிவணின்
விலங்காத துன்பந் தனக்கு மெனக்கும் விடைகொடுத்தே. (சுச)

### தறிவழிச் சேறல்.

நலஞ்சாரன் பாளரொ டென்னையுஞ் சேர்த்தரு ணம்பன்முகிற்
குலஞ்சார் புகலி வளாவாய் முளைத்த கொடியெனத்தா
ணிலஞ்சார் தாரிற்கு மோவண்ட லாட்டி னிகழுறுமோ
பலஞ்சார்நங் கோனு ளழலரக் காக்கிய வாணுதலே. (சுரு)

### தலைவியுருவு வெளிப்பட்டமைகண்டு தலைவன்கூறல்.

ரய்மா றிலாத்தென்னங் காச்சண்பை யார்வளாக் கண்முகின்மேற்
மா புலைமத மாவல்குற் றேர்நுதற் பாரவில்கண்
றய்மா வடுவம்புங் கொண்டெங்குந் தோன்றுமென் னுருயிர்மால்
சய்மார னென்னைக் கழுப்பது நோக்கிச் சிவப்பதொத்தே. (சுசு)

### காணுங்கொலோவெனத் தலைவன் ஐயுற்றிரங்கல்.

விண்டா னெனப்பொளி வேணு புரேசர் வியன்சிலம்பிற்
பண்டானன் பாகி யவனென் னருமைப் பசுங்கிளியைக்
கண்டான்கொ லோவவட் காணுது தேடிக் கழியவலங்
கொண்டான்கொ லோவறி யேன்குறி யேனென் றுங் கோளுறவே. ( )

### இறைவியைக் காண்டல்.

சேவே கொடியமைத் தார்காழி வாணர் சிலம்பிதுவே
காவே குழலுழ லேவே விழிநறுங் காமர்கஞ்சப்
பூவே முகமத மாவே முலையிப் புனையிழையே
யாவே நிகர்வண்மை யான்சொற்ற மாதிதற் கையமின்றே. (௬அ)

### பாங்கன் இறைவியை எளிதிற்காட்டியதெய்வத்தை வணங்கல்.

உன்னும் பெருந்திருக் கோனுமற் றியானுமின் றய்யும்வண்ண
மின்னுங் கொடியிடை யாளைத் தமர்நின் றும் வேறுசெய்து
துன்னும் பொழிலி லெளிதுறக் காட்டிய தொல்புகலி
மன்னுங் கடவுளை யேதொழு வேனென் றும் வாழ்த்தல்செய்தே. ( )

### பாங்கன் இகழ்ந்ததற்கிரங்கல்.

எண்ணுது கூற விழுக்கெனன் மெய்ம்மை யெடுத்தமிர்த
முண்ணுது நஞ்சுண்ட வன்காழி யன்னவ ளொண்குணமு
மண்ணு தொளிர்மணிப் பூணு னுட் காதலும் வன்பொறையுங்
கண்ணுதி யானிகழ்ந் தேபெரும் பாவங் கவர்ந்தனனே. (எ0)

### தலைவனைவியத்தல்.

ஊரைக் கடக்கு நகையானி லேதி யொருவிநெடு
நீரைக் கடக்கு மதிற்காழி யன்னவிந் நேரிழையார்
சீரைக் கடக்கு முலையானை யுரமிடைச் சிங்கமுஞ்செய்
போரைக் கடக்குநம் மண்ணலை யாவர் பொருவுவரே. (எக)

### தலைவியைவியத்தல்.

மறியா ரிடத்தர் புகலி வலத்தர் மணிவரைவாய்ப்
பொறியா ரசோகநன் னீழல்வன் பூவின்மென் பூவடிவைத்
தறியாரி னிற்பர்நங் கோமகன் சோக மகற்றியவன்
குறியா ரிதய கமலால யங்குடி கொள்பவரே. (எ௨)

### தலைவன்றனைத்துத் தலைவிநிலைகூறல்

நில்வா தவனழல் கண்செய்த கோனிறை நீர்ப்புகலி
வல்வா தரவரை வாயண்ண லேயெழில் வாய்ந்தொளிரோ
ருல்வாத வல்லி யொருகொம்பர் நோக்கி யொருவர்வந்து
கலவாத சோலைக் கடைத்தனி யேநிற்கக் கண்டனனே. (எ௩)

### தலைவி தலைவன்வருங்கோல்லோவென நினைத்தல்.

உடையும் படியுள் ளுருகுநர் பால்வின் னுளரொருங்கு
மிடையும் படியடை வேணுபு ரேசர் விழையவளர்
குடையும் படிமெலி வேன்பா லுவகைக் குலங்குடிகொண்
டடையும் படியின் றடைவர்கொ லோவென்னை யாள்பவரே. (எச)

### தலைவன்சேறல்.

மன்றாடு மையர் கழுமலத் தீசர் மணிவரைவாய்
நின்றாடு மாயத் தொடுகலந் தாடுங்கொ னேயத்தொடு
கன்றாடு மங்கை திருமுகந் தாங்கக் கருதிவெய்பங்
கொன்றாடு சோலையி னிற்குங்கொ லோவென் குலதெய்வமே. (எரு)

### தலைவன் தலைவியைக் காண்டல்.

விறலெதிர் தோட்சண்டை யாரமு தோடன்பர் மேவுமுன்மீ
னறலெதிர் வண்குரு காவூரில் வந்துநின் றுங்குவில்வே
டிறலெதிர் வாயமு தோடிப் பொழில்யான் செறியுமுனென்
னுறலெதிர் நோக்கிநின் றூரென்னை யாளு மொருவர்வந்தே. (எசு)

### தலைவியின் மகிழ்தல்.

அம்பல வாணர் கழுமலத் தீச ரருள்வலியா
னம்பல மாவிவர் தோள்சேர்ந்து நின் பேயுற்ற நந்தமக்கு
வம்பலர் கூந்தலொவ் வோர்மாதர் தோள்கண் மருவித்துன்பே
தம்பல மாக்கொண்ட மாலைய னிந்திரன் றாழ்ந்தவரோ. (எஎ)

### பாங்கனை உண்மகிழ்ந்துரைத்தல்.

ஒருசா னடந்தென் வருத்தந் தணித்த வொருவன்முன
மிருகா னடந்துதன் றோழன் வருத்த மிரித்தபெருங்
குருகான் மலைப்புனற் கொச்சைப் பிரானிற் குலவுநல்லோ
னருகா வெனாட் பெருமையு மோங்க வளியனுக்கே. (எஅ)

### புகழ்தல்.

மறையே புகலும் புகலிப் பிரான்பொன் மணிமுடிமேற்
குறையே யறத்தண் டுறையே முழுகிக் குடிகொளினும்
பிறையேபொப் பாவைகொல் லோவென்னை யாண்ட பிறழ்நெடுங்கண்
ணறையே கமழ்குழ லாணீறு பூசு நறுநுதலே. (எகூ)

### தலைவியைப் பாங்கியோடுவருகெனப்பகர்தல்.

அமையாளந் தோளணங் கேமணங் கேழிவ் வலர்பொழில்வாய்
நமையா ளுறவ னறவன் புறவ னகுமருளா
முமையா ளொடுமொண் கமையாள் பவர்மு னுறலினினி
யிமையாள்கண் போனின் னிகுலையொ டென்மு னெழுந்தருளே. ()

### பாங்கிற்கூட்டல்.

உடுவே யனபன் மணிநாப்ப ணுணிமுத் தூற்றதெனக்
கடுவே பொலிகளத் தான்காழி நாதன் கயிலைவெற்பிற்
கொடுவே தனைகொடு நோக்குநின் னையக் குழைநடுவே
நடுவே யிலாயுறு வாய்தகப் பாத நகப்பெயர்த்தே. (அக)

## பாங்கி மதியுடன்பாடு.

### நாற்றத்தான் ஐயமுற்றோர்தல்.

அலையும் புனற்சடை யார்விடை யாரடை யார்புரங்கள்
குலையும் படியெய் தவர்பவர் வாழ்வெங் குருவரையான்
முலையுங் குழலும் புழுகுந் தொடையு முயங்கிமுன
மலையுங் கடியை மலையும் புதுக்கடி வாய்ந்தனவே. (அஉ)

### தோற்றத்தான் ஐயமுற்றோர்தல்.

ஆளும் பரமர் பிரம புரேசர்மன் றுடைமையர்
நீளுந் திருவளா வாய்வெள்ளை நோக்கின்றி நேர்ந்தவற்றைக்
கீளுங் கருங்கடங் கண்ணுந் துணைத்துமெல் கிப்பணைந்த
தோளுங் கனதன முங்காட்டு மானலந் தோகைக்கின்றே. (அங)

### ஒழுக்கத்தான் ஐயமுற்றோர்தல்.

கோடாண் முகன்சுகன் றந்தைதென் காழி குலவுபொன்னி
நாடா ணறும்புன லாடாள் பறித்து நறுமலருஞ்
சூடாள் குறிஞ்சியும் பாடா ளசும்பு சுடர்மணிப்பந்
தாடாள்பொன் னூசலு மாடாளென் னேவிளைட் காயதுவே. (அச)

### உண்டியான் ஐயமுற்றோர்தல்.

விண்ணு ரமுதமுன் வைத்துண்க மாவென்று வேண்டினுந்தீக்
கண்ணார் கழைமலைத் தாருண வென்று கழித்துமற்றோன்
றெண்ணார் கொடிய விரதங்கொண் டாரி னிரிவளிந்தப்
பண்ணார் மொழிமட வாளெண்ணம் யாதென்ன பாவமிதே. (அரு)

### செய்வினைமறைப்பான் ஐயமுற்றோர்தல்.

பனியே படுவரை மங்கைபங் காளன் பரவுமறை
நுனியே யமரும் பிரான்காழி சூழ்ந்த நுவலருந்தீங்
கனியேய் பொழிலிற் றனியே பயிலவுங் கற்றனள
வனியேக மென்னு நமையு மறைத்திம் மடமயிலே. (அசு)

### சேலவுகண்டு ஐயமுற்றோர்தல்.

வல்லிட பக்கொடி யாளன் பவப்பகை மாய்ப்பதற்கு
நல்லிட மாய புகலிப் பிரானுண்மை நன்குணர்ந்தார்
செல்லிட மோபல் லிடமொழித் தோரிடஞ் சென்றுநிற்பாள்
சொல்லிட வேண்டுங்கொ லோவுளத் தொன்றுண்டு தூமொழிக்கே.( )

### பயில்வான் ஐயமுற்றோர்தல்.

வலைத்தலை மானன்ன கண்ணாள் செவிலி மடித்தலையொண்
முலைத்தலை நீத்துத் துயிலொணாற் றாய்முழு முத்தமுலை
யலைத்தலை கொண்டெழு பாலன்றி யுண்டறி யாள்புகலி
மலைத்தலை யானிற் றனிபயில் வாளிவண் மாண்புநன்றே. (௮௮)

### அவ்வகைதன்னான்ஐயந்தீர்தல்.

பற்றார் கதியர் திருபாலை மாற்றுப் பதியர்மறை
சொற்றார்பொற் றோணி வரைவாய்விற் றோணி சுடர்முகத்துப்
பெற்றார் பணமுங் குணமு முறவும் பிறவுமிவற்கே
குற்றா ரொருவ ருளராயி னாரென் றுணர்த்திடுமே. (௮௯)

### பிறைதொழுகென்றல்.

ஆலங் குடிகொண் மிடற்றார் கழுமலத் தையர்செய்ய
சீலங் குடிகொள் செழும்பொன்னி நாட்டிற் சிறுபிறைகண்
டேலங் குடிகொள் குழலாய் குவியுமெத் தாமரையுங்
கோலங் குடிகொணின் கைத்தா மரைகுவி யாமையென்னே. (௯௦)

### கரந்துரைத்தல்.

பொன்னிழல் செஞ்சடை யார்தோணி மேய பொருப்புடையா
ரன்னிழல் கண்ட ரருள்போற் குளிர்ந்தொளி ரப்பொழில்வாய்
நன்னிழ லின்பக் தருந்தரு வொன்றைநண் ணமையினே
மின்னிழல் பூண்மட வாய்திரு மேனி மெலிவதுவே. (௯௧)

### கரவுநாட்டம்.

கருநீலஞ் செம்ப வளஞ்செய்து காமரு செப்பவள
மருநீல வார்குழல் வெண்முத்தஞ் செய்து வயங்குவது
திருநீல கண்டர் திருத்தோணி மால்வரைத் தேத்தளிசால்
குருநீல வாழ்சுனை யேலடி யேன்களி கூருவனே. (௯௨)

### சுனைநயப்புரைத்தல்.

விண்ணப்ப பொன்றெம் பெருமாட்டி நின்றிரு மேனியெல்லாம்
வண்ணப்ப சும்பொற் றுகளப்பி மாமுலை மான்மதச்சாந்
தெண்ணப்ப ரப்பிடு மேலடி யோமுமெய் திக்குடைவோங்
கண்ணப்பர் கோனம ருந்தோணி மால்வரைக் கட்சுனையே. (௯௩)

### கூனைவியந்துரைத்தல்.

வளமுலை யாத புகலிப் பிரான்வெள்ளி மால்வரைவாய்த்
தளமுலை யாத மலர்ச்சுனை கூந்தற்குத் தாழ்தொடையு
முளமுலை யாதெழு வேயடு தோளுக் குறுபுழுகு
மிளமுலை யார்க்கன்பி னல்கிடு மேலைதை யாதொக்குமே. (கூச)

### தகையணங்குறுத்தல்.

மலைமீது தோணி யுறைவார்குற் றாலை வரைத்தலைமே
கலைமீது பூணல்குல் வான்மக ளோநின் கலப்புநன்று
முலைமீது முத்தவெங் கோமாட் டியுமிவண் முன்னியுறு
மலைமீது வல்லிக ளென்னவொழ் நீர்சுனை யாடுவிரே. (கூரு)

### நடுங்கநாட்டம்.

அங்கோட்டு வார்சிலை வாணுத லாணிலை யம்மைக்கொரு
பங்கோட்டு வார்பெரும் திருத்தோணி மால்வரைப் பாற்பயிலுஞ்
சங்கோட்டு கந்தர சுந்தர மேயென்ன சாற்றுவலோர்
செங்கோட்டு யானைமுன் வேலெறிந் தாரொரு சேவகரே. (கூசு)

### பெட்டவாயில் பெற்றுச்சேறல்.

ஒன்றியொன் றாதம ரின்பிச்சை யார்நற வூற்றுதுழாய்ப்
பன்றியொன் றாத பதக்காழி யாரருள் பற்றுதல்போ
லின்றியொன் றாத விவர்காம மெய்யின்ப விச்சைகொள்யான்
வென்றியொன் றாத விடைத்தோழி யார்பற்று மேவுவனே. (கூஎ)

### இரவுவலியுறுத்தல்.

துறையார் மலரொற்றிச் சங்கிலி யார்கண்செய் துன்பமெல்லா
நறையாரந் தார்ப்புயத் தாரூரர் காழிநம் மாற்குரைத்தாங்
கிறையார் வளையிவ் விளங்கொடி யார்கண்செ யின்னலெல்லாம்
பொறையார் மனத்துப் பெருந்தோழி யார்க்குப் புகலுதுமே. (கூஅ)

### ஊர்வினாதல்.

அவஞ்செய நின்ற கொடியேனையுந்தடுத் தாண்டுகொள்வார்
சிவஞ்செய மேவு திருத்தோணி மால்வரைச் சேயிழையீர்
பவஞ்செய நின்றபல் லூரொழித் தேன்மனம் பற்றமுற்றத்
தவஞ்செய வேண்டுநும் மூருரைத் தாலங்குச் சாருவனே. (கூகூ)

### பெயர்வினாதல்.

யாரா யினுந்தொழு தான்மல மாதி யிரித்தருளுஞ்
சீரா யினுஞ்சிறந் தார்காழி வாணர் திருச்சிலம்பி
னாரா யினுமுண ரேனுரை யீரினி யுங்கடிருப்
பேரா யினுமுரைப் பீருரைத் தால்வரும் பீழையென்னே. (க00)

### ஊரும்பேரும் உடன்வினாதல்.

கனக்கா வலர்செறி காழியில் வாழ்நுதற் கண்ணரெண்ணு
மினக்கா வலர்திருக் காளத்தி மால்வரை யேந்திழையீர்
தனக்கா வலர்விழை நும்மூர்சொல் லீர்தவிர் வீரினியிப்
புனக்கா வலரெவ ரோசொல்ல வேண்டும் புலப்படவே. (க0க)

### வேழம்வினாதல்.

பைந்நாக நாண்புனை காழிப் பிராற்குக்க பாய்கொடுத்த
கைந்நாக மேயெனத் தக்கதென் வேலுங் கவர்ந்ததொரு
மைந்நாக மொப்பதுங் கொங்கையொப் பாய மருப்பதொளி
தைந்நாக மாமட வீர்வந்த தோவொன்றித் தண்புனத்தே (க0உ)

### வன்றிவினாதல்.

பூவுண்டு வண்டுறங் கும்பொழில் சூழும் புகலிப்பிரான்
சேவுண் டுமிழ்ந்த தவாவகிற் பீரத் திகழ்பெருமான்
பாவுண் டுறுபத நாடிய தொத்ததொர் பன்றியென்னை
யேவுண் டுடைந்திங் கடைந்ததுண் டாயி னியம்புமினே. (க0ங)

### மரைவினாதல்.

நாம்பல் லமரரை நாடா தருள்புரி நம்பருறை
கூம்பல் புரிகை கொடுபோற் றுங்காழி குறுகலிற்
றேம்பல் கொளுஞ்சிற் றிடையீர் தில்லைபளி செய்துநுஞ்செவ்
வாம்பன் மலர்க்கு மொருமனையிங் கடைந்ததுண்டே. (க0ச)

### கலைமான்வினாதல்.

கானென்று வேணியர் பூணியர் தோணியர் கைக்கமலந்
தானென்று றுததுங் கட்பகை யாய்மிசைத் தாவுதலாற்
றேனென்று பூங்குழ லீர்கணை யேவச் சிறிதுடைந்த
மானென்று வந்ததுண் டோபுகல் வீரிவ் வரைச்சரியே. (க0ரு)

### மதமாவோடு மனம்வினாதல்.

பாலார் மொழியொரு பாலார்பொற் றோணிப் பருப்பதத்து
மேலார் கயிலை மலைச்சார லுங்கள் வியன்முலைநேர்
மாலார் கரிமுன் வரவிடை நேரென் மனம்பின்வந்த
தாலார் திருவயிற் றீர்கண்டி ரேனுமை யாடுவிரே. (க0சு)

### வழிவினாதல்.

பழியா யினுங்கிடை யாக்காழி மேய பரம்பரனூர்
விழியா யினுங்கிடை யாதது வோநும் விரிபொழிலூ
ரொழியா யினுமுனக் கென்னிங்கெ னுதந்த வூரடையும்
வழியா யினுமுரை யீர்வளை யீர்ங்குழன் மங்கையரே. (க0எ)

### இடைவினாதல்.

மடையெங்கு முத்தஞ் சொரிந்தற றேக்கி வளைகழனிப்
புடையெங்கு நீந்தும் புகலிப் பிரானருள் போற்பொலிவீர்
தடையெங்கு நீத்தெழு கொங்கையு மல்குலுந் தங்கக்கண்டோ
மிடையெங்கு வைத்து மறந்துவந் தீரஃ தியம்புமினே. (க0அ)

### மொழியாமை வினாதல்.

செய்யோன் புகலிப் பெருமான் கயிலைச் சிலம்பிலெனை
வெய்யோனென் றேயுங்கள் வாயரக் காப்பல்விள் ளாதுமுழுப்
பொய்யோ வெனுமிடை யீர்விருந் தாய்வந்து புக்கவர்பா
லையோவொன் றேனுஞ்சொ லாடா திருத்த லடுத்ததன்றே. (க0கூ)

### யாரே இவர்மனத்து எண்ணம் யாதெனத் தேர்தல்.

வில்லில ரம்பிலர் வேட்டம்வந் தோமென்பர் மெய்ம்மையெனுஞ்
சொல்லிலர் பொய்பரு மல்லர்நன் மேனியிற் றேன்றிவிளங்
கெல்லில ரெண்ணமுள் யாதோ கழுத்தன்றி யெவ்விடத்து
மல்லிலர் காழி யமர்தேவர் வெற்பகத் தாரிவரே. (கக0)

### எண்ணம் தெளிதல்.

யானை யவாமனை வன்றி யவாவியற் பேரொடுமூ
ரேனை யவாவிவை யெல்லாம்பொய் யன்பர்மு னிட்டவெச்சி
லூனை யவாவிய காழிப் பிரான்வரை யுத்தமர்நம்
மானை யவாவிய தொன்றேமெய் சான்றவர் வார்த்தைகளே. (ககக)

### கையுறையேந்திச்சேறல்.

காவாற் பொலிதண் கடற்காழி நாதர் கயிலைவெற்பிற்
றூவாப் பெருங்குணத் தோழியும் வாழி தலைவியுநம்
மோவாத் தவமும் பயனுமொத் தேயிங் கொருங்கமர்ந்தார்
மேவாக் குறையினைத் துந்தெரிப் பாமின்ப மேவுறவே. (ககஉ)

### புனங்கண்டு மகிழ்தல்.

வலமே பொலிமழு வார்தொழு வார்வினை மாய்த்தருளு
நலமே மலிபு கலிவரை வாயென்ன நன்மைசெய்வாங்
குலமே வியபைங் குரல்கொண் டிவளைக் கொணர்ந்துநங்கட்
புலமே மகிழ விருந்துசெ யேனற் புனத்தினுக்கே. (ககங)

### புனத்திடைக் கண்டுமகிழ்தல்.

தேரா னருமையுட் டேர்ந்தா னெனிலித் தினைப்புனத்தே
பாரா னிவளைப் பயந்தா னெவரும் பரவுசண்பை
யூரா னெனெஞ்சினும் பேரான் முடியுற் றொழிந்தமலர்த்
தாரா னருமை யறிந்தன ஞெவெச்ச தத்தனன்றே. (ககச)

### இருவரும் உளவழிச் சேறல்.

வெண்காட்டு நங்கையுஞ் சந்தனத் தாரும் விழைதரமிக்
கொண்காட்டு நீரமர் வீர்காழி யாரரு ளொத்தவரே
பண்காட்டு வாய்மலர்ந் தாலோல மென்று பலகிளியுங்
கண்காட்டு நும்புனத் தேயழைப் பீர்நல்ல காவலிதே. (ககரு)

### பாங்கி எதிர்மொழிகொடுத்தல்.

தாரே வளையுஞ் சடைக்காழி நாதர் தமிழ்வரைநன்
னீரே வளையும் பொழுதெங்ஙன் வந்து நெருங்கும்வன்னி
யேரே வளையும் புயத்தீரிக் குன்றகத் தெவ்விடத்துங்
காரே வளையும் வழுவையெக் காலமுங் கண்டிலமே. (ககசு)

### இறைவனை நகுதல்.

பன்னக நாணினர் தென்காழி மால்வரைப் பால்வருத்தந்
தன்னமு மேவரு போராம்ப லாய்ப்பின்பு தாமரையா
யன்னமன் றுயொண் கருநீலக் கோலமு மாயதுமற்
றின்னமென் றருங்கோ லோதமை யாலிவ ரெய்ததுவே. (ககஎ)

### மதியினின் அவரவர் மனக்கருத்துணர்தல்.

சொல்லார் பரமர் பிரமலிங் கேசர் சுடர்க்கிரியிந்
நல்லார் தினைப்புனங் காப்பதும் வேட்ட நலங்குறித்திவ்
வில்லா ரிறைவர் வருவது மாதவர் வேடமுனங்
கொல்லார் படைக்கை யிராவணன் சீதைமுன் கொண்டதுவே. ()

---

## பாங்கியிற்கூட்டம்.

---

### தலைவன் உட்கோள்சாற்றல்.

சேலாழி நல்கக்கொண் டார்காழி நாதர் திருவருளாற்
பாலாழி வைகு மமுதமொன் றேமதிப் பாலமுதுங்
கோலாழி கொள்விரற் கொம்பரன் னீர்கொடுப் பேனருள்வீர்
மாலாழி மூழ்கி யிறந்து படாத வகையெனக்கே. (ககக)

### பாங்கி குலமுறைகிளத்தல்.

மதிக்கு முயர்குலத் தோனீ யிழிகுல மாதர்நல
முதிக்கு மிகழ்வொடு வேட்டனன் றேயென் னுளத்துமொண்டாள்
பதிக்குங் கருணைப் பரன்றேணி மால்வரைப் பாலழல்போற்
கொதிக்கும் பசியுற்ற போதுங்கொ ளாதுபுல் கோட்புலியே. (கஉ0)

### தலைவன் தலைவிதன்னை உயர்த்தல்.

நீடுந் தியாகரைப் போலேயிம் மாதரு நீத்தமையால்
வாடுந் தருவினின் சொற்படி யாய மரபெனினுங்
கோடுங் குவடும் பொருமுலை யாயொர் குறத்தியைச்சேர்ந்
தாடும் பிரான்சண்பை யானிளஞ் சேயுற்ற வாசென்னையே. (கஉக)

### பாங்கி அறியாள்போன்று வினுதல்.

குன்றுடு வாரரு வித்திர ளோற்றுங் குலவுமன்று
ணின்றுடு வார்சண்பை மால்வரை வாய்ச்சுனை நீர்குடைந்து
மின்றுடு வார்பல ரன்னருண் மன்னரு ளேறனையாய்
நன்றுடு வாருன் மனங்கவர்ந் தாளெந நறுநுதலே. (கஉஉ)

### இறையோன் இறைவிதன்மையியம்பல்.

தானே தனக்கிணை யாங்காழி நாதன் றளிர்பொருகைம்
மானே விழிமுடி வாழ்பிறை யேநுதன் மன்னுகொன்றைத்
தேனே மொழியர வேயல்குல் கொங்கையுஞ் சேவிமிலே
மீனே பொருகணல் லாயென்னை யாத்தவொர் மென்கொடிக்கே. ()

### பாங்கி தலைவியருமை சாற்றல்.

மருட்குரி யாரெண்ண வும்படு மோவிம் மணிவரைவாய்த்
தெருட்குரி யார்மக ளாரூரர் மேவிரு தேவியர்போற்
பொருட்குரி யாரொரு தோழமை யார்நம் புகலியர்பே
ரருட்குரி யார்க்கன்றி மற்றோர்க் கெளிய ளல்லளலளே. (கஉச)

### தலைவன் இன்றியமையாமை இயம்பல்.

வாரா வமரர் வணங்குங் கழுமல வாழ்க்கையென்றுந்
தீரா தவர்தந் திருவருள் போலச் சிறந்ததுகாண்
பாரார் புனலன்றி மீனிற்கு மோவப் பரிசினுங்க
ளாரா வமுதமின் றேனிற்கு மோவென தாருயிரே. (கஉரு)

### பாங்கி நின்குறை நீயே சென்றுரையென்றல்.

நவையா றுறும லெனைப்புரப் பார்சண்பை நாட்டிளவேய்
குவையா முறித்துக் களிறின் பிடிக்குக் கொடுக்கும்வெற்பா
செவையாக நின்குறை நீயேசென் றோதெங்கள் செல்விமுன
மிவையா திகளெம்ம ணோரிசை யாரச்ச மெய்துவரே. (கஉசு)

### பாங்கியைத் தலைவன்பழித்தல்.

வானோ நிலவுல கோபுகழ் காழி வரதரிளங்
கானோ வுறுவரை வாய்விளை வாயிரு கைவிரித்தாய்
தேனோ வெனுமொழி யாய்நல்ல காரியஞ் செய்தனைநீ
யேனோநிற் பற்றித் தொடர்ந்து திரிந்திளைத் தெய்த்ததுவே. (கஉஎ)

### பாங்கி பேதைமை யூட்டல்.

வாராண் முலைநிலை மங்கையொர் பங்கர் மதியமுகிழ்த்
தாராள் சடையர் புகலிவெற் பாவெங்க டையலெனுங்
காராள் குழலி புணர்தொழி லோவத்துங் கண்டறியா
டேராணி னுட்டியர் பல்காற் பலர்சென்று செப்பினுமே. (கஉஅ)

### காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

நன்றே யதற்கெதி ரேபுரி காவி நளினமமைத்
தன்றே வருத்திநின் றூரறி யார்கொனல் லாயகவை
யொன்றே குறித்தறி யாரெனிற் காழி யொருவர்தம்பாற்
குன்றே பொருமுலைப் பாலுண்டு ளாருமக் கொள்கையரே. (கஉகூ)

### பாங்கி முன்னுறுபுணர்ச்சி முறையுறக்கூறல்.

ஆரூர்வன் றொண்டர் கழுமலத் தீச ரனுமைநமுன்பெற்
றேரூர் பரவையின் பெய்திய தாற்பின்னு மெய்தப்பெற்றார்
போரூர் களிற்றண்ண லேசுய மேமுன் புணர்ந்தனைநீ
காரூர் குழலியை மீட்டுமென் பாலென்ன காரியமே. (கஙO)

### தன்னிலை தலைவன் சாற்றல்.

தெருளன்றி மற்றொன் றிலார்சூழ் புகலிச் சிவபெருமா
னருளன்றி முத்தி யடைவதுண் டோநின் னனுமையெனும்
பொருளன்றி முன்னம் புகுந்தவென் குற்றம் பொறுத்தருள்க
விருளன்றி வேறொன் றெனுக்குழ லாயினி யென்செய்வனே. (கஙக)

### பாங்கி உலகியலுரைத்தல்.

சூதாக மீதெழு கொங்கைமின் னுரின்பந் தோய்ந்தமர்தற்
கேதாக முற்றவ ரெல்லாம் வரைந்தன்றி யெய்துகிலார்
போதாக வெண்பணி வார்காழி யீசர் புரிந்துரைத்த
வேதாக மங்களி னுள்ளதன் றேயிவ் விதியண்ணலே. (கஙஉ)

### நீவரைகென்றல்.

கிடைசிறி தேனுமில் லாக்காழி வாணர் கிளரருளாற்
கடைசிறி தேனுமில் லாவலி யோய்நற் கடிமணஞ்செய்
திடைசிறி தேனுமில் லாமட மாதினை யெய்தினின்பந்
தடைசிறி தேனுமில் லாதெய்த லாமித் தரணியிலே. (கஙங)

### தலைவன் மறுத்தல்.

செப்போது கொங்கைத் திருவனை யாய்திரு மான்முதலோர்
முப்போது மேத்துங் கழுமலத் தீசர் மொழிவழியே
தப்போ துதலொழி யந்தணர் சூழத் தமர்மகிழ
விப்போ துயிர்பிழைத் தாற்செய்ய லாம்பி னியன்மணமே. (கஙச)

### பாங்கி அஞ்சியச்சுறுத்தல்.

பண்ணார் மொழியுமை பங்கர்தென் காழிப் பருப்பதத்தி
னண்ணார் தொழுகழ லாயிங்கு மேவி னமர்கொடுமை
யெண்ணார் புரிவ ருனையு மனையு மெனையும்வையுங்
கண்ணார் கதிரும் படுமினி நீயுங் கழிதனன்றே. (கரு௫)

### தலைவன் கையுறைபுகழ்தல்.

பரிவா யருள்சண்பை யாரரு ளாரொளி பற்றுதய
கிரிவா யிழிசெவ் வருவியுண் மூழ்கிக் கிடந்ததய
னரிவாய் புகழ்வது பெற்றேனந் தோவிவ் வருமணிநஞ்
சுரிவாய் குழலி முலையேறிற் கண்டு தொழுதுய்வனே. (கருசு)

### பாங்கி கையுறைமறுத்தல்.

அண்டார் புரஞ்செற் றவர்காழி நாத ரருணைவெற்பில்
வண்டார் குழலி யணிமுலை மேலிம் மணியமையக்
கண்டா ரெனிலெமர் காணுப்பி னியெமைக் கன்னவிறேரட்
டண்டா ருடையண்ண லேயெண்ண லேதச் சழக்கருக்கே. (கருஎ)

### ஆற்றநெஞ்சினொடு அவன்புலத்தல்.

விழையுங் குழையு மனத்தன்பர் கூட்டம் விழையுமையர்
மழையுங் குழையுங் களத்தார் புகலி வணங்கலர்நோய்
தழையுங் குழையுந் தளர்வொழி யாத தனிமனம்போற்
குழையுங் குழையும் படியுற்ற தாலென் கொடுவினையே. (கருஅ)

### பாங்கி ஆற்றுவித்தகற்றல்.

மதிக்கும் புகலிப் பெருமான் றிருமலை வாணர்குலத்
துதிக்குங் கொடியொண் முலைமேனின் கைம்மணி யுற்றொளிருந்
திதிக்குங் கருணைத் திறத்தாய் நின்னூர்க்கின்று சென்றுகுன்று
துதிக்குங் கதிரெழு காலையில் லாவிந்தச் சோலையிலே. (கருகூ)

### இரந்துகுறைபெறதுவருந்தியகிழவோன் மடலேபோருளெனமதித்தல்.

ஆலஞ் சிதைத்தட ராதயின் றூர்சண்பை யாளர்துழாய்க்
கோலஞ் சிதைத்து மருப்பணிந் தார்குடி கொண்டிடினு
நீலஞ் சிதைத்தொளிர் கண்ணாள் பொருட்டு நெடியபெருந்
தாலஞ் சிதைத்து விடலே துணிபெத் தடையினியே. (கசo)

### பாங்கிக்கு உலகின்மேல்வைத்துரைத்தல்.

கடல்சூழ் புவியிளங் காளையர் தாந்தங் கலைமதியை
விடல்சூ ழிடைமட வாரல்நுற் பாம்பு விழுங்கியதே
லுடல்சூழ் தரச்சண்பை யார்நீறு பூசி யுழிஞையொடு
மடல்சூ ழெருக்கணிந் தேமட லூர்வர் மடமயிலே. (கசக)

### அதனைத் தன்மேல்வைத்துச் சாற்றல்.

ஒன்பா னுருவ முளனு கியுமுரு வொன்றுமிலா
னன்பான் மலிபு கலியுங்கள் வீதியி னுளே நல்லா
யென்பா னணிந்து மடன்மா விவர்ந்துகை யேற்றதொடு
வன்பான்மை யின்வரு வேனென்செய் வீரிந்த வல்வினைக்கே.(கசஉ)

### பாங்கி தலைமகள் அவயவத்தருமைசாற்றல்.

வாரார் விழிக்கு வலயமங் கைக்கம லஞ்சொல்வன்னி
காரார் கருங்குழற் கொண்ட லிடைவிண் கமழுமுயிர்
நீரார் முகமதி மெய்கதி ராக நிகழ்சண்பையா
ரோரார்மெய் யெட்டு மெழுதியன் றேமட லேறுவதே. (கசஙு)

### தலைமகன் தன்னைத்தானேபுகழ்தல்.

கடையு மிடையு முதலுமில் லான்றிருக் காழியன்னாள்
படையு முடையும் விழிமுத லியாவும் படமுணர்ந்தே
மிடையு மடையு மிருபிடி யென்ன விரைந்தெழுதி
யிடையு நடையு மொருபிடி யென்ன வெழுதுவனே. (கசச)

### பாங்கி அருளியல்கிளத்தல்.

பாவா ருலாப்புகன் றேகயி லாயம் படர்ந்தவர்கோட்
பூவா ரலங்க லிழத்தனன் றேபுவிப் போனகங்கொ
ளாவார் புகலிப் பிரமலிங் கேச ரருட்குரியார்
மேவார் வரைப்பெண்ணை வேட்டே கடற்பெண்ணை வெட்டுதற்கே.()

### பாங்கி கொண்டுநிலைகூறல்.

ஆரா வமுதன்ன வெம்பெரு மாட்டி யடிபணிந்து
தீரா நினுள்ளக் குறையாவும் விண்ணப்பஞ் செய்வலின்னே
நாரா யணனுண ராச்சண்பை யார்வரை நண்பவுள்ள
நேரா குறுதெனிற் போந்துகொண் டேமய னீந்துகவே. (கசரு)

### தலைவி இளமைத்தன்மை பாங்கி தலைவற்குரைத்தல்.

பொறியா ணிறத்தன் மலரா ளறத்தன் புகல்புகலி
மறியா ளிடத்தன் மழுவாள் வலத்தன் வரையணங்கு
சிறியாண் முலைத்தப னேற்றிரண் டேகின் செறிதுயர
மறியா ளுளத்துங் குறியா ளவட்கெ னறைவதுவே. (கசஎ)

### தலைவன் தலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

ஒருபார்வை வெப்ப மொருபார்வை தட்ப மொருவர்முகத்
திருபார்வை யொப்பத்த றெண்முகத் தேயமைத் தேவெதிர்ந்து
வருபார்வை யாயென் னகத்தா மனையைமுன் வாட்டுவளென்
றருபார்வை யோபின் மலர்த்துவள் காணிந்தச் சண்பையிலே. ()

### பாங்கி செவ்வியருமைசெப்பல்.

தருக்கும் பகைவர் மணிமோலி யெற்றுபொற் றாளுடையாய்
பெருக்கும் பலவிளை யாடலு நீத்தொரு பேச்சுமின்றி
மருக்கும்ப மென்முலை யாள்சண்பை யானை மனத்திருத்தி
யிருக்கும் பெரியவர் போலிருப் பாளென் னியம்புவதே. (கசகூ)

### தலைவன் செவ்வியெளிமைசெப்பல்.

பாராய் புகழ்ச்சண்பை யாரரு ளப்பர்தம் பால்வருகைச்
சீராயப் பூதி யடிகளைப் போலென் றிகழ்வருகைக்
காராய் பவளென் வரவோதி னப்பொழு தேயலர்ப்பூந்
தாரா யெதிர்கொண் டுனையு மெனையுந் தழீஇக்கொளுமே. (கருய)

### பாங்கி என்னைமறைப்பின் எளிதெனநகுதல்.

கடம்படு வேழ முரித்த பிரான்றிருக் காழிவெற்பா
மடம்படு கோதையு நீயுமொத் தீரன்ன மாண்பினிரே
லிடம்படு மென்னை மறைத்துப் புணர்திற மெய்துவிரோ
வுடம்படு மெய்யின்றி யேபுண ராதுயி ரோடுயிரே. (கருக)

### அந்நகைபொறாது அவன்புலம்பல்.

அப்பார் சடைய ரடற்சூற் படைய ரமர்விடையர்
செப்பார் முலைநிலை மங்கையொர் பங்கர் திருப்புகலி
யொப்பார் கருங்கணுஞ் செவ்வாயுஞ் செய்த வொழிவருமென்
வெப்பார் பிணிக்குப் புளியிட்ட தாயிற்றுன் வெண்ணகையே. ()

### பாங்கி தலைவனைத்தேற்றல்.

பெம்மான் புகலியிற் சம்பந்தர் பால்வைத்த பேரருள்போ
லம்மான் விழியெம் முதல்வியென் பானல் லருள்பெரிய
ணம்மானச் சம்பந்தர் சொற்படி யாவு நடத்தினன்மற்
றிம்மானென் சொற்படி யெல்லா நடத்து மியல்பினளே. (கருங)

### கையுறை ஏற்றல்.

வெற்றகட் டுக்கன மீவார் புகலி விமலரெனக்
குற்றகட் டுக்களைந் தாள்வார் வரையி லொளிறுவைவேல்
செற்றகட் டுக்க மறுச்சிற் றிடைப்பெருஞ் செல்வியல்குற்
பொற்றகட் டுக்கணி யாமைய நின்கைப் பொலிமணியே. (கருச)

### கிழவோன் ஆற்றல்.

திருத்திய வாஞ்சண்பை நாயக ரப்பர்க்குச் சூலைவெந்நோய்
பொருத்திய வாறவர் பாலரு ளாகிப் புகுந்ததுபோ
லிருத்திய வார்வத் திவர்பல கால்வன்சொ லீந்துநம்மை
வருத்திய வாறுநம் மாட்டரு ளாகி மலிந்ததுவே. (கருரு)

### இறைவன்றனக்குத்துறைநேர்பாங்கி இறைவிக்கு அவன்துறையுணர்த்தல்.

அருவ னுருவ னருவுரு வாள னவிர்புகலித்
திருவ ரிருவ ருணரார் வரைநஞ் செழும்புனத்தே
வருவ ரொருவ ரரியர் பிரியர் வயமுருகே
பொருவர் தருவர் தழையவர்க் கென்ன புரிதுமின்னே. (கருசு)

### இறைவி அறியாள்போன்று குறியாள்கூறல்.

நாம்பணி தாளர்வெம் பாம்பணி தோளர் நகுபுகலிக்
காம்பணி மால்வரை யார்வீழி மேவிக் கவுணியர்க்குக்
கூம்பணி கைகொடு காண்கநற் றோணிமெய்க் கோலமிதே
யாம்பணி கென்றுமுன் காட்டினர் காண்மிக் கதிசயமே. (கருஎ)

### பாங்கி இறையோற்கண்டமை பகர்தல்.

தலையானை யைந்தினைப் பாலானை யைந்துமெய்ச் சாமியெண்ணெண்
கலையானை யாறினு டாறுக் கதீதன் கயிலைநெடு
மலையானை நேடிவந் தாரல ராலதை வாட்டியநின்
முலையானை நேடிவந் தார்சண்பை வாழ்நண்பர் மொய்குழலே. (கருஅ)

### பாங்கியைத் தலைவி மறைத்தல்.

விளைப்பால் வளர்குழ லாய்மான மீக்கொள்வில் வேடர்குலத்
துளைப்பால் வழுவி தூயிரே வழுவுமென் றோர்ந்துளநீ
தளைப்பா லெவரும் புகழ்நம் பிரான்றம் பிரான்புகலி
வளைப்பா லுறைபவர்க் குந்தகு மோவிந்த வார்த்தைகளே. (கருகூ)

### பாங்கி என்னை மறைப்பது என்னெனத் தழாஅல்.

இருமாட் டியன்றன வெல்லாஞ்சொ லென்றினி தேற்றன்முன்மே
வருமாட் டியபம் பரம்போற் சுழலு மனமிற்றைநாள்
கருமாட்டி நம்மைப் புரக்கும் பிரான்றிருக் காழியிலெம்
பெருமாட்டி யென்னை மறைத்தலி னாலென்ன பெற்றியதே. (கசா௦)

### பாங்கி கையுறைபுகழ்தல்.

குரவே கமழுங் குழலாய் புகலிநங் கோனருளாற்
புரவே புரியரி மார்புகண் டான்முன் பொலிவதொளி
யிரவேயென் றேவி யவாவுந் தகைத்து னெழில்செயல்கு
லரவே யணியக் கிடைத்தது காணிவ் வருமணியே. (கசாக)

### தோழி கிழவோன் துயர்நிலைகிளத்தல்.

வண்டார் கடுக்கை மலைவார் கழுமல வாணர்வெற்பிற்
றண்டா ரணிகுழ லாயொரு வேழந் தடக்கைகொடு
விண்டார் முளைமுறித் துப்பிடி வாய்விருப் பிற்கொடுக்கக்
கண்டா ருடனுயிர் விண்டார்கொ லென்னக் கலங்கினரே. (கசா௨)

### மறுத்தற்கு அருமை மாட்டல்.

வெய்யோ ருருச்சண்டை யார்வளை வாய்மென் றளிர்கள்கொய்து
கையோ சலித்தன வென்பார் துயர்கண்டு கண்வெதும்பும்
பொய்யோ வினிப்புக லக்கிடை யாதொரு போக்குமின்று
லையோ பெரியவர் முன்செல நாணுற் றகன்றனனே. (கசுங)

### தோழி தலைமகன்தறிப்புவேறாக நேறிப்படக்கூறல்.

மிடிகெட்ட தென்று புகுவார் மகிழ்தரும் வெங்குருவார்
கடிகெட்ட தென்றுளை யாமழு வார்தங் கருதருளாற்
படிகெட்ட தென்றுளை யாடா தளிப்பவர் பல்களியர்
குடிகெட்ட தென்றுளை யாடுவ ராலென்று கூறினரே. (கசுச)

### தோழி தலைவியையுனிதல்.

கறுப்பார் களத்தர்தென் காழியன் னீர்முற் கலப்புணர்ந்தே
மறுப்பா ரலரென்று வாய்திறந் தேனிற்றை மாண்புணரேன்
வெறுப்பார்சொல் லுள்ளத் தொழிகவென் மீதும் விருப்புறுக
பொறுப்பாரன் றேபெரி யோர்சிறி யோர்செய்த புன்மையையே. ()

### தலைவி பாங்கியையுனிதல்.

மாதேநின் வார்த்தை புகலிப் பிரான்றிரு வார்த்தையென்று
தீதே யறக்கொள்ளு வேன்பழங் கேண்மைச் சீதைவுமின்று
சூதேயுட் கொண்டு பலபல கூறத் துணிந்தனையிப்
போதே திலளெனக் கொண்டாய் நினக்கிது புந்தியன்றே. (கசுசு)

### தலைவி பாங்கிதன்கைக் கையுறையேற்றல்.

பழுதே யுறார்தம் பரன்காழி வெற்பர்நம் பால்வரில்வண்
டுழுதே மலர்க்குழ லாய்சில வாமொழி யிற்பலவாந்
தொழுதே மடல்கொள லாலவர் நின்னைகயிற் றுன்னியவப்
பொழுதேயென் கையுற்ற தாயிற் றவர்தந்த பூந்தழையே. (கசுஎ)

### இறைவி கையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்.

மன்னு சிறந்ததொன் றன்பே யஃதின்றி வாசவன்மு
னின்னுவுற் றுனின் றளிர்சண்டை யாரரு ளிற்கவர்ந்து
முன்னு முடிவைத் திருவிழி யொற்றி முகத்தணைத்துத்
தன்னுகை முற்றுமெய் நின்னுகை யாகத் தழுவினளே. (கசுஅ)

### பாங்கி தலைவற்குக் குறியிடங்கூறல்.

தார்கோ ளரவெனக் கொண்டார் புகலித் தடங்கிரிப்பா
லூர்கோண் மதியி னடுவட் பளிக்கறை யொன்றமரக்
கார்கோள் வளாகம் புகழ்பொழில் சூழ்ந்து களுலுமிட
மார்கோ ணெடும்புயத் தாய்பகல் யாம்விளை யாடிடமே. (கசுகூ)

### குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல்.

பொன்னே பொருசடை யார்சண்பை யார்வரைப் பூஞ்சுனைநீ
ரன்னேநின் மேனி நறுமண மீங்கெதன் னகக்குறைதீர்
பின்னே யெனுமெனுஞ் சென்றுடு தற்குன் பிறங்குபத
மின்னே மெலப்பெயர்த் தெம்பெரு மாட்டி யெழுந்தருளே. (௧௭௦)

### குறியிடத்து உய்த்துநீங்கல்.

மண்ணுக் குவகை செயுங்காழி நாதர் வரைமயினின்
கண்ணுக் குவகை செயுமாடி மற்றிது கண்டிவணில்
பண்ணுக் குவகை செயுமொழி யாய்நின் பசுங்குழற்கார்
விண்ணுக் குவகை செயுமலர் கொய்திங்கு மேவுவனே. (௧௭௧)

### நீங்குந்தோழி தலைவற்குணர்த்தல்.

சற்றுப் பவர்க்கும் பெரும்பய னல்குந் தனிமுதல்வன்
பற்று யுறைதிறை பொற்றோணி வெற்பிற் பசுமயிறு
ணற்றுய் செவிலியு மின்றிமற் றுறொடு நானுமின்றிக்
கற்றுப் தமியணிற் கின்றாள் வெறுதன்பிற் காத்தருளே. (௧௭௨)

### இறையோன் குறியிடத்து எதிர்ப்படுதல்.

குளத்தே விழியொன் றுளார்சண்பை யாரன்பு கூர்ந்தவருட்
டுளத்தே யமர்ந்து மவர்க்கே வெளியுந் தயங்குதல்போல்
வளத்தே மலியும் பெரிதாங் கருணைநன் மாட்சியினென்
னுளத்தே யமர்ந்தும் வெளிநின் றுளாரிவ் வொருவரின்றே. (௧௭௩)

### புணர்ச்சியின்மகிழ்தல்.

நன்கோடி நோக்கிப் பணிந்திரப் பார்க்கரு ணம்பர்நெடுந்
தென்கோடி சூழும் புகலியி லெத்தவஞ் செய்தனமிப்
பொன்கோடி யுள்ள கருவூலம் புக்கிரு பொன்மலையும்
பின்கோடி நீங்க விளைநிதி யங்களும் பெற்றனமே. (௧௭௪)

### புகழ்தல்.

மழையுந் தொழுங்குழ லீருங்கள் கண்களை வாணுதலைத்
தழையுஞ் செருக்கி னெதிர்ந்துவெல் லாதிரி தன்மைகண்டே
யுழையும் பிறையு முலகுமுற் றின்ற வொருபெரியாள்
விழையும் புகலித் திருத்தோணி யப்பர் வெறுத்தனரே. (௧௭௫)

### தலைமகளைத் தலைவன்விடுத்தல்.

கலர்வருத் தங்கரு தாக்காழி நாதர் கருணையன்னீ
ருலர்வருத் தந்தவி ரிச்சோலை யுற்றொரு வேனுளத்தே
யலர்வருத் தந்தணித் தீர்கண் ணுறுமலைந் தஞர்கொள்
பலர்வருத் தந்தணிப் பீராய நாப்பட் படர்ந்தினியே. (௧௭௬)

தலைவி சோர்தல்.

வானவ ரிந்திர ஞரண ஞரணன் மற்றுமுள்ளோ
ரானவர் போற்றுங் கழுமலத் தீச ரருள்வலியாற்
கானவர் காவலிச் சோலையி லேயெனைக் கைகலந்து
போனவர் பின்சென்ற தாலென்செய் வேனென் பொருமனமே. ()

பாங்கி தலைவியைச்சார்ந்து கையுறைகாட்டல்.

கோகந கங்குறிக் தானுங் குறித்தல்கொள் ளேற்குமருள்,
கோகந கங்குல வுஞ்சிலை யான்வெங் குருவரைவாய்க்
கோகந கங்கொள் குவிமுலை யாய்நின் குழற்கணியக்
கோகந கங்கொணர்ந் தேன்பொறி யேறுமுன் கொண்டருளே. ()

பாங்கி தலைவியைப் பாங்கிற்கூட்டல்.

கடிமலர் பூங்கடுக் கைத்தொடை யாரென் கருந்தலைக்கு
மடிமலர் சேர்த்துநன் காள்வார் புகலி யருவரைவாய்க்
கொடிமல ரொன்று, மிகைகொடி யேமற்றைக் கோலஞ்செய்முப்
படிமல ரும்புனைந் தேன்பண்ணை மேவப் படருதுமே. (கள௬)

நீங்கித் தலைவந்து ஓம்படைசாற்றல்.

போத முறுவெனை யும்புரப் பார்தென் புகலியென்றிற்
பேத முறுமனத் தாள்பொருட் டியான்செய் பிழைமறக்க
நீத முறுமின் றனக்கு மெனக்கு நினக்குமினி
யேத முறுதண்ண லேயெண்ண லேநிற் கியலறமே. (க அ0)

உலகியன்மேம்பட விருந்துவிலக்கல்.

வானும் புகழ்திற நோய்சுடர் மாயும் வழிப்புனலுங்
கானுங் கடத்த லரிதினித் தேனுங் கடியுழையுன்
றூனுங் கவர்ந்துத யத்தேக லாமன்பர் தந்தவெச்சி
லூனுங் கவர்ந்தனர் காளத்தி வாய்ச்சண்டை யுத்தமரே. (க அக)

விருந்திறைவிரும்பல்.

வாங்கிய வானுத லார்செங்கை தொட்டது மாற்றருங்கைப்
போங்கிய வேம்பெனி னுங்கரும் பாமுரை யாடுவதென்
வீங்கிய மாமுலை யாய்வள்ளி யாருண்ட மெல்லிலையிற்
றேங்கிய பிச்சிலன் றேசண்டை யாரிளஞ் சேயுண்டதே. (க அ உ)



## ஒருசார்பகற்குறி.



### கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கல்.

வாரின்றி மேவுத லில்லா மலைநிலை மங்கைகொங்கைப்
போரின்றி மேவுத லில்லாப் புயத்தர் புகலிவெற்பி
லூரின்றி யூழற் றதுமுடிப் பானுற் றொருவன்மலர்
நாரின்றி யேதொடுத் தான்பெரு மாலை நணுகுறவே. (கஅங)

### பாங்கி புலம்பல்.

வண்டாய் கமல முகம்வாடச் செய்தவிம் மாதுமுகங்
கண்டா யதைவருத் தக்கதி ரேபுகலியரற்குத்
தொண்டா யுறாரி னழுவம் புகுந்துன் சுடர்மறைத்துக்
கொண்டாய் கவிமறைந் தெய்தவன் மேலொரு குற்றமின்றே. (கஅச)

### தலைவனீடத் தலைவிவருந்தல்.

வேதரிப் பாரளந் தார்தலை கண்முடி மேலடிமே
லோதரிப் பார்சண்பை யுன்னாரி னென்னை யொருகழைக்கோட்
போதரிப் பார்விடு பூந்தோணி காமப் புனலழுத்து
மாதரிப் பார்வந் தணைந்திலர் தேர்புமென் னாருயிரே. (கஅரு)

### தலைவியைப் பாங்கிகழறல்.

அமைகூடுதோளணங் கேபிரிந் தாருயி ரன்னவரென்
றமைகூடு மெய்ச் புகலியுன் னாரி னுயங்குவையுட்
கமைகூடு மன்னரு நீயு மினனுங் கரமுங்கொல்கண்
ணிமைகூ டுவதும் பிரிவதுஞ் சற்றுளத் தெண்ணுகவே. (கஅசா)

### தலைவி முன்னிலைப்புறமொழி மொழிதல்.

சொல்லாமுன் முன்னங்கொ டெல்லா முணருஞ் சுகுணர்க்கன்றி
யெல்லா முரைத்து முணரா தவர்க்கொன் றிசைப்பதினுங்
கல்லா தவராணு காக்காழி வாழ்மணி கண்டர்நாதற்
பொல்லா வழற்க ணெதிரா த னன்று புரிபவர்க்கே. (கஅஎ)

### தலைவி பாங்கியொடுபகர்தல்.

தேருந் திறமெற் கருள்வார் சிரபுரச் செல்வர்வெற்பி
னேருங் கிளிமொழி கட்கினி தாய நெருஞ்சிமலர்
சாருங் கொடுங்கண் டகமாய தென்னத் தலைவரெனக்
காரும் படிசெய்த வின்ப மெலாந்துன்ப மாயதுவே. (கஅஅ)

### தலைவியைப் பாங்கி அச்சுறுத்தல்.

உள்ளே யொருகதிர் மேவுற வோம்பி யொழிவில்கதிர்
கள்ளே மலிகுழ லாய்வெளி யோம்பலை கஞ்சமனப்
புள்ளேகொ ணீர்ச்சண்பை யார்வளை வாழ்நம்பொல் லாருணர்ந்தாற்
கொள்ளேயென் றக்குவர் வெஞ்சிறை யாய குகையிருளே. (கஅகூ)

### நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

வரியார் விழியணங் கேயுயிர் நீத்துடல் வாழுங்கொலோ
தரியாவின் பந்தந் தவளையெவ் வாறு தணப்பல்சண்பைக்
குரியா ரரிக்கு மரியா ருடனுமை யொற்றித்தென்றும்
பிரியா திருக்கச் செயுமா தவஞ்செயப் பெற்றிலனே. (௧௯௦)

### தலைவிக்கு அவன்வரல் பாங்கிசாற்றல்.

பாடி வருந்து மவர்க்கருள் காழிப் பரன்வரைநீ
நீடி வருந்து மதுதனிப் பானன்பர் நீண்மணித்தே
ரோடி வருந்துங்க மாரோதை கேளவ் வொருவர்நம்மைத்
தேடி வருந்து மதுகாண லாமிச் சிறைமறைந்தே. (௧௯௧)

### தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

ஓங்கை முகவர் தகவர் பகவ ரொளிபழுக்கொள்
பூங்கை யுடையர் விடையர் சடையர் புகலிவெற்பிற்
றீங்கை யுறுத்துந் தழல்கண் ணுறீரித் தினைக்கிளிகாள்
வேங்கை சிவந்த தினியெங்கண் மானிங்கு போவரிதே. (௧௯௨)

### தோழி முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

விண்ணுடை யார்புனன் மேலுடை யார்சண்பை வெற்பமரு
மெண்ணுடை யாரினிக் கொய்வார் தினையின் றியன்மயில்காண்
மண்ணுடை யாரன்பர் போலெங்கண் மாதை மறப்பின்மிகக்
கண்ணுடை யாரெனும் பேரில்லை யாகுங் கருதுமக்கே. (௧௯௩)

### பாங்கி தலைவன்முன்னின்று இற்செறிப்பு அறிவுறுத்தல்.

கோட்புலி யார்வினை யாக்கலி தப்புங் குலமடங்க
வாட்புலி யார்கொடு மாய்த்தா லெனத்தினை மாய்த்தனர்செவ்
வேட்புலி யார்நிகர் வேந்தேயிக் காவல்கை விட்டதுறேந்
தாட்புலி யார்தொழு மம்பலத் தார்சண்பைத் தாழ்வரைக்கே. (௧௯௪)

### முன்னின்றுணர்த்தி ஓம்படைசாற்றல்.

தழையாற்று வேணிப் பெருமான் புகலித் தனிமுதல்வன்
பழையாற்று நன்கு வெளிப்படுங் காறுமப் பாலகரா
துழையாற்று ளங்கொண் டமர்ந்தவர் சீர்த்தி புணர்ந்தமன்னு
விழையாற்று மங்கையை நீமறந் தாற்கதி வேறில்லையே. (௧௯௫)

### தலைவன் தஞ்சம்பெறாது நெஞ்சோடுகிளத்தல்.

கனத்தே மலர்க்குழற் சீதையைக் கொண்டகல் கள்வனிலென்
மனத்தே யமரும் பிரான்காழி வாணன் மணிவரையிப்
புனத்தே யமருங் கிளியையெங் கோகொடு போயினரித்
தினத்தே கொடுஞ்சிலை வேடரென் றாலென்ன செய்வனெஞ்சே. ( )



## பகற்குறி இடையீடு.



### இறைவனைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

மாவேட்ட பாடலில் மெய்ப்பட னேகுன்ற வாணரன்பர்
பாவேட்ட நாதர் திருத்தோணி மால்வரைப் பாலுழல்வார்
நாவேட்ட வின்புக ழாய்புனிற் றுவி னயந்துநறும்
பூவேட்ட வார்குழல் பாற்பல காலும் புகுமன்னையே. (௧௯௭)

### இறைவியைப் பாங்கி குறிவரல்விலக்கல்.

நடத்தே பழகிய தாளான் புகலிநம் பண்களத்தே
விடத்தே களான்பசப் போர்பாதி முற்றும் விளைந்ததனுன்
மடத்தே மலர்க்குழ லின்னமொன் றுய்மனம் வைத்தனளிவ்
விடத்தே வருதல்சொன் னேன்மயி லேசிற் கியல்பல்லவே. (௧௯௮)

### இறைவி ஆடிடம் நோக்கி அழிதல்.

தென்னுவ லூரரின் பந்தந்த வொற்றியைத் தீர்ந்தடைந்த
வின்னு வணங்கு மொருதோணி யப்ப ரிநும்பொருப்பு
முன்னு வனையுஞ் சுனையு நனையு முழுமலருந்
துன்னு வொளிர்பொழி லுந்துறப் பாநந் துணிபென்னையே. (௧௯௯)

### பாங்கி ஆடிடம்விடுத்துக்கொண்டகறல்.

குழையே பொலியுஞ் செவிச்சட்டை நாதர் குலவிிற்கு
மழையே தவழு மலைச்சாரல் வாய்மண வாளர்வந்தாற்
கழையே தருதழல் கொண்டதென் ணுது கவின்கிளிகாள்
பிழையே யிலாருயி ரோடுசென் றுரென்று பேசுமினே. (௨00)

### தலைவனுநவு வெளிப்படஇரங்கல்.

மேவா வெனக்கு மருள்சட்டை நாதர் வியன்கிரிப்பா
லோவா வளமைப் புனமு மிதனு மொளிர்பொழிலுந்
தாவாநன் னீர்ச்சுனை யுந்தேடி நாமிங்குச் சார்வதன்மு
னுவா வெதிர்வந்து நின்றன ரானம்மை யாள்பவரே. (௨0௧)

### பின்னுள் நெடுந்தகை குறிவயின் நீடுசென்றிரங்கல்.

வாய்மையி னுற்பொலி வார்சூழ் புகலி வடுகன்வெற்பிற்
றாய்மையி னுற்பொலி மாலைய தாயவிச் சோலையெதிர்
சேய்மையில் யான்வரும் போதே தரிசனஞ் செய்யகிற்கு
மாய்மயில் காணவொண் ணுதாயிற் றுலணி மைக்கண்ணுமே. ()

### தலைவன் வறுங்களநாடி மறுகல்.

மதிக்கும் புலமை யிடைக்காடன் சீற்ற மலிந்தவன்நாட்
கதிக்கும் புகழ்ச்சண்பை யார்மகிழ் கூடற் கனதளியுட்
டுதிக்கும் விமானங்கொ லோநம தாவித் துணையகல
வுதிக்கும் விழியின் முகம்போன் றிருந்தவிவ் வோரிதணே. (௨0௩)

### துறந்தோடிவாழும் ஊர்நோக்கி மதிமயங்கல்.

சொல்லரி தாம்புக ழாறு னுயர்த்தவன் றேணிவெற்பிற்
கல்லரி தாநங் கவலைக் கிழங்கையக் காரிகையைப்
புல்லரி தாமினி யூரது வேனும் பொருக்கென்றங்குச்
செல்லரி தானெஞ்ச மேயென்செய் வாமிந்தத் தீவினைக்கே. (௨0௪)

# இ ர வு க் கு றி.

### இறையோன் இருட்குறிவேண்டல்.

பொன்னங் கவர்மலை போன்முலை யீர்கடல் பூத்தவிட
முன்னங் கவர்பவன் சண்பையுன் னருண் முளைப்பதொடு
பன்னங் கவர்வினை போலெழு காரும் படர்ந்ததுங்க
ளன்னங் கவர்விருந் தாயடைந் தேனிங் கருளுமினே. (௨0௫)

### பாங்கி நெறியினது அருமைகூறல்.

மடங்காப் புகழ்ச்சண்பை வாழும் பிரான்செய்ய வார்சடில
மடங்காக் கலுழி,யனையான்கை யஞ்சரு மாஜுபுலி
முடங்காத் திறலுடைப் பஞ்சா னனமுழு துங்கடந்து
தடங்காத் திடுபுயத் தாயெங்க ளூர்வர றானரிதே. (௨0௬)

### தலைமகன் நெறியினது எளிமைகூறல்.

நெல்லே விளையும் வயற்சண்பை யார்வளை நீள்புலியோர்
புல்லேவல் யாளி யறுகே புகர்முகப் பூட்கைகொடும்
பல்லே யுடைக்களி றேராம்ப லேயஞ்சிப் பாறுவலோ
வல்லே பொருமுலை யாய்நீந்து வேனெழு வாரியுமே. (௨0௭)

### இரவுக்குறிக்குப் பாங்கியுடன்படல்.

புரவைக் கருதிப் புகலியின் மேவும் புராணர்வெற்பி
லிரவைக் கருதி யரவைக் கருதி யிரும்புனல்வாழ்
கரவைக் கருதிப் புகல்வதல் லாதெங்கள் காவலநின்
வரவைக் கருதிப் புகல்வாரு முண்டுகொன் மாநிலத்தே. (௨0௮)

### பாங்கி அவனூட்டு அணியியல்வினுதல்.

பூவேது கொய்வ ரிழையே தணிவர் புரிந்துபண்ணை
காவேது செய்வர் விளையேது பூசுவர் காமருபட்
பாவேது பாடுவர் நாரா யணனெடு பங்கயற்குஞ்
சாவே தினியென நஞ்சமுண் டான்புகழ்ச் சண்பையிலே. (௨0௯)

### தலைமகன் அவள் நாட்டு அணியியல்வினாதல்.

நாற்றங் குடிகொள் குழனீ வினையது நானுணர்ந்தேன்
சீற்றங் குடிகொ டிகிரிப் பிரான்முதற் றேவர்கடங்
கூற்றங் குடிகொள் களத்தா ரொருவெங் குருவனைவா
யேற்றங் குடிகொளு நின்னாட் டணியியல் யாதுரையே. (௨௧0)

### தன்னாட்டு அணியியல் பாங்கிசாற்றல்.

வரையேறு நீர்ச்சுனை யாடுவர் சூடுவர் வான்கணிப்பூ
விரையேறு சந்தனம் பூசுவர் பேசுவர் மென்குறிஞ்சி
திரையேறு வாரிதி சூழுல காளுஞ்செல் வாதெளியோ
நரையே றுயர்த்த பிரான்காழி சூழெழுங்க ணாட்டவரோ. (௨௧௧)

### பாங்கி இறைவிக்கு இறையோன்துறை அறிவுறுத்தல்.

கூம்ப லவாவுகை யாரு ளவாவுமெய்க் கூத்துடையா
னோம்ப லவாவுதென் காழியின் வாயொழி யாவிருளிற்
றேம்ப லவாவிடை யாய்மதி கண்டுசெந் தேனுணச்செவ்
வாம்ப லவாவுங் குவலைய மாளு மளியரசே. (௨௧௨)

### நேராதிறைவி நெஞ்சோடுகிளத்தல்.

பொறையா ருமைதென் புகலிப் பிரான்கண் புதைத்தவந்நாட்
குறையா விருளும் பகலே யெனச்செய் குருட்டிருள்வாய்
மறையா வனவெங் கொடுமா வுழல்சிறு வட்டையினம்
மிறையார் வரல்புகல் வாள்பாவம் பாவ மிதுகொடிதே. (௨௧௩)

### பாங்கி இரவுக்குறி ஏற்பித்தல்.

பல்லா ரவாஞ்சண்பை யாரொரு பாற்பெண் பசுங்குழல்வீழ்
சொல்லா ரளியை நிகரொரு வண்டுதற் சூழ்பெடையைக்
கல்லார வின்மது முன்னூட்டிப் பின்னுணக் கண்டுயிர்த்தார்
வல்லா ரமாமுலை யாய்கொடி யேன்கண்டு வாழ்குவனே. (௨௧௪)

### நேரிழைபாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

நாமப் புனல்விழு நாள்வீழ்ந் தெடுத்திடு நம்பெரியோர்
காமப் புனல்விழு நாளு மெடாதது கைதவமாந்
தாமப் புனற்சடை யார்காழி வாணர் சயிலத்திற்பூஞ்
சோமப் புனற்குழ லாய்செய்க நின்னுளஞ் சூழ்துணிபே. (௨௧௫)

### நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தல்.

மிறையே யிலாயிங்கு நீவந்த வேளைநல் வேளையின்று
முறையே புகலி வடுகப் பிரானடி முன்பணிந்து
மறையேதும் வஞ்சமி லாண்மலர்த் தாள்பின் பணிந்திரந்தே
னறையேய் மனமுகை போதா யுடன்மல ராயதுவே. (௨௧௬)

பாங்கி தலைமகனைக் குறியிடைநிறீஇத் தாய்துயிலறிதல்.

பாதங்க மாலயன் காணவொண் ணாத பரனவர்த
மாதங்கம் பூண்டவன் காழியன் னாய்முன்னம் வான்புனந்தப்
பாதங்க வாவி யடிக்கடி மேவிப் படருமொரு
மாதங்கம் வந்தது வோவெழும் வேங்கையின் வாய்முழக்கே. (௨௧௭)

இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்தல்.

சேலே பொருவிழி யாய்கடற் காழிநஞ் செல்வர்கழற்
காலே கருதுங் கருத்துடை யன்பர் கருதுகலை
போலே வனத்துப் படர்யாறு மிந்தியம் போற்களிறு
மாலே யெனவிரு ளுங்கடந் தாரிங்கு வந்தனரொ. (௨௧௮)

பாங்கி தலைவியைக் குறியிடத்துக் கொண்டுசேறல்.

விட்கெதி ராக மிளிர்காழி நாதர் வியன்கிரியுண்
கட்கெதி ராகப் பகல்வரு வானிக் கருகிருளிற்
பட்கெதி ராக வருமொழி நீலம் பயிலுமலர்ந்
துட்கெதி ராகவின் னேசென்று பார்த்துண்மை யோருகவே. (௨௧௯)

பாங்கி தலைவியைக் குறியிடத்து உய்த்துநீங்கல்.

சிவைதழு வக்குழைந் தார்காழி யோங்கலிற் சேவலைப்பே
டவைதழு வப்பொலி சோலையின் வாயணங் கேமலர்ப்பூங்
குவைதழு வப்பொலி கொம்பனை யொவ்வொர் கொடிதழீவு
மிவைதழு வக்கண் விடுத்துநி லங்குற்றிங் கெய்துவனே. (௨௨௦)

தலைவன் தலைவியைக் குறியிடத்து எதிர்ப்படுதல்.

விண்பார் புகழும் புகலிப் பிரான்றன் விளங்கருளா
னண்பார் சகல மொடுகே வலமொழி நல்லவர்போற்
பண்பார் மலர்தல் குவிதலில் லாதபொற் பங்கயமோ
வண்பா ரிரவிதழ் வாயடை யாதநும் மாளிகையே. (௨௨௧)

தலைவன் தலைவியைச் சார்தல்பயனாகப் புகழ்தல்.

மிடியாளர் வெம்பசி மேவிய வேலைவிண் ணாரமுதே
கடியாளர் கண்பிழைத் துற்றது போலுமிக் கங்குலினீர்
முடியாளர் சண்பைக் குடியாள ரென்வினை முற்றுமெற்று
மடியாளர் மால்வரைச் சார்நீ ரெனக்கெதி ராயதுவே. (௨௨௨)

தலைவி ஆற்றினது அருமைநினைந்திரங்கல்.

மின்னு முழங்கிப் பொழிமா முகிலந்த விண்மறைக்கு
மன்னு முழங்கி வருவெள்ள நீரிந்த மண்மறைக்கும்
பன்னக வேணிப் பிரான்சண்பை நின்றிப் பசும்பொழிலென்
முன்னாக நீவந்த வாறெந்த வாறிருண் முன்னவனே. (௨௨௩)

### புரவலன் தேற்றல்.

இருள்வா யழுந்தி யெழாதார்க்கு முண்டுகொ லின்பமென்றியா
னருள்வா யழுந்தித்தம் மோடொன் றுறுதொன்ற வாள்பரமர்
தெருள்வா யழுந்தினர் சேர்காழி நாதர்செவ் வாய்மலர்நூற்
பொருள்வா யழுந்திய தோரிரு ளோருநர் புன்மையரே. (௨௨௪)

### புணர்தல்.

முன்றே மலர்க்குழ லாருற் றுறைபொழின் முன்பினுற்றுங்
கொன்றே யெனவுரு வுற்றனை யாவின்ப முற்றதனு
னன்றேசை வம்புகல் சாலோக மாதியோர் நான்குமுற்றே
மின்றே யெனிலிது தான்காழி நாயக ரின்னருளே. (௨௨௫)

### புகழ்தல்.

சமைய விசேட நிருவாண மென்றுநஞ் சண்பைப்பிரா
னமைய வுரைத்த துணர்ந்தாய்கொ னீதனி யாகுவதே
சமையநி னங்கை தொடலே விசேடந் தரித்தகலை
யமைய நெகிழ்த்திட லேதிரு வாணமெய் யாமிதுவே. (௨௨௬)

### தலைவி தலைவனைக் குறிவரல்விலக்கல்.

பாதம் பெரிதடுப் பார்க்கருள் வார்தம் படையெனப்பல்
பூதம் பெரிதுடை யார்காழி யார்சிர பூதரப்பா
லோதம் பெரிதுகொ லென்ன வழுவை யுழுவைகொள்கா
னேதம் பெரிதண்ண லேயெண்ண லேது மிரவரலே. (௨௨௭)

### தலைவன் தலைவியை இல்வயின்விடுத்தல்.

நீண்டங்கு மாறு படுமா லயன்முனின் றோனவர்மெய்
பூண்டங்கு மாறு புனைந்தோ னவர்ப்புணர் வார்களத்து
நாண்டங்கு மாறுநஞ் சுண்டோன் புகலிநல் லாய்துயர்தா
யாண்டங்கு மாறு கொளத்தேடு நீமு னணைந்தருளே. (௨௨௮)

### பாங்கி இறைவியையெய்திக் கையுறைகாட்டல்.

சேற்பா லருகு முருகு பெருகு செருகுமலர்
நாற்பான் மலருளு மைம்பாற் கியைமலர் நான்கொணர்ந்தேன்
காற்பால் வளைமுர லுங்காழி நாதன் கயிலைவரை
மேற்பா லமர்தருக் கோற்பாலந் தேனிகர் மெல்லியலே. (௨௨௯)

### பாங்கி தலைவியை இற்கொண்டேகல்.

பழிப்பாளென் பாட்டு முவந்தவ னண்ட பகிரண்டமுற்
றழிப்பா ளருளுடை யான்காழி மால்வரை யன்னையொண்கண்
விழிப்பாளப் போதெதிர் நில்லோ மெனிற்றன் விழிசிவந்து
தெழிப்பாள் பலவுங் கொழிப்பாள்செல் வாநந் திருமனைக்கே. ()

பாங்கி பிற்சென்று தலைமகனை வரவுவிலக்கல்.

பெருமான் கரத்தி லொருமான் றரித்தபெம் மானொருதேழ்
பொருமா னுயர்த்த வருமான் புகலிப் பொருப்பிறைவா
கருமான் கொடுமை செருமான வேடர் கலைமெண்ணு
தொருமான் பொருட்டுக் குருட்டிருள் வாய்வர லொத்ததன்றே. ()

தலைமகன் மயங்கல்.

சேவென் றுரைக்கத் திருமாலைச் செய்த சிவபரனே
கோவென் றுரைக்க வெனக்கருள் வோன்வெங் குருவரைவாய்ப்
போவென் றுரைக்கப் பயின்றது போலவிப் பூங்கொடிவாய்
வாவென் றுரைக்கப் பயிலாமை யான்செய்த வல்வினையே. (உ௫உ)

தோழி தலைவிதுயர்கிளந்து விடுத்தல்.

பாட்டொலி மல்குநின் னூருற்ற பின்பு பலதழுவு
மாட்டொலி மல்கும் புகலிப் பிரான்பொன் னடிச்சிலம்பு
காட்டொலி கேட்டன்றி வாழாவொர் கோதையிற் காவலநின்
கோட்டொலி கேட்டன்றி வாழா துயிரெங்கள் கோதைக்குமே. ()

திருமகட்புணர்ந்தவன் சேறல்.

மருணீக்கி யேயென் குடிமுழு தாளும் வரதர்மனத்
தருணீக்கி யென்று மமர்ந்தறி யார்சண்பை வீரணங்கே
வெருணீக்கி யென்னுயி ரன்னார்தம் மேனி விளக்கங்கொண்டே
யிருணீக்கி யிப்பொழு தேகுவன் யானென் னையிலினுக்கே. (உ௫௪)

---

# இரவுக்குறி இடையீடு.

---

இறைவிக்கு இகுளை இறைவரவுணர்த்தல்.

கலையே யுணர்வரி யான்காழி சூழுங் கடற்றுறைவா
யலையே யறைந்தது வோபடர் பூந்துகி ரங்கொடியின்
றலையே வளைத்தது வோபுகி தாவனந் தண்மலரே
யிலையே செறிபுன்னை வாயிரு ளோங்குதற் கேதுவென்னே. (உ௫௫)

தான்குறிமருண்டமை தலைவி பாங்கிக்கு உணர்த்தல்.

வெளியே யுரைசெயி னுண்கேடு மாண்கொணம் வேந்தர்செயு
மளியேயென் றேரொலி கேட்டணைந் தேன்மற்றென் றாகியது
நளியே செறியுநங் கானலின் வாயெனி னெனென்செய்கே
னிளியே புரைமொழி யாய்காழி வாண ரிருந்துறைக்கே. (உ௫௬)

### பாங்கி தலைவன் தீங்கெடுத்தியம்பல்.

களியாப் பொலிகை வளைநீ யிழக்கக் கருத்துமுதல்
வெளியாப் பொருளைக் கத்தெரி யார்சொல் விழையவென்று
முளியாத் தளிரிளங் கானலின் வாய்நம் முயலுளமுந்
தெளியாக் குறிவிளைத் தார்காழி யார்கடற் சேர்ப்பரின்றே. (உ௩௭)

### தலைமகன் புலந்துபோதல்.

சேலே பொருகண் பொருட்டுக் குருட்டுத் திருட்டிருட்டுள்
வேலே பொருமுட் கடத்துத் தடத்து விடத்திடத்து
மாலே வியல்சிலைக் காழிப் பிரானருண் மாறுபட்ட
நூலே யெனவலைத் தாயென்னை யென்னை நுவறிநெஞ்சே. (உ௩௮)

### புலர்ந்தபின் வறுங்களம் தலைவிகண்டிரங்கல்.

தாயோ வருமிடம் வைத்தார் புகலித் தனிமுதல்வர்
வேயோ தருமண மாலைகொண் மாணி விழையவைவேற்
சேயோ வெனவிங்கு மேய புகார்த்துறைச் சேர்ப்பர்தந்தார்
நீயோகொண் டாய்புன்னை யேபெரி தாலுன் னெடுந்தவமே. (உ௩௯)

### தலைவி பாங்கியோடுரைத்தல்.

வானப் பிறைக்குண மென்றிருந் தேன்சண்பை மன்னர்சடைக்
கானப் பிறைக்குணம் போன்றுளு நன்றுநங் காமர்குழற்
றேனப் பிறைக்குணம் போற்றேய்ந்து தேய்ந்துபின் சாயுங்கொலோ
தேனப் பிறைக்கூங் குழன்முகி லாயன்பர் செய்யுநட்பே. (உ௪0)

### தலைமகளவலம் பாங்கிதணித்தல்.

மதனீள் புயத்தர் குறிபிழை யார்வண் கமலைவிண்வாழ்
சிதனீள்வன் மீகத் துறைவார் சிரபுரச் செல்வரெனப்
பதனீள் கழிப்பெருஞ் சார்பா லடிக்கொளும் பான்மையன்றி
முதனீ டழையவ் விதநீள் கவியை முடிக்கொளுமே. (உ௪௧)

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றல்.

மறியிடத் தேகொள் பெருமான் புகலி வழுத்துமன்பர்
குறியிடத் தேவந் தருளுதல் போலெங்கள் கோதைகுறி
செறியிடத் தேவந் தருளுகி லீரென்செய் தீர்படருங்
கறியிடத் தேசந்தின் பூஞ்சினை தாழ்வரைக் காவலரே. (உ௪௨)

### இறைவிமேல் இறைவன் குறிபிழைப்பேற்றல்.

மழைவர வோர்ந்து மயிலா டுறுங்குன்ற வாணர்மக
ளுழைவர வோர்ந்துகொள் ளாதோடி வாடி யுழன்றவ னென்
பிழைவர வோர்ந்துகொண் டோன்சண்பை யேத்தல ரிற்றனது
பிழைவர வோர்ந்துசொல் லாளெனின் யானெவன் பேசுவதே. ()

### தலைவி துறிமருண்டமை தோழி தலைவற்குணர்த்தல்.

ஒருகா லெழுந்தெறி யுந்தொறுங் காய்மு னுதிர்வனதேர்ந்
தொருகால்கொ ளின்குறி யென்றுபல் காலங்கங் குற்றுழன்று
ளொருகான் மிசைமுக் கிளையோன்மன் றுட னுவந்தெடுத்த
வொருகாலென் னுட்பதிப் போன்காழி மால்வரை யோரணங்கே. ( )

### தலைமகன் சொல்லியகொடுமை தலைமகட்குச்சொல்லல்.

காட்டொடு வெங்கொடுங் கான்யாறு நீந்தியிக் கார்வரைசேர்ந்
தீட்டொடு நித்திரை யில்லா தழுங்கிய தென்னளவோ
வாட்டொடு மன்றுணிற் பார்காழி நாத ரருளனையாய்
பேட்டொடு புள்ளுமற் றேயென்று காவலர் பேசினரே. (௨௪௫)

### என்பிழைப்பன்றென்று இறைவிநோதல்.

பகல்வா யுறங்கி யிருள்வாய் விழித்துப் பசுநறுந்தே
னுகல்வாய் குவளை யனையகண் ணாளிவ ளுண்மையெனப்,
புகல்வாய் புகலிப் புராணர் பொருப்பிற் புரிந்திருந்து
மிகல்வாய் புயத்தன்பர்க் கென்பய னைய திளங்கொடியே. (௨௪௬)

### தலைவி திருந்தெனவந்த பெருந்தகைநிலைமைகூறல்.

இரவே குறிபிழைத் தார்பக லெநம்மி னின்னமுதா
தரவே யுளேனென்றுற் றரன்னை நல்கென்று [illegible]ற்றினள்யான்
கரவேயில் சோறு முதன்மூன்று மோர்ந்தனன் காழிப்பிரா
னுரவே யுறுமொழி யன்றென்று நீங்கின ரொண்ணுதலே. (௨௪௭)

### தாய் துஞ்சாமை.

பழுத்துப் படர்திரை யன்னை துஞ் சாத படியெவன்மெல்
லெழுத்துப் படர்வல் லிளமுலை யாய்சண்டை யெய்தியன்பர்
கொழுத்துப் படர்புரி கூற்றங்கொன் றானைக் குழீஇப் பணியும்
வழுத்துப் படரொரு நல்லிரு ளோவிந்த வல்லிருளே. (௨௪௮)

### நாய் துஞ்சாமை.

என்கொடு பாமலந் தீர்ப்பார் புகலி யிகலில்கல்வி
நன்கொடு கேள்வி யிலாருணை போற்றுயி னண்பொழித்துப்
புன்கொடு வானெடும் போந்தின் கருக்குப் புரைபுலைவாய்
வன்கொடு நாய்குரைத் தாற்கொடுங் கூற்றும் வரவஞ்சுமே. (௨௪௯)

### ஊர் துஞ்சாமை.

மலைவிதி சென்னிகைக் கொண்டார்மெய் யன்பின் வழிகழியா
நிலைவிதி யேத்தும் பிரம புரேசர் நிறைவிழவோ
கலைவிதி யாமவர் கூத்தோ நகர்கண் படாததற்கென்
றலைவிதி யேயொரு பாழ்ங்கூத் துருக்கொடு சார்ந்ததுவே. (௨௫௦)

### காவலர் கடுகல்.

சேறந்த கண்ணி யொருபாகர் காழித் திருத்தளியு
ளேறந்த வின்பமறைக் கியா தஞர்தரு மிப்பறைக்குத்
தோறந்த வேறும்வன் கோறந்த தாருவுந் துஞ்சலொழி
மாறந்த காவலர் வன்கையும் வாழிய வாழியவே. (உருக)

### நிலவுவெளிப்படுதல்.

மதியே யுணர்நங் குலக்கோதை கேள்வற்கு வாஞ்சைநற்ருய்
துதியேய் மலர்க்கை யவள்கோன் முகக்கண் டொடலரிதோ
நிதியே யடக்க மமரரு ளுய்க்கு நிறைபுகலிப்
பதியேய் பவர்மதி போலடங் காயெனிற் பண்பல்லவே. (உருஉ)

### கூகை குழறல்.

எல்லா வுயிர்க்கு மிருடீர்த் திடுமெம் மிறைவலக்கண்
பொல்லா நினக்கிரு ளுண்டாக்கு மானின் புரையுணர்ந்தே
கல்லா தவரணு காக்காழி யன்பரெங் கண்ணெதிர்நா
ளொல்லா தவரில்வெங் கூகாய் குழறுத லொத்ததன்றே. (உருங)

### கோழி குரல்காட்டுதல்.

கோழிக்கு வேளுட னீறுக நோக்கு குழகர்கொம்பில்
கோழிக்கு நாயகர் மேவிய வீழிக்குங் கூடலுக்குங்
கோழிக்கு மண்படை யார்வரும் போது குரலெழுப்புங்
கோழிக்கு நான்செய்த தீங்கெவ னோசொல் கொடியிடையே. ()



## வரைதல்வேட்கை.



### பாங்கி தலைவியைப் பருவரல்வினுதல்.

சடையென வேயின் றரித்தவர் காழித் தடத்திலன்னப்
பெடையென வேநடப் பாயன்ப ரென்று பெருமையினோ
வுடையென வேயணி மார்சொற் பனிவந் துலாயதுவோ
விடையென வேமுகத் தாமரை வாடுதற் கேதுவென்னே. (உருரு)

### அருமறைசெவிலி அறிந்தமைகூறல்.

கொண்டலம் பான லெனுங்களத் தார்வெங் குருவரைவாய்
விண்டலம் பார்புகழ் வேந்தனை யெண்ணி விழிபனித்தேன்
கண்டலம் பாவலிற் கைத்தாயென் னென்னக் கடற்றினையென்
வண்டலம் பாவைகொண் டோடிற்றென் றோதி மறைத்தனனே. ()

தலைமகன்வருந்தோழிந்து அருமைசாற்றல்.

கூடிய பாசமொ ரைந்தொழிந் தேவெங் குருப்பரன்மன்
ருடிய பாத மடைவது போனில வாய்நகர்நாய்
நீடிய காவலர் வெங்காவ லேந்த னிகழ்வொழிந்தே
நாடிய வன்பரிங் கெய்தலுண் டாகுங்கொ னன்னுதலே. (உருஎ)

தலைவி தலைமகனூர்க்குச்சேல வோருப்படுதல்.

தாரூர் தடம்புயத் தோணிப் பிரானரு டாங்கியன்பர்
சேரூ ரடையத் தடையெவ ளோமுன் சிறந்தவரைப்
பாரூர் புகழ்மிகு நம்மூ ரெதுவெனப் பன்னிரண்டு
பேரூரென் றுரெங்கு நாந்தேடிச் செல்வது பெண்ணணங்கே. ()

பாங்கி இறைவனைப் பழித்தல்.

நன்கண்மை யாரணங் கேநம்மை யாளு நலத்தர்மலர்ப்
புன்கண்மை யாளர் திருத்தோணி யாரடி போற்றலரி
னின்கண்மை யாத்த லுடையா ரின் மேவிப்பி னீங்குதலால்
வன்கண்மை யாருண்முற் றும்பூவைம் வாங்குநர் மற்றவரே. (உருகூ)

தலைமகள் இயற்பட மொழிதல்.

வளக்குங் குபமுலை யாயுபி ரோம்பு மகிழ்நர்நம்பாற்
கிளக்குங் கருணை யிலரா குதனங் கெடுவினைவ
னளக்குங் கனக மதிற்காழி நாத ரருளினெல்லாம்
விளக்குங் கதிரிரு ளாகுத லோர்தி விழிக்குற்றமே. (உசூo)

கனவுநலிபுரைத்தல்.

பூவலர் சோலைப் புகலிப் பிரானருள் போற்றியமுந்
நாவல ராதியர் நாமாயி னனைய வாங்கனவு
மாவலர் கோதைநல் லாய்நென்ன லாரிருள் வந்துவந்து
காவலர் மார்புதந் தார்விழித் தேனென் றுங்கண்டிலனே. (உசூக)

கவினழிபுரைத்தல்.

அன்பே யவாவு புகலிப் பிராற்கன்பு ளாளையுன்னி
யென்பே வெளிக்கொண் டிடமேனி வாடி யெழிலிழந்து
வன்பே யுருவமுற் றேனைப் பிரானை வழுத்திபொரு
மின்பே யுருவமுற் றுளென்ப ராலென் வியப்பதிலே. (உசூஉ)

தலைமகள் தன்றுயர் தலைவற்கு உணர்த்தல்வேண்டல்.

சேவாய்நஞ் சண்டைப் பிரானைச் சுமக்குந் திறத்தனுமோ
ரேவாய் விழியை வருத்தி யுருப்பத் தெடுத்துழன்ற
மாவாய் கதையுடன் யான்படும் பாடும் வகுத்துரைத்துப்
பாவாய் வருந ரெவரேநங் காவலர் பாலடைந்தே. (உசூங)

### நின்றுறை நீயே சென்றுரையென்றல்.

எப்போது நின்னு ளமர்வார்க்கொன் றேதவஞ் செய்துவர்யார்
செப்போது கொங்கைத் திருவனை யாய்திரு மாலொடயன்
முப்போது மேத்தும் புகலிப் பிரானெம் முதலினஞ்சே
யொப்போது னன்பர்க்கு நீயே யுரைநின் னுளத்ததுவே. (உ௬௪)

### அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.

நல்லா ரொருவர்கற் றாற்றவு மாற்றிய நம்புகலி
வல்லா ரொருவ ரலர்தூற்ற வாற்றிலர் மற்றவரும்
பல்லார் களுநனி தூற்றலர் யானெப் படிபொறுப்பேன்
வில்லார் மதிநுத லாய்நினை தோறெழும் வெய்துயிர்ப்பே. (உ௬௫)

### ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி.

தோளா மணிசண்பை வாழ்வடு கேசன் றுணையடிக்கே
யாளா னவர்நம் புடைசார்ந் தியற்று மருண்மறந்து
வாளா விருப்பது கண்டுங் கொடிய வழியெனையுங்
கேளா தெழுந்தவர் பாற்செல்லு மாலென் கிளர்மனமே. (உ௬௬)

### காமமிக்க கழிபடர்கிளவி.

நீரே நிலாமன மேபிறி தாகு நிலாமனமே
காரே கரும்பனை யேகுயில் கூவுங் கரும்பனையே
பாரே பரவலை யேமய றீயப் பரவலையே
வாரேகொள் வாரல ரேகாழி யார்க்கன்பர் வாரலரே. (உ௬௭)

### தன்னுட் கையாறெய்திடுகிளவி.

பன்னக வேணிப் பிரான்காழி சூழும் பனித்துறைவாய்
நின்னக முற்றும் பசந்தா யசைந்துகண் ணீருகுப்பாய்
முன்னக மேவி யகரும் பனையலர் மூழ்கிநிற்பாய்
புன்னக மேநினை நீத்தகன் றாருமெப் புண்ணியரே. (உ௬௮)

### தலைமகள் நெறிவிலக்குவித்தல்.

மன்னுங் கொடுமலந் தீர்ப்பார் புகலி மறந்துமற்றொன்
றுன்னுங் கொடுவினை யாரினங் காவலர்க் கொண்டொடியே
பன்னுங் கொடுவரி யாளி யரிகரி பம்பியிரு
டுன்னுங் கொடுநெறி வாரற்க நீயென்று சொல்லுகவே. ஏ (உ௬௯)

### குறிவிலக்குவித்தல்.

பொறிவா யரவரைப் புண்ணியன் காழிப் பொருப்பணங்கே
நெறிவா யெமருட் சிலர்குறிப் பாலொன்ற னீருணர்வார்
கறிவாய் நறுஞ்சந் தனச்சாரல் வேரல் கலந்தபொழிற்
குறிவாய் வருத றகாதென்று கூறுநங் கொற்றவர்க்கே. (உ௭0)

### வெறிவிலக்குவித்தல்.

பாடுதற் கெண்ணிய யான்மலை மாதி பறித்தருளிற்
கூடுதற் கெண்ணிய கோன்சண்பை யேத்துநர் கொள்ளுமின்ப
நீடுதற் கெண்ணி யவர்தரு நோய்க்கிணை யாதுவெறி
யாடுதற் கெண்ணிய வன்னைக்கொன் றோதி யகற்றணங்கே. (உ௭க)

### பிறர் விலக்குவித்தல்.

புரியொன்று கூழைநல் லாயன்பர் தம்மணம் போற்றியயான்
விரியொன்று மற்றையர் தம்மணம் போற்றும் விதியுமுண்டோ
வுரியொன்று மேனி யான்காழி வெற்பி லரியையவாய்
நரியொன்று பெற்றொழி வாருமுண் டோவிந்த நானிலத்தே. (உ௭உ)

### நூரவரை வரைவெதிர்கொள்ளுவித்தல்.

தீங்கோய் புகலிச் சிவனு ருமையொடு சேர்ந்துறையு
மீங்கோய் மலையன் றிருஞ்சுனை வீழ வெடுத்தளித்தார்
தாங்கோய் வருநகை யோடுறு போது தவாநமரென்
பாங்கோய் வரைவெதிர் கொண்டிடு மாறு பகருகவே. (உ௭௩)



## வரைவுகடாதல்.



### வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

வலநீர் விறற்கழ லோயன்னை யென்னைநம் மாதர்முக
நலநீர் மெலிவுற்ற தென்னென நென்ன னவிற்றியசிற்
றிலநீர் பரன்சண்பை சூழ்கடல் வாய்ப்புக்க தென்றுவிறிக்
குலநீர் கவிழ்ப்பமெய் வாடின ளாலென்று கூறினனே. (உ௭௪)

### அலரறிவுறுத்தல்.

நன்மாலை கொன்றையுந் தும்பையு மாக்கிய நம்பரென்பு
வன்மாலை யும்புனை வார்காழி வாணர் வரையிறைவா
தன்மாலை யன்றி யொருமத வேள்பல் சரந்தொடுக்க
நின்மாலை யுற்றவட் கூரலர் சூழ்ந்து நெருங்கியதே. (உ௭௫)

### தாயறிவுணர்த்தல்.

நன்கண்டு மாறடி யேற்கருள் வார்நறு நாவன்மலர்ப்
புன்கண்டு நீழலி னூர்சண்பை நாட்டுப் புனிதவன்னை
மின்கண்டு தாழு மருங்குனல் லாண்முலை மேற்பரந்த
பொன்கண்டு நெட்டுயிர்த் தாளிளை யாட்கென்னன் புக்கதென்றே. ()

## வெறியச்சுறுத்தல்.

அசத்துக் கிரங்குகி லார்காழி வாழு மவரெனவோ
ரசத்துக் கிரங்குகி லாளாயி னுளெங்க ளன்னையுநின்
வசத்துப் படுமொரு மாங்குயில் சோர்ந்து மயக்கமுற்ற
வசத்துப் பதைத்தல்கண் டாள்வெறி யாடன் மதித்தையனே. ( )

## பிறர் வரைவுணர்த்தல்.

பண்ணவ ரேத்து குருலிங்க சங்கமம் பற்றுபதிக்
கண்ணவர் காழிக் கழுக்குன்ற மால்வரைக் காவலமுன்
விண்ணவ ரத்திரு மாதையிச் சித்த விதம்பொருவ
மண்ணவ ரித்திரு பாதையிச் சித்து பயங்குவரே. (உஎஅ)

## வரைவேதிர்வுணர்த்தல்.

முருகோடு முன்ன முனிந்தேற் றமர்த்தவெம் மொய்குலத்தோர்
திருகோடு நிற்பது தீர்ந்துநன் கேற்றுச் சிறப்பளிப்பா
ரிருகோடு கோட்டுக் களிற்றாய் வரைவென் றெழுதரினீ
குருகோடு வண்டுறங் குந்தடங் காழியெங் கோன்வரைக்கே. (உஎகூ)

## வரையுநாளுணர்த்தல்.

அருற்ற வேணிக் கமலர்பொற் றேணி யமலர்வெற்பிற்
சேருற்ற கோதைக் குழல்வேட்கு நாளிது தேர்ந்துகொண்மோ
காருற்ற சோலைக் கணிபூ மலர்ந்து கலைமதியொன்
றாருற்ற போதல்லி வாமணங் காட்டுமொம் மூரண்ணலே. (உஅ0)

## தலைமகளறிவு தலைமகற்கு அறிவுறுத்தல்.

விழியேறு நெற்றி யுடையார் கொடியில்வெள் ளேறமைத்தார்
மொழியேறு சீர்கெழு சண்பைநண் பாமுழு முத்தமுலை
யுழியேறு பீருநீ கழலும் வளையு முணர்ந்தனக்குப்
பழியேறு மென்று மறைத்தா ளெனையும் பசுங்கொடியே. (உஅக)

## குறிபெயர்த்திடுதல்.

பொருவா ரிலாத புயத்தார் புகலிப் புராணர்வெற்பின்
மருவார் தொழுங்கழ லாயிப் பொழிலமர் மாதவிப்பா
லொருவார் பலரும் வருவா ரணிமையி னேவிமணிக்
குருவார் நகையொடு செல்லுதி சேய்மைக் குறிகுறித்தே. (உஅஉ)

## பகல்வருவானை இரவுவருகென்றல்.

கதிவாய் விருப்பங் கழலா தெனக்குங் கடைக்கணித்த
நதிவாய் சடையார் கொதிவாய் மழுவர் நயந்தமரு
நிதிவாய் புகலிப் பதிவாய் மடந்தை நிகரின்முக
மதிவா யமுது பகல்வா யடைவதெவ் வாறண்ணலே. (உஅங)

### இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

உகல்வாய் வினையுடை யேன்யா னெனவெனக் கோங்கருள்செய்
மிகல்வாய் புகலி நகுவடு கேசன் வியன்சிலம்பி
னிகல்வாய் களிற்றண்ண லேமாதர் செவ்விள நீரிரண்டும்
பகல்வா யடையினன் றேநல மாய பயன்றருமே. (உஅச)

### பகலினு மிரவினும் பயின்று வருகென்றல்.

புகலும் வரவுஞ் செலவுமில் வேணு புரேசரன்பு
நகலும் மிரவுநர் பாலுறு போழ்து நவிலினென்றே
யிகலு மரவுந் தொழுமல்கு ளாளின் பினிதடையப்
பகலு மிரவும் பயின்றே வருக பகட்டண்ணலே. (உஅரு)

### பகலினுமிரவினும் அகலிவணென்றல்.

ஏதிலர் வாயல ராம்பக லெண்பணி யேற்றருளுஞ்
சூதிலர் கண்ணல ராமிரு ணீவரிற் றேன்றுமிரு
போதில ரென்னும் புகழ்மேவண் ணுறைற் புதர்வலப்பான்
மாதிலர் பிட்டுக்கு மண்சுமந் தார்சண்பை மால்வரைக்கே. (உஅசு)

### உரவோனாடுமூரு நுங்குலனுமரபும் புகழும்வாய்மையுங்கூறல்.

பொன்னாடு போற்றும் புகலிப் புராணர் புகழ்ப்பொருப்பிற்
கொன்னாடு வேல்வலங் கொண்டுதண் டாவிறல் கொள்பவதி
னன்னாடு மூருங் குலனு மரபு நகுபுகழு
மன்னாடு மெய்யு மணஞ்செயு மாதை மணஞ்செய்மினே. (உஅஎ)

### ஆறுபார்த்துற்ற அச்சங்கூறல்.

வேட்டுக் குளிர்நகை யாளின்ப நீவரல் வேலவவென்
பாட்டுக் கருளும் பரன்காழி நாதன் பசும்பொன்மன்ற
மாட்டுப் புலியர வோவழி நேர்புலி வல்லரவு
காட்டுக் களிறுந மாவத்துக் சாத்த களிறலவே. (உஅஅ)

### ஆற்றாத்தன்மை ஆற்றக்கூறல்.

பச்சை மயிலொரு பாலுடை யாயெனும் பையரவக்
கச்சை யரைக்கசைத் தாய்தென்றல் சீறுங் கலங்தெனுமெ
னிச்சை முழுதுமென் னன்பரெண் ணுதமை யென்னெனும்வண்
கொச்சையுன் னுரி னழும்விழு மோரெங் குலக்கொழுந்தே. (உஅகூ)

### காவன்மிகவுரைத்தல்.

நீங்கும் பொழுதுகொன் னுகாது தன்னை நினைப்பித்தென்னை
வாங்கும் பொழுதுட் குறித்த பிரான்சண்பை மால்வரைவா
யோங்கும் பொழுது வறிதாக்கு வாய்கை யுறவணைத்துத்
தூங்கும் பொழுதும் விடாரன்னை மாரொரு தோகையையே. (உகூ0)

### காமமிகவுரைத்தல்.

கொட்கும் புலனுடை யேனஞர் தீர்க்குங் குழகர்சண்பை
நட்கும் பயனடை யார்போற் கலங்குவ னல்லமுது
முட்கும் வருக்கைச் சிறுகோட்டுத் தூங்கு மொருகனிபோற்
பெட்கு முயிர்சிறி தாயினுங் காமம் பெரிதையனே. (உ௬௧)

### கனவுநலிபுரைத்தல்.

நனவே யெனக்கருள் வார்காழி வாணர் நகுவளைவாய்ப்
புனவே யடுவளைத் தோளா ளிரவிற் புகுந்துயிலிற்
கனவே சிறந்ததென் பாளலை ரோவலிற் காணுமதை
யுனவே கொடியதென் பாளிடை நீங்கலி னுத்தமனே. (உ௬உ)

### கவினழிபுரைத்தல்.

வருமந்த மாருத முன்றி லுலாஞ்சண்பை வாணரெனைப்
பொருமந்த காரம் புடைப்பா ரருளுறு புண்ணியர்பாற்
றருமந்த மாதவ மெய்தார் படைத்த தனம்பொருவ
வருமந்த மேனி யழகண்ண லேகொள்ளை யாயினதே. (உ௬௩)

---

## ஒருவழித்தணத்தல்.

---

### தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல்.

கரும்பே கமுகு கமுகேதென் னென்னுங் கழனியெம்மூ
ரரும்பே பொருமுலை யாய்குறை யொன்றுண் டதுமுடிப்பான்
பொரும்பே ரிடல்விடை யான்காழி யூர்வழி போயுங்களூர்
விரும்பேர் மனையிதழ் மூடித் திறக்குமுன் மேவுவனே. (உ௬௪)

### மென்சொற்பாங்கி விலக்கல்.

இடைக்குறை யுள்ள விவள்குறை யன்றிமற் றேதுகுறை
விடைக்குறை கொட்டில்வை குந்தஞ்செய் தோணிண்டை மேவியபா
சடைக்குறை முத்தி னழகுசெய் சண்பை யடைவழகே
படைக்குறை யொன்னலர் மார்பாக் கியவிறற் பார்த்திபனே. (உ௬௫)

### தலைவன் நீங்கல்வேண்டல்.

முடியாளை வேய்ந்த பெருமான் புகலி முழுமுதல்வ
னடியாளை நீங்கி யிருக்கினுங் கொங்கை யடர்மருங்குற்
றுடியாளை நீங்கி யிருக்ககி லேனின்னுஞ் சொல்லுவதென்
கொடியாளை சூழெழபி லின்றேசென் றிங்குக் குறுகுவனே. (உ௬௬)

### தலைவனைப் பாங்கிவிடுத்தல்.

என்றூர் கொடிமதிற் காழிப் பிரானையெண் ணுதவரின்
மென்றூர் மலர்க்குழல் சோர்வது யான்சொல்ல வேண்டுங்கொலோ
குன்றூர் முலைநின் கொழுநர்தம் மூர்க்கொரு கோள்குறித்துச்
சென்றூ ரெனுமுனம் வந்தா ரெனவந்து சேரண்ணலே. (உகூஎ)

### பாங்கி தலைவிக்கு அவன்செலவுணர்த்தல்.

தொடையேறி வண்டு துயில்குழ லாய்துய ராதிதுகேள்
விடையேறி காரிய மொன்றறுப் பான்சங்கம் வெண்முத்தநீர்
மடையேறி யீனும் புகலிசென் றூர்குழை வாயுங்கள்கட்
கடையேறி மீளுமுன் னேவரு வேனென்று காவலரே. (உகூஅ)

### தலைவி நெஞ்சொடுபுலத்தல்.

நன்றேதி நூல்பல வோர்ந்தார்க்கு மீது நலந்தருமே
துன்றேதி பங்குடை யார்சண்பை நாயகர் தோளமர்வி
லொன்றேதி யென்பய னுமொனுந் தோள நினைப்பிரியே
னென்றேதி முன்பிரிந் தார்தெளிந் தாரிடத் தென்பிழையே. (உகூகூ)

### சென்றோன்டலிற் காமமிக்க கழிபடர்கிளவி.

விரைமே விரவல ரேயன்னை மாரும் விரவலரே
கரைசூழ் கருங்கழி யேயுரலர் பு கருங்கழியே
திரைசால் சிறைக்குரு கேயெளி யேன்வெந் சிறைக்குருகே
வரைதீர்வெள் வார்க்குரை யேசண்பை யாரையுள் ஓர்க்குரையே. ( )

### தலைவியைப் பாங்கி ஆற்றுவித்தல்.

பாசங் கொடுவருங் காலன்னை யாளும் பரன்புகலி
நேசங் கொடுதிப் பார்நகர் நின்று நிகழ்குடிஞை
யோசங் கொடுமுத்து முந்துதல் பாரவை ருரின்மௌவல்
வாசங் கொடுவரல் பார்மாத ராய்மந்த மாருதமே. (௩0க)

### நெஞ்சுநினைந்திரங்கல்.

கஞ்சக் தொடர்ந்து வருங்கழ லார்பின் கனிந்துதொடர்
நெஞ்சந் தொடர்ந்துடன் சென்றது வோவிடை நின்றதுவோ
வஞ்சந் தொடர்ந்துபின் மீண்டது வோவன்றி மாண்டதுவோ
நஞ்சந் தொடர்ந்து பொலிகளத் தார்சண்பை நாட்டகத்தே. (௩0உ)

### நெஞ்சொடுகிளத்தல்.

மஞ்சே பொருகளத் தார்காழி வாணர் வரையிலெனை
நஞ்சே யெனவெறுத் தஞ்சேலென் ஞர்வழி நண்ணியவென்
னெஞ்சே யவரென்சொன் ஞரது கேட்டிலி னீயென்சொனுப்
வஞ்சே யுளார்கொ லிலார்கொலெற் கோது மறையொழித்தே. (௩0௩)

### கடலோடு புலம்பல்.

அருந்திய நஞ்சமுன் காழிப் பிரானுக் கருளியநீ
வருந்திய வெற்கெது செய்யாயென் கேள்வர்வை வேல்வலத்திற்
பொருந்திய னேக்கி முருகனென் றெண்ணினை போலுமவர்
திருந்திய தேர்செல் வழியழித் தேறுந் திரைக்கடலே. (௩0௪)

### ஆற்றேடு புலம்பல்.

மூவல்செய் வார்புனல் சூழ்மை யாறு முதுகுன்றமன்னிவெண்
ணாவல்செய் வார்நிழல் மேய பிரான்சண்பை நாட்டினின்று
மோவல்செய் வார்நுரைத் தூசான் மறைத்திங் கொழுகுவையெற்
காவல்செய் வார்தொழில் கூறுஞ்சு நாணிக்கொல் காவிரியே. (௩0௫)

### புள்ளோடு புலம்பல்.

பிரியா ரெவரிவர் கொழுநரோ யோர்வரைப் பெண்ணன்றிமாற்
கரியார் பதுவிநல் லாவினை நோக்கி யசிப்பனொன்னே
வரியார் சிறையளி காளன்றில் காண்மகி ழோதிமங்கா
ளூரியர் பிரிவரி யாராக வாற்று முறுதவமே. (௩0௬)

### கையறுகிளவி.

மடலே பொலிகொன்றை மாலிகை யான்வழுத் தேனையுங்கை
விடலே துணிபெனக் கொள்ளாத வன்சண்பை மெய்ந்நகர்சூழ்
கடலே கழிக்கரை யேகைதை யேகுளிர் கானன்மணற்
றிடலே தலைவர்சொல் கூறுற வாழுயிர் தேம்புவனே. (௩0௭)

### கூடலிழைத்தல்.

விழிக்குந் திருநுத லான்கொடி யேன்வெவ் வினையினைத்து
மழிக்குந் திறலுடை யான்காழி சூழ்துறை யாய்சுவைத்தேன்
மொழிக்குங் குமமுலை யாள்விரல் கன்றவெண் முத்தமணற்
சுழிக்குங் கழிக்கு மொழிக்குங்கண் ணீரென்று துன்புறுமே. (௩0௮)

### நூனுறவு பொய்யென்றல்.

மெய்த்தா ரிதழியர் வேணுபு ரேசர் விரிதுறையன்
புய்த்தார்வெள் ளோதிமஞ் சான்றாக முன்ன முணைத்திடுசூள்
பொய்த்தா ரவர்வருந் தாதிருந் தாரது போற்றிமெய்யென்
றெய்த்தார் வருந்துவ தொன்றானன் றன்முன் னெழுத்தியலே. ()

### மடமைகூறல்.

பெருகுறு நீர்வெண் மதிற்காழி யாருண் பெருவிடம்போற்
கருகுறு போதடி சூழ்பாம்பு மாவுங் கடந்தளியே
னருகுறு வார்பொருட் டிம்மெலி வோவின்னும் யானடைவேன்
முருகுறு கூழைநல் லாய்மட வோரிது முன்னுவரே. (௩௧0)

### தன்னுட்கூறல்.

புரிதரு செஞ்சடை யார்காழி நாதர் பொருப்பர்தந்த
விரிதரு வெப்ப மவரூர் வழிவரு மென்புனல்யாற்
றிரிதரு மாறு படிவோமவ் வீர்ம்புன லீர்த்துவரு
மரிதரு பைந்தளிர் போர்ப்போநம் மேனி யடங்கலுமே. (௩௧௧)

### பாங்கி தலைமகட்குத் தலைவன்வந்தமையுணர்த்தல்.

கண்பொழி நீருந் தனிமையும் பீருங் கழல்வளையும்
பண்பொழி வாய்மயி லேயினி யேதுநின் பாலுணர்மோ
விண்பொழி நீர்வைத்த செஞ்சடை யார்விளங் கும்புகலி
நண்பொழி யார்மணிப் பொற்றே ரொடுமிங்கு நண்ணினரே. (௩௧௨)

### வந்தோன்றன்னொடு பாங்கி நொந்துவினுதல்.

நனவி னுணர்ந்திலி ராயினு மெங்க ணறுங்கொடியைக்
கனவி னுணர்ந்திருப் பீருண்மை யேயெனிற் கண்டனிரோ
சினவி னுதன்முலைப் பீருங்கண் ணீருமுட் சேருந்துன்பு
மனவி னிடையர் கழுமலத் தார்வரை மன்னவரே. (௩௧௩)

### தலைவன் பாங்கியோடு நொந்துவினுதல்.

வீழ்வது கண்முத்த மோமுலை மேலணி வெண்முத்தமோ
சூழ்வது பாயல ரோவயல் வாய்நடுத் தோயலரோ
போழ்வது மாலைகொல் வேலைகொ லோது புலையடியோன்
வாழ்வது செய்த பிரான்காழி நாதன் வரையணங்கே. (௩௧௪)

### பாங்கி தலைவியை ஆற்றுவித்திருந்த அருமைகூறல்.

செயிர்முடி யாவிதந் தீயோர்க் கருள்சண்பைச் செல்வர்துவள்
பயிர்முடி யாவிதம் பெய்மழை போலப் பரவருளான்
மயிர்முடி யாவிதம் பொன்போர்த் தெழுகொங்கை மங்கைக்கியா
னுயிர்முடி யாவிதங் காத்தேன் வருத்தமுற் றுத்தமனே. (௩௧௫)



## வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல்.



### என்பொருட் பிரிவுணர்த்து ஏந்திழைக்கென்றல்.

ஒருவா வளச்சண்பை யோவார் கவுணியர்க் கோங்குபைம்பொன்
றிருவா வடுதுறை யிற்கொடுத் தார்தந் திருவருளான்
மருவா வருஞ்சுரம் போய்வரு வேனுங்கண் மங்கைகொங்கைப்
பொருவா விலைகொண்டு மாதே புகறியப் பூங்கொடிக்கே. (௩௧௬)

### பாங்கி நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றல்.

*தாயே யனைய கருணைப் பிரான்றிருச் சண்பைநகர்*
*போயே வருவல் புகறியென் பாய்புன்மை பூண்டுழலும்*
*பேயே யெனினும் பிரிவுரை யோதவுட் பேணுங்கொலோ*
*நீயே யுரைநின் பிரிவெங்கள் வாணுத னேரிழைக்கே.* (௬௧எ)

### நீடேனென்றவன் நீங்கல்.

*தொடைநிலை வேணிப் பிரான்கூடல் வாய்ச்சொன்முற் றாக்குறுநா*
*ளிடைநிலை யெய்தி னுடனெய்த லாமற் றிருநிலையும்*
*படைநிலை நோக்கி கழுத்திற்பொன் னேறப் பசும்பொனுங்கள்*
*கடைநிலை யிற்குவிப் பான்சென்று மீளுவல் காழிமட்டே.* (௬௧அ)

### பாங்கி தலைமகட்குத் தலைவன்செலவுணர்த்தல்.

*வலம்புரி நேர்நின் கழுத்திற்பொன் னேற்றியுன் வண்ணமுலைக்*
*குலம்புரி யும்பொ னிறக்கிடு பைம்பொன் கொணர்வதற்கே*
*புலம்புரி தோளன்ப ரின்றுசென் றார்மன மொன்றுநன்று*
*னலம்புரி காவற் கமைத்தரன் காழி நறுநுதலே.* (௬௧௯)

### தலைமகளிரங்கல்.

*சீரார் கவுணியர் போற்பாலை நெய்தல் செயவுமென்போ*
*ரோரார் மயில்செய வுங்கழ் றுளார்கொ லிறைபுகலித்*
*தாரார் புயத்தர் தமையு மெமையுந் தழூஉந்துயர*
*மோரார் பொருள்குறித் தேசாம் போயின தொத்ததன்றே.* (௬௨0)

### பாங்கி கொடுஞ்சொற்சொல்லல்.

*கயலார் புனற்பல் வயலார்தென் காழிக் கடவுள்வெற்பில்*
*வியலார் மயிலனை யாயார் பொருட்டன்பர் மேவியதோ*
*ரியலார் மழைக்க ணெனன்மெய்ம்மை யாக விரங்குவையே*
*யெலா ரறியவுங் கூடுமன் றோநின் னகத்ததுவே.* (௬௨௧)

### தலைவி கொடுஞ்சொற்சொல்லல்.

*அண்ணலென் பார்துயர் நண்ணு வகையரு ளண்ணல்வரைப்*
*பெண்ணு தரஞ்செய் பிராற்பணி யாரிற் பிறர்துயர*
*மெண்ணு மனமு மனமாகண் ணோட்ட மிலாதகண்ணுங்*
*கண்ணு வவர்பிறப் பும்பிறப் பாசண்மைக் காரிகையே.* (௬௨௨)

### வருதவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.

*காழியம் மானைக் கழுக்குன்றிற் போற்றுங் கழுகுமன்று*
*வீழியொண் வாய்மயில் வீண்கழு கொன்றுதன் மென்பெடைகற்*
*பூழிவெங் கான்வெயில் சாரா திறகுட் புகப்புரிதல்*
*வாழிகண் ணுற்றுமப் பாலை குவார்கொனம் மன்னவரே.* (௬௨௩)

### பருவங்கண்டு பெருமகள்புலம்பல்.

கதிக்கும் புகலிப் பிரான்றிரு நீற்றிலிக் கானகத்துத்
திதிக்குந் தளவம் விளர்த்தன கொன்றை சிவந்தனமெய்
பதிக்கு மவன்மெய் வலத்தி னிடத்திற் பசந்தனதோண்
மதிக்குங் களத்திற் கறுத்தன காரன்பர் வந்திலரே. (௩௨௪)

### இதுவோ வம்பென்றல்.

மருவ மருவ வினிக்கும் பிரான்சண் பைவாணர்வெம்மை
பொருவ வருவி மழையெனச் செய்யுளொன் றேர்புலவன்
றிருவ முறச்செயப் பெய்ததென் றேருந் திசைமுற்றுங்கார்ப்
பருவ மிதுவெனல் வம்பேநம் பேர்கொள் பணிமொழியே. (௩௨௫)

### இறைமகள் மறுத்தல்.

நனையின் றனபசுங் கொன்றைக டோன்றி நகமலரு
முனையின்ற முத்தலை வேலண்ணல் காழி முதுகுன்றின்மின்
றனையின்ற கார்ப்பரு வம்பொய்ம்மை யாலெனச் சாற்றுநின்சொ
லனையின்ற தாய்வந்தி யென்னுஞ்சொற் போலு மிளங்கொடியே. ()

### அவர்தூதாகிவந்தடைந்தது இப்பொழுதெனத் துணைவிகூறல்.

நீர்வந்த தோணி புரத்தீசர் வெற்பி னிகழ்பருவக்
கார்வந்த தென்று கருதிநை யேலங் கடைமிறைக்கும்
பார்வந்த பொன்னொடு மார்வந் தவாதன்பர் பன்மணிப்பொற்
றேர்வந்த தோதநம் மூர்வந்த தாலித் திருமுகிலே. (௩௨௭)

### தலைமகள் ஆற்றல்.

பழியே யறநல் வழியே யுலகம் பரிப்பவர்சொல்
விழியே யலர்செயு மாறெழுங் காழி விமலர்செவ்வாய்
மொழியே யெனத்துணிந் தேனினி முன்னலென் முன்னுகடற்
குழியேய் தரக்கொள் புனன்மான் குளப்படி கொள் புனலே. (௩௨௮)

### அவன் அவட்புலம்பல்.

கார்கொடி தென்னுங்கொல் கூடலு ரூது கவிழ்க்கும்விழி
நீர்கொடி தென்னுங்கொ லென்னைச் சுமந்து நிகழ்தருமித்
தேர்கொடி தென்னுங்கொ லூர்கொடி தென்னுங்கொ றீரரிய
நார்கொடி தென்னுங்கொ னம்மான் புகலி நறுநுதலே. (௩௨௯)

### தலைமகன் பாகனொடுசொல்லல்.

ஆரோடு கொன்றையுந் தும்பையுஞ் சூடு மழகரம
ரேரோடு வாழ்வயற் காழியில் வாழி யியல்வலவா
பீரோடு சிந்துகண் ணீரோடு வாடுமோர் பெண்முனமிக்
காரோடு முன்னநந் தேரோடு மாறு கருதுகவே. (௩௩௦)

தலைமகன் மேகத்தோடு சொல்லல்.

தெண்ணீர் பருகி யெழுமுகில் காணந் திருந்திழைமு
னண்ணீர் நணுகி லிறையவர் காழிநண் ணாரிலிரு
கண்ணீர் பொழியுமவ் வெங்கீ ரமலைகைந் நீர்நிகர
மண்ணீ ருலகெனப் போர்க்குமொண் டேரு மறிதருமே. (௩௩௧)

பாங்கிவலம்புரிகேட்டு அவன்வரவறிவுறுத்தல்.

வலம்புரி யேற்கு நலம்புரி வார்வண் டுழாயணிகா
வலம்புரி யேமெய்க் கிடுவடு கேசர் வரைநினக்க
வலம்புரி யேதமொன் றுண்டுகொ லோவன்பர் வந்தனர்வெள்
வலம்புரி யேயினி தார்க்கின்ற தோர்கொச்சை மாமயிலே. (௩௩௨)

வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

வள்ளிய வன்பர் வரவெனக் கோதியென் வான்றுயரந்
தள்ளிய சங்கமங் கம்புனை வார்திருச் சண்பைவள
ரொள்ளிய ஞானசம் பந்தப் பிரான்மு னொலித்தல்செயும்
வெள்ளிய முத்தின் றிருச்சின்னம் போன்று விளங்குகவே. (௩௩௩)

தலைமகன்வந்துழிப் பாங்கி நினைத்தமைவினுதல்.

நடத்தே பயில்கழ லார்சண்பை நாடன்ன நங்கைகொங்கைக்
குடத்தே நிறைந்தபொ னேக்காது வேறுபொன் கொள்ளநெடுங்
கடத்தேசென் றீருண்டு கொல்லோவம் மாதுங் கலங்கலினெஞ்
சிடத்தே பயிறல் வலத்தே யயில்கொ ளிறையவரே. (௩௩௪)

தலைவன் நினைத்தமைசெப்பல்.

படந்தொறுஞ் செம்மணி வாய்ப்பணி பூண்பரன் பங்கயப்பூந்
தடந்தொறு மன்ன மலிசண்பை நாடன்ன தாழ்குழலோர்
திடந்தொறு மேவிவெந் தீவினை யேனனி சென்றசென்ற
விடந்தொறு நீநின் மடப்பாவை யோடு மியங்கினையே (௩௩௫)

தலைவன் ஆற்றுவித்திருந்த அருமைவினுதல்.

கன்னு ருரித்தது போலென்னை யாண்ட கருணைப்பிரான்
றுன்னார் மதிலொரு மூன்றுஞ்சுட் டோன்சண்பைத் தொல்வரைவாய்ப்
பொன்னு ரணிமயில் யானும்பி னின்றங்குப் போகியபி
னென்னு ருயிரையெவ் வாறாற்று வித்திங் கிருந்தனையே. (௩௩௬)

தலைவியைப் பாங்கி ஆற்றுவித்திருந்த அருமைகூறல்.

கடல்சூழ் புகலிப் பெருமான் றிருநுதற் கட்பொலிவை
யடல்சூழ்வை வேலிறை வாசிறி தோதி யலர்ப்பகழி
யுடல்சூழ் வதுசற் றொழித்துநின் வாய்மை யுரைத்தளித்தேன்
மடல்சூழ் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய் மயிலினையே. ()



## வரைவுமலிவு.



### காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தல்.

ஆரு ரடங்க முனங்குண்டை யூர்ந்தெ லடங்கவுய்த்த
காரூர் குறளிற் புகலிப் பிரான்விற்ற கர்த்தெடுத்தாங்
கேரூர் களிறு மிசையேற் றுபுவந் திறக்கினநம்
மோரூர் முலைவிலை யென்றன்பர் நல்குபொன் னெண்ணுதலே. ()

### காதலி நற்றுயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

பொன்று வளமைப் புகலிப் பிரான்மணம் பூண்டுமுகின்
மின்று விமயம் புகுதரு கான்மகிழ் மேனையைப்போற்
குன்று விறலுடை யார்மணம் பூண்டு குறுகினம்மூர்
நன்று மணவணி கண்டாய் மகிழ்தரு நம்மினுமே. (௩௩௯)

### பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தல்.

மேற்று ரகையி னருப்பார் பொழிற்சண்பை வித்தகர்வெண்
ணீற்று ரடல்விடை யேற்று ரருளி னிறைமகிழ்விற்
போற்றுர் முடியிட றுங்கழ லார்தந்த பொன்முழுது
மேற்றார் நமரினித் தூற்று ரயலவ ரீங்கொடியே. (௩௪0)

### தலைமகள் உவகையாற்றது உளத்தொடுகிளத்தல்.

அரவெழுந் தார்க்கு மவிர்சடை யார்சண்பை யாளர்வெற்பி
னுரவெழுந் தார்க்கு முருவுடை யார்நம தூரகத்தே
வரவெழுந் தார்க்கும் பகலே யிகலின் மணமுரச
மிரவெழுந் தார்க்கு முருவ மிலார்முர செண்செயுமே. (௩௪௧)

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

மன்னும் புகலிப் பிரான்கட வூரில் வழுத்தொருவற்
றுன்னுங் கொடுஞ்சம னைத்தெறல் போலச் சுடரிலைவேன்
மின்னுங் கரத்தரிம் பாதுயிர்க் கூற்றம் விலக்கினரென்
பன்னுந் திறத்த தவர்வாழ்க வாழ்கவிப் பாரென்றுமே. (௩௪௨)

### தலைவி மணம்பொருட்டாக அணங்கைப்பராநிலைகாட்டல்.

செய்யே மலிசண்பை யார்பாற் கவுரி திருவடிகண்
மொய்யே ருருக்கு மணிபணிந் தாங்கிம் முதுகுன்றின்வாய்
மையே பொலிகண் மணம்பொருட் டாக மகிழ்ந்தணங்கைக்
கையே குவித்துப் பரவுதல் காண்கநின் கண்விடுத்தே. (௩௪௩)

### பராநிலைகண்டதலைவன் மகிழ்தல்.

நாதன்மை தாய களத்தான் புகலி நகுவரைமா
னோதன்மை சானம் மணம்பொருட் டாக வுவந்தணங்கைத்
தீதன்மை மேவ மலர்தூய்ப் பராவுத றோர்தரினங்
காதன்மை தானெஞ்ச மேவஞ்ச மேயிக் கடலகத்தே. (௩௪௪)

## அறத்தொடுநிற்றல்.

### கையறுதோழி கண்ணீர் துடைத்தல்.

ஆலத்தின் கீழுறை வார்காழி நாத ரருளனையாய்
கோலத்தின் கிள்ளை குளிர்மொழி பேசுங் குலவுபொழில்
காலத்தி னன்மலர் நல்கும்பந் தாடுங் கடிம்புமுண்டு
நீலத்தின் முத்தம் பிறப்பதற் கேதுசொல னீயுமையே. (௩௪௫)

### தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

பூண்பது வாளர வாக்கிதென் காழிப் பொருப்பிறைவற்
காண்பது நாமது காரண மாகக் கரிகுழைத்து
மாண்பது மேவப் புனைபூங்கை யோவும் வளையென்றொரீஇ
யேண்பது மாதனி போல்வாய் கலுழு மிருவிழியே. (௩௪௬)

### தலைமகன் தெய்வங்காட்டித்தெளிப்பத் தெளிந்தமை எய்தக்கூறல்.

பொன்னே பொருசடை யார்காழி நாதர் புகார்த்துறைவாய்
மின்னே கடற்றெய் வதங்காட்டி யன்பர் விரித்ததெல்லாங்
கொன்னே யலவென் றிருந்தேன் கயல்கொல் குருகினொடாங்
கென்னேமுட் கைதையு முண்டோது மோகரி யென்செய்வனே. ()

### தலைவன் இகந்தமை இயம்பல்.

போழுங் குளிர்மதி சூடும் பிரான்புக லித்துறைவாய்
வாழுந் தலைவர் கலந்தவந் நாளங்கு வைகுகொலை
சூழுங் குருகு கரியுமா யாமை துணிந்தஞரி
லாழும் படியெனை நீத்தடைந் தார்த மகனகரே. (௩௪௮)

### தோழி இயற்பழித்துரைத்தல்.

மேதக் கவர்புக ழுங்காழி மேய விறல்வடுக
நாதக் கடவுளை நண்ணுறி னீதுயர் நண்ணமயி
லேதக் கனமு னிசைத்தயர்ந் தார்பின்ன ரென்னிலிவ
ரோதக் கவர்மிக் கவர்யா ரிவரி னுணர்தரினே. (௩௪௯)

### தலைமகள் இயற்பட மொழிதல்.

அடியார் கருத்தின் படியார் பிறைகொண் டலங்கரித்த
முடியார்நஞ் சுண்டு முடியார் புகலி முதுகிரிவாய்
வடியார் மலர்க்குழன் மாதேழுற் சூளு மறந்தகலுங்
கொடியா ரெனினு மவரே யெனக்குக் குலதெய்வமே. (௩௰)

### தெய்வம்பொறைகொளச் செல்துவமென்றல்.

நொதுமல ரல்லர்தஞ் சூண்மறந் தாரென்று நோதலுறப்
புதுமலர் மாலைப் புயத்தாரைச் சீறல் பொறுத்தியென்று
விதுமலர் வாண்முகத் தாயெழு வாவப்பி மென்புழுகு
மதுமலர் தூவிப் பணிவாம் புகலி வடுகனையே. (௩௰க)

### தலைவி இல்வயிற்செறித்தமை இயம்பல்.

கற்றைச் சடையுடை யான்காழி நாதன் கயிலைவரைச்
சுற்றைப் புனைபொழி லூடுசென் றுடற்க தோகையென்று
ளிற்றைத் தினமன்னை யெய்த்தனள் போலுமெய் யேறியபி
ரொற்றைத் திகிரியுள் ளார்மாத ராயி துணர்ந்திலரே. (௩௰உ)

### செவிலி கனையிருளவன்வரக் கண்டமைகூறல்.

மைவாய் விழியொரு பாலார் புகலி மணிவரைப்பாற்
கைவாய் வடிநெடு வேலோடு வந்துநங் காளைநிற்கப்
பைவா யரவல்கு லாய்தா யிருணடுப் பார்த்தற்புதத்
தைவாய் முருகென் றெழிந்தா ளதுநந் தவப்பயனே. (௩௰௩)

### செவிலி தலைமகள்வேற்றுமைகண்டு பாங்கியைவினுதல்.

கனங்காவல் கொண்ட குழலாய் பொழிலெழிற் காழியினென்
மனங்காவல் கொண்ட பெருமான் வரையில் வயங்குதினைப்
புனங்காவ னீத்தபின் மெய்வேறு பட்டுநம் பொன்கைவளை
யினங்காவ லோவி யொழிவதற் கேது வியம்புகவே. (௩௰௪)

### வெறிவிலக்கல்.

சொல்லவந் தீரிக் குடில்வா யரன்சண்பை துன்னலரிற்
பல்லவந் தீர்கொம் பரின்மெலி வாளுட் படர்தருநோய்
வெல்லவந் தீர்கொல் வெறிவேல ரேயிவ் வெறுந்தகரைக்
கொல்லவந் தீர்கொல் சொலவேண்டுங் கோபங் கொளாதெனக்கே.()

### வெறிவிலக்கியவழிச் செவிலி தோழியைவினுதல்.

குறியாட்டை மன்று ணவில்வார் புகலிக் குழகர்வெற்பிற்
செறியாட்டை யென்னிலு நீகண்டு ளாய்கொ றிருந்திழையே
மறியாட்டை யீர்ந்து முருகனுக் கீந்துந மங்கையுய்ய
வெறியாட்டை யாற்றிடுங் காற்றடுத் தாய்சொல் விளைந்ததென்னே.()

### தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

ஆரணு ர் புகலிக் கடற்றுறை வாய்வண்ட லாட்டிற்கைதை
வாரணு ர் மடல்குரு கென்றனள் யான்மட லென்றனனென்
ஈரணு ர் தரச்செ யெனக்கலுழ்ந் தாளது கண்டுவினைந்
தாரணு ரொருவர் முறித்தளித் தேகின ருள்ளதிதே. (௩௫௭)

### புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

மருதுறை யேகன் புகலிப் பிரான்வள நாட்டுநதி
யொருதுறை மூழ்கவுண் ணீரீர்த்த லான்மற் றொருதுறைபோய்க்
கருதுறை நாவுக் கரசெனத் தோன்றுமக் காலையினோர்
விருதுறை வேலவ னுற்கரை யேறினன் மெய்ம்மையிதே. (௩௫௮)

### களிறுதருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

வாரேறு பூண்முலை பங்கர்தென் காழி வரைப்புனத்துக்
கூரேறு கோட்டுக் களிறொன்று சீறிக் குறுகவினைந்
தேரேறு கோதை நடுக்குற்று வீழ வெடுத்தணைத்தாங்
கோரேறு போல்வந் துதவின ரான்முன் னுதவினரே. (௩௫௯)

### மணம்விலக்கல்.

அற்றார்க் கருளும் பிரான்காழி நாத னருளியநா
ளுற்றார்க் குரியவர் பொற்றொடி யாரென் றுணர்த்துதலான்
மற்றார்க் குரிமை யுளதாகு மோவென் வகுப்பதன்னை
நற்றார்க் கருங்குழற் செவ்வா யொளிர்வெண் ணகைமணமே. ( )

### தலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியை வினாதல்.

கங்கா தரர்தென் கழுமலத் தீசர் கழனிணைவார்
தங்கா தரம்பொரு வப்போம் வளைகளத் தாளமைத்த
பொங்கா தரமெங்கும் போர்ப்பது போலெங்கும் போர்த்தெழுபொன்
மங்கா தரகர வென்னுற்ற தோநம் மயிற்கணங்கே. (௩௬௧)

### செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்.

மாறுறு பாகத்தர் தென்காழி நம்மகள் வாயின்முலைப்
பாறுறு மின்னும் புறந்தோன் றினவல பல்லுமுதிர்
கூறுறற் றென்ன முதுக்குறைந் தாளினிச் சொல்வதென்யான்
றேறுறு பூங்குழ லன்னை யினித்தக்க செய்கைநன்றே. (௩௬௨)

### நற்றாய் தமருக்கு அறத்தொடுநிற்றல்.

குருத்துக் கிசைந்த பொடிபூசு மேனியர் கோயில்கொடென்
மருத்துக் கிசைந்த மணிமாடக் காழி வரைநமர்காண்
முருத்துக் கிசைந்த முகைமூரன் மாது முதுக்குறைந்தாள்
கருத்துக் கிசைந்த வரைநாடி யாற்றுங் கடிமணமே. (௩௬௩)



## உடன்போக்கு.



### பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல்.

பொல்லா மலமொழிப் பார்காழி நாதர் பொருப்பிறைவா
வில்லா நுதல்பிரி வாற்றுள்பொற் கொங்கை விலைக்குலகை
மெல்லா மளிப்பினு மீயா ரெமரிஃ தெண்ணினரு
ரொல்லாநின் னூருக் குடனழைத் தேகுத லுத்தமமே. (௧௬௪)

### தலைவன் உடன்போக்கு மறுத்தல்.

முடியைந் துடைய பிரான்காழி வாணன் முதுகிரிவா
யடியைந் தெடுத்துவைத் தைங்காத மென்றஞ்சு மாயிழையை
வடியைந்து பாற்குழ லாய்கொண்டு செல்ல மனங்கொள்வலோ
கடியைந் துடைய விரதிய ரேசெலுங் கானகத்தே. (௧௬௫)

### பாங்கி தலைமகனை உடன்படுத்தல்.

ஆலை மலியும் வயற்காழி நாத ரருள்கலந்த
வேலை மறமு மறமா மருளும் விரும்பருளா
நூலை மதிக்கு நினைக்கலந் தாலெங்க ணூலிடைக்குப்
பாலை மருதமன் றேவினி யாது பகர்வதுவே. (௧௬௬)

### தலைவன் போக்குடன்படுதல்.

நண்ணிய நாயகன் றென்காழிச் சம்பந்தர் நோக்கமெய்யி
லண்ணிய வெப்பம் வழுதியற் றுங்கெனை யாண்டுகொண்ட
புண்ணிய மாமயி ளேக்கவெம் பாலையிற் பொங்குவெப்பந்
தண்ணிய தாகுமென் றேதுணிந் தேனின் றனிக்கருத்தே. (௧௬௭)

### பாங்கி தலைவிக்கு உடன்போக்குணர்த்தல்.

சேலை யவாவு வயற்காழி நாதர்பஃ றேவரெற்பு
மாலை யவாவு சடையார் கயிலை மயிலனையா
யோலை யவாவு செவிகுவி மாமுலை யுங்களன்னம்
பாலை யவாவுங்கொ லென்றார்நங் காவலர் பைங்கொடியே. (௧௬௮)

### தலைவி நாணழிபிரங்கல்.

எண்பிறப் பைத்தவிர்த் தார்காழி நாத ரிமயத்தினு
ணண்பிறப் பைத்தர லானம் பிறப்பு நகுபிறப்பே
யொண்பிறப் பைத்தரு வண்காரைக் காலம்மை யோர்ந்தலவோ
பெண்பிறப் பைத்தவிர்த் தற்று ளொருகரும் பேய்ப்பிறப்பே. ()

### கற்புமேம்பாடு பாங்கிபுகறல்.

பூவனை யாய்நினைக் கோதுவ தென்னை புகலியினந்
தேவனை யேயருச் சிப்பார்க்கு மாமந் திரங்கிரியை
பாவனை, நாண மடமச்சங் காண்குலப் பாவையர்க்கு
மேவனை யார்க்கன்பு தேரினை யார்க்கு விரும்புகற்பே. (௩௭௦)

### தலைவி ஒருப்பட்டெழுதல்.

நாறுங் கடுக்கைச் சடையார் புகலிநல் லார்பலர்வாய்
கூறுங் குறிப்பு மனைமா ரியற்று கொடுஞ்சிறையு
மேறும் பசப்பு மதவே டுடிப்புமற் றெய்துமிடை
யூறுங் கெடுப்பவின் னேயொரு நாளன்ப ரோடுசென்றே. (௩௭௧)

### தலைவி ஒருப்பட்டெழுந்தமை பாங்கி தலைவற்குணர்த்தல்.

பந்துங் கழங்குமென் கைக்கொடுத் தாளுட் பரிந்துகண்ணீர்
சிந்தும் பசுங்கிளி சிந்தாது போற்றிச் சிறப்பியென்றாள்
சந்துங் கறியுஞ் செறிபொழிற் குள்ளந் தளரலென்றாண்
முந்துங் களிற்றண்ண லேயரன் காழி முகிழ்நகையே. (௩௭௨)

### பாங்கி சுரத்தியல்புரைந்துழித் தலைமகள்சொல்லல்.

மறைக்குந் திருநெடு மாற்குமெட் டான்சண்டை வாணுதலா
ரிறைக்கு மலர்க்கு மதவே ளலர்க்கு மிலகுறுவான்
பிறைக்குங் குறைக்குந் தனிமைக்குந் தாயர் பெருக்குகொடுஞ்
சிறைக்குங் கொடியது வோவன்ப ரோடு செலுஞ்சுரமே. (௩௭௩)

### பாங்கி தலைமகளைத் தலைமகற்குக் கையடைகொடுத்தல்.

யான்செயும் விண்ணப்ப மீதுநற் றாய்தந்தை யான்றவனீ
மான்செயு நோக்கிக்கு நின்னருண் பாறுறின் மாலயன்மேன்
மீன்செயு நீர்த்தடங் காழிப் பிரான்றிரு வீழிப்பிரான்
றான்செயும் பேரருண் மாறுறு மோர்தி தராதிபனே. (௩௭௪)

### பாங்கி வைகிருள்விடுத்தல்.

பற்றுமுன் மேவும் பரன்காழி நோக்கியிப் பாவையொடு
சற்றுமுன் போதிரிவ் வைகிருள் வாயெங்க டாய்நமரை
யுற்றுமுன் கூறுவ கூறியிவ் வூர்க்கௌவை யோவச்செய்து
மற்றுமுன் னேவந்து கூடுவ ஞனிற்பன் மன்னவரே. (௩௭௫)

### தலைவன் தலைவியைச் சுரத்துய்த்தல்.

மணம்புரி நாளம்மி யேற்றலெவ் வாறென்று மாழ்குறுமென்
குணம்புரி காரிய மிக்கழ காயிற்று கோமளமே
பணம்புரி பாப்பணி யார்காழி யெண்ணலர் பற்றுவெம்மைக்
கணம்புரி காட்டுண் மெலப்பெயர்ப் பாய்திருக் கான்மலரே. (௩௭௬)

### தலைமகன் பொழில்கண்டுவியத்தல்.

சுந்தரர் தென்குரு காவூர்க்குச் செல்வழித் தோன்றுமொரு
பந்தரின் ஞானசம் பந்தர்க்குத் தோன்றுமொர் பந்தரினிற்
சுந்தர மார்சண்பை யாள்வா ரருளிற் றெருகுநிழலின்
பந்தரு சோலையொன் றுற்றது காணம் படர்தெறவே. (௩எ௭)

### தலைமகன் தலைமகள் அசைவறிந்திருத்தல்.

மருக்கோல வார்குழன் மாதே பரிதி வழங்கழலு
முருக்கோல மார்நின் முகமா மதிநல் குறுபுனலு
மிருக்கோல மிட்டு முணரான் புகலி யெனவடுத்த
திருக்கோலக் காவி னிருந்தொழிப் பாம்பின்பு செல்லுவமே. ()

### தலைவன் தலைமகளை உவந்தலர்சூட்டி உண்மகிழ்ந்துரைத்தல்.

மையோ வெனுங்களத் தார்காழி நாதர் வழங்கருளாற்
பொய்யோ வெனுமின் னிடைகூந்தன் முன்செய்புத் தேடன்கையோ
வையோவக் கூந்தன் முடித்தமன் பூவு மணிதல்செய்யென்
கையோ சிறந்தன யாருரைப் பாரிந்தக் கானகத்தே. (௩எ௯)

### கண்டோர் அயிர்த்தல்.

புன்முளை யாவிந் நெடுங்கொடுங் கானம் புகுநரல்லர்
நென்முளை யாமென் மலங்கெடுத் தாள்சண்பை நித்தனருண்
மன்முளை யாமுரு கோவிந்த நம்பிநல் வள்ளியெனு
மன்முளை யாமதி போன்முகத் தாள்கொலிவ் வாயிழையே. (௩அ0)

### கண்டோர் மகிழ்தல்.

அணிகெழு மாதின் பிடிநடை காண வவள்பின்செலு
மணிகெழு தோள னரன்காழி யன்னவன் மால்களிற்றின்
றிணிகெழு போர்நடை காண்பா னணையன்பின் செல்லுமிந்தப்
பிணிகெழு கூந்த லெனில்பா ரிவரன்பு பேசுநரே. (௩அக)

### கண்டோரிரங்கல்.

கடந்தா ளலள்சிறு பேதைப் பருவாரிக் கன்னியன்றே
நடந்தாள் கணவன் பணிதலைக் கொண்டிந் நருகொடுங்கான்
றடந்தா ளுடைத்தருச் சூழ்சண்பை நாதர் சயிலத்துண்ணே
யிடந்தா ளலளிவ ளைப்பெற்ற பாவியென் னுகுவளே. (௩அ௨)

### கண்டோர் காதலின்விலக்கல்.

மெல்லியல் வாடு நகரணித் தன்றுவெய் யோன்விழுந்தா
னல்லிய லாழி யகம்புரன் காழி யணுகலரிற்
கல்லியல் காடுபல் கானியா றியங்குங் கடுங்கொடுமா
வல்லிய ரேளவெம் மிற்றங்கி யேகுக மாதொடின்றே. (௩அ௩)

கல்லோர் தம்பதியணிமைசாற்றல்.

மின்னு வெனநுடங் கும்மிடை யாளொடு வேல்வலங்கொண்
மன்னு விளைய கழிப்பாலை முல்லை வனமிரண்டும்
பின்னுக நீநடந் தாலெதிர் தோன்றும் பிறந்துழல்வோர்
முன்னு வமலமுன் னேனுறை காழி முதுநகரே. (௩அச)

தலைவிக்குத் தலைவன் தன்பதியணிமைசாற்றல்.

உடல்சூழ் பிணிக்கு மருந்தாக மண்ணிட் டுகைபொழிக்கு
மிடல்சூழ் புகழ்த்திரு வேணுநர் கடந்து விரவுவமேன்
மடல்சூழ் கருங்குழ லாய்காண லாமின்னும் வந்துகருங்
கடல்சூழ் வதுபொரு வும்பொழில் சூழ்பரன்காழியையே. (௩அரு)

தலைவிக்குத் தன்னகர்காட்டல்.

நல்லாய் நயனம் விடுத்தெதிர் காண்க நருகடலே
வெல்லா யகலக வென்றுகை நீட்டி விலக்குதல்போல்
வல்லாய் கொடிதுவள் பொற்கோ புரமு மணிமதிலுஞ்
செல்லாய்செய் குன்றமுஞ் சூழ்பரன் காழித் திருநகரே. (௩அசு)

தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

திகழும் பிரம புரமிஃ தப்பெயர்த் தீர்த்தமிது
நிகழும் பிரமலிங் கேசரி வீது நிலையமுகி
புகழுமி வீதிது தோணிப் பிரானில் புகுந்துபொற்
நகழும் வடுகனி வீதிது சப்பந்த ஞரின்மின்னே. (௩அஎ)

தலைவன் தலைவியோடு தன்மனைசார்தல்.

சொல்லிய சீர்த்திருக் காழிப் பிரான்றனி சூழ்ந்திறைஞ்சிப்
பல்லிய மார்ப்ப மறுகூடு சென்றுபல் லாண்டிசைப்ப
வல்லிய நேர்விறன் மன்னன்மின் னொளொடு பாவிகையுட்
புல்லிய மங்கல மோங்கப் புகுந்து பொலிந்தனனே. (௩அஅ)



## கற்பொடுபுணர்ந்த களவை.



செவிலி பாங்கியைவினுதல்.

கல்லா தவர்கரு தாக்காழி நாதர் கயிலைவரை
நல்லா தரஞ்செய் பொழிற்கெழி லில்லை நமைப்பிரிய
வொல்லா மகட்குற்ற தென்னினக் குற்றதெ னூர்க்களவையெ
னில்லா விழிமுகம் போனம்மி லாயதெ னேந்திழையே. (௩அகூ)

### பாங்கி செவிலிக்குணர்த்தல்.

கண்ணு ணுதற்பெரு மான்காழி நாதன் கருணைகொடு
மண்ணு ளொருவலி யான்மண மேற்றிலர் வன்கணமர்
புண்ணுண் மனத்த ரைமையுஞ் சுரத்துப் புழுங்கழலு
மெண்ணு ணடந்தன ளன்னையின் றேதின் னிளங்கொடியே. (௩கூ0)

### பாங்கியினுணர்ந்தசெவிலி தேற்றுவார்க்கு எதிரழிந்துமொழிதல்.

அறவே தனையுளை யாறுகென் பீர்சண்பை யண்ணலரு
ளுறவே முயலுந ரொத்துறங் காமலுண் ணுமலரு
ரறவே துயிற்றி யருத்தி வளர்த்ததற் காகவப
லுறவே பொருளெனக் கொண்டுசென் றுளென் னொருமகளே. ()

### செவிலி தன்னறிவின்மைதன்னை நொந்துரைத்தல்.

புகராய் பவர்க்கொழிப் பார்காழி நாதர் பொருப்பிளமா
னிகரா யினுமின் முருகோடி யாரையு நீத்துவள்ளி
நகராய் தரமுனஞ் சென்றதற் கேதுவெ னுடியன்னுப்
பகராயென் றுணென்ன லம்முன்ன மோர்ந்திலன் பாவியனே.(௩கூஉ)

### செவிலி தெய்வம்வாழ்த்தல்.

மின்னுங் கொடுங்குன் றா ளார்காழி நாதரை மேவலர்போன்
மன்னுங் கொடுஞ்சுரஞ் சென்றவண் மீண்டு வரப்புரியிற்
கொன்னுங் கொடுமுடி வாழ்முரு கேயெங் குலைத்தொருபெ
ணின்னுங் கொடுத்துந் தொழும்பாகு வேமுனக் கெற்றைக்குமே ()

### செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்றல்.

கயலார் கருங்கண் சுனேவீழ வன்று கலங்கெடுத்த
மயலார் களிற்றண்ண னிற்கமற் றோர்க மணமிசையு
மியலார் நமரென்று சொல்லாது வெஞ்சுரத் தெய்தினண்மின்
பயலார் புகலியன் னுய்நங் கொழுந்தென்ன பண்ணுதுமே. (௩கூச)

### நற்றாய் தன்னுளிரங்கல்.

ஊரும் பிறைமுடி யார்காழி நாத ரொருவர்வரை
சேருங் கிளியொடு பூவையும் பாவையு நீத்திருகண்
வாரும் புனல்கொடு கைத்தாயும் பாங்கியும் வாடவழல்
சேருஞ் சுரத்தடைந் தாய்மக ளேயென்ன செய்குவையே. (௩கூரு)

### நற்றாய் பாங்கிதன்னெடுபுலம்பல்.

பாவா யிதுமுன் பகர்ந்தா யலைபகர்ந் தாலுடனே
யேவாய் சிலைத்தடந் தோளான் றிருமண மெய்துவள்பூங்
காவாய் புகலிக் கடவுள்பொற் பாதங் கருதலரிற்
பூவாய் குழலியை வீணே யருஞ்சுரம் போக்கினையே. (௩கூசு)

தோழியழுங்க நற்றாய்புலம்பல்.

அறியாப் பருவத் தறிவே தலைக்கொண் டருந்துயரங்
குறியாச் சிறிய ளயலான்பின் வெஞ்சுரங் கூடுதனன்
னெறியாக் கருதினள் சண்பைப் பிரான்வரை நீயென்செய்வாய்
மறியாப் பொலிகண் மகளே வருந்தி வருத்தலையே. (௩௯௭)

நற்றாய் பாங்கியர்தம்மோடு புலம்பல்.

பெற்று வளர்த்த வெனைமறந் தாள்பிரி யாதமரும்
பற்று வளர்த்த வுமைமறந் தாள்பதிப் பற்றடையிற்
சுற்று வளர்த்த துணர்ப்பொழிற் காழித்தொல் லோனுதற்றீ
மற்று வளர்த்த சுரம்போக வேண்டுங்கொன் மங்கையரே. (௩௯௮)

நற்றாய் அயலார்தம்மோடு புலம்பல்.

கொன்னார் மறுகவுங் கைத்தாய் துயரிற் குறுகவுஞ்செம்
பொன்னார் வதனஞ் சிறுகவும் பாங்கி புரத்தமர்வீர்
தன்னார் கழுமல மாகக்கொண் டானருள் சாரலரின்
மன்னா ரழற்சுரஞ் சென்றா ளவண்மன வன்மையென்னே. (௩௯௯)

நற்றாய் தத்தையொடுபுலம்பல்.

கள்ளாய் மலர்க்குழல் காழிப் பிரான்வரைக் கானையுரைக்
குள்ளாய் நடப்பவள் வள்ளாய்முன் னேனை யொருங்குவிட்டா
டள்ளா புனைச்சுற்று மெள்ளாய்கள் ளாயென்று சாற்றிமெலி
கிள்ளா யுனையுங்கை விட்டா ளினியென் கிளப்பதுவே. (௪௦௦)

நற்றாய் தலைமகள்பயிலிடந் தம்மொடு புலம்பல்.

கள்வார் கணையுடைக் காமனைக் காய்ந்த கனல்விழியோன்
வள்வார் முரசதி ருங்காழி யோன்வரை மன்னனையே
யுள்வார் குழலாட் கேதுரைத் தாளிங் குறுவதென்று
கொள்வா ரெவர்நும் மலர்சுனை யேநனை கூர்பொழிலே. (௪௦௧)

நற்றாய் நிமித்தம்போற்றல்.

வரைந்தாலிவ் வாறு வரலின்று காண்வரை யாமலிப்போ
திரைந்தாற் பயனெ னிருங்காழி யார்வரை யேந்தலொடு
விரைந்தா ளிளந்தளிர் மெல்வயிற் றென்மகண் மீண்டுவரக்
கரைந்தா னிணப்பலி யின்னே கொடுப்பல் கருங்கொடியே. (௪௦௨)

தலைவன் மிக்கன்புசெய்கவென்று தெய்வம்பரவல்.

பிணியார் மலர்க்குழல் சென்றாள் சுரத்திலப் பேதைக்குள்ள
பணியார் புரிவர் மணவாள னேமுற்றும் பண்பிற்செய
வணியா ரவன்றிரு மார்பே துயிலிட மாகவருண்
மணியார் மதிற்சண்பை வாழ்வடு காநின்னை வாழ்த்துவனே. (௪௦௩)

நற்றாய் சுரந்தணிவித்தல்.

சந்தாபந் தீர்த்தென்னை யாள்வோன் புகலித் தனிமுதல்வ
னந்தா வருளி னியல்கதி ரேயுன்னை நான்றொழுதேன்
முந்தா வழற்சுரந் தண்மைசெய் தேமுத்த மூரன்முகச்
செந்தா மரையை மலர்த்தியல் பேயத் திறநினக்கே. (௪௦௪)

நற்றாய் தன்மகள் மென்மைத்தன்மைக்கிரங்கல்.

பூமென் மிதிப்பினுந் தீமென் மிதித்தது போற்பதைப்பாள்
காமே லணைவு புகலிப் பிரானுதற் கட்டழலுஞ்
சேமே லவன்சடை நீர்போற் குளிரச் செறிதழற்கா
னாமே னுரைப்பதெ னாமே துணிந்து நடப்பதற்கே. (௪௦௫)

நற்றாய் தன்மகள் இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.

உட்டா னமர்ந்தென்னை யாள்வோன் புகலி யொருவன்வரைக்
கட்டா னுணன்முலைப் பாலையல் லாற்பதங் கண்டறியாண்
முட்டா னெனவெம் பரல்செறி கான்சென்று முன்னமங்கை
தொட்டான் பணிசெயக் கற்றதெங் கோவெத் துணிபிதுவே. (௪௦௬)

நற்றாய் அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்.

பூசையை போவத்துக் காணினு மஞ்சிப் புழுங்குமுளத்
தாசையை யோவென் னுரைக்கேன் செடிக்கொவ்வொன் றாகமுழங்
கோசையை போவரும் வெம்புலி துஞ்சு மொருகடத்தி
லீசையை யோவரி யான்காழி மாமயி லென்செயுமே. (௪௦௭)

கண்டோரிரக்கம்.

காவி விளர்க்க களத்தான் புகலிக் கயிலைவரை
யாவி நிகர்த்தவள் சென்றாள் சுரத்தவ ளாடிடமு
மேவி யிருக்கு மிடமுங்கண் டான்முன் விழைந்துபெற்ற
பாவி வயிற்றிடை மூளா தவியுங்கொல் பற்றழலே. (௪௦௮)

செவிலி ஆற்றத்தாயைத் தேற்றல்.

பொற்பே மலியும் புகலிப் பிரான்பொற் பொருப்பிடைத்தன்
கற்பே நிறுத்தப் புகுந்தாட்கிவ் வாறு கலங்கலன்னாய்
வெற்பே முதலிய வெல்லா நிலமும் விரைந்துதுரீஇ
யற்பேகொ ளண்ண லொடுமாதை மீட்ப லறிதியின்றே. (௪௦௯)

முக்கோற்பகவரை வினாதல்.

பதியிய லிற்றுப் பசுவிய லிற்றுவெம் பாசவகை
மதியிய லிற்றென் றுணர்ந்தேழ் வகைப்பவ வாய்மணிட்டமர்
நதியியல் செஞ்சடைக் காழிப் பிரானைநண் ணாரினிந்தக்
கொதியியல் கானொரு காளையொ டோர்மின் குறுகினளே. (௪௧௦)

### மாவிரதியரை வினாதல்.

மொழிதரு பஞ்ச வடியோ டடிப்பஞ்ச முத்திரையுங்
கழிதரு மெற்பணி யும்புனை வீரிக் கடத்துவழி
விழிதரு நெற்றிப் பிரான்காழி நாதனை மேவலர்போற்
பொழிதரு மேரொரு பூவையொர் காளைபின் போயினளே. (௪௧௧)

### உய்த்துணர்வோரை உரைமினென்றல்.

எல்லா வுயிர்க்கு முயிராய காழிக் கிறையவனை
நல்லா தரத்தழ லிற்கண்டு போற்றிடு நான்மறையீர்
பொல்லா வழலிச் சுரத்தொரு காளைபின் போகியமா
னெல்லா வெனவெதிர் மீளுங்கொ லோவுணர்ந் தோதுமினே. ()

### மிக்கோர் ஏதுக்காட்டல்.

மாதே யுலகிய லோர்ந்திலை யாலன்பு வைகுமுள்ளப்
போதே யமரும் புகலிப் பிரான்றென் பொதியவரை
மீதே பலாமுற் றருவின் கனிகள் விரும்புநர்க்கே
தீதேயி னின்மக ளும்மன்ன ளாமென்று தேருதியே. (௪௧௩)

### செவிலி எயிற்றியோடுபுலம்பல்.

அறப்பாவை பாகர் பிரமவிங் கேச ரவணியுண்மா
னிறப்பாவை வாழ்சண்பை யூருடை யானொடு நேயமிக்கோர்
குறப்பாவை வந்தன ளோகொடு வேங்கைப்பல் கோத்தணிந்த
மறப்பாவை யேயுண்மை யோதுபு கோடி மலியறமே. (௪௧௪)

### செவிலி குரவொடுபுலம்பல்.

தற்றா யொடுதந்தை யில்லான் புகலித் தடவரைவாய்
நற்றாய் வருந்தநின் னையமுந் தேம்பநல் லூர்மறுக
வுற்றாய் நினக்குத் தகாதென்று நீயென் னொருமகட்குச்
சொற்றா யலைநின் றளாய்பயன் யாது துணர்க்குரவே. (௪௧௫)

### செவிலி புறவொடுபுலம்பல்.

வல்லா யெழுமுலை வெங்கா னடைய வழிமறித்து
நில்லா யெனத்தகைந் தாயிலை யேசெல்ல நீவிட்ட
பொல்லாயுன் வன்மை யுணர்ந்தல்ல வோபுற வேயுணவு
கல்லாய் முடிய வகுத்தான் கழுமலக் கண்ணுதலே. (௪௧௬)

### சுவடுகண்டிரங்கல்.

சிற்பங் கதிர்க்கு மதிற்காழி நாதன்செம் மேனியில்வெண்
கற்பங் கதிர்க்கும் படிபுனை வோன்றிருக் காளத்திவா
யற்பங் கதிர்க்கு மருங்குனல் லாள்சிற் றடியிதது
பொற்பங் கதிர்க்கும் புயத்தா னடியென்று போற்றுவனே. (௪௧௭)

கலந்துடன்வருவோரைக் கண்டுகேட்டல்.

இன்பார் முருகனும் வள்ளியும் போல வெதிர்வருவீ
ரன்பார் மொழியென் னஞர்கெடு மாறென் றறைமினிந்த
வன்பார் நும் போல்வ ரொருதோன்ற லும்மொரு மாமயிலு
மென்பா ரணிசடை யோன்காழி நோக்கியின் றெய்தினரே. (௪௧௮)

கலந்துடன்வருவோர் புலம்பலேற்றல்.

யானெதிர் கண்ட வெழில்வள ரேந்தலு மிம்மடமான்
றானெதிர் கண்ட மடமானும் போயின்று சார்வர்கரு
வானெதிர் கண்டனம் மாதேவன் சங்கரன் வானவர்கோன்
கானெதிர் கண்ட பொழில்சூழ் புடுத்த கழுமலமே. (௪௧௯)

செவிலி புதல்வியைக்காணாது கவலைகூர்தல்.

படைபோ லொளிர்கண் ணொருபாற் பரன்சண்பை பாடுதலில்
கடைபோன் மெலியு மெனக்கெங்ஙன் வாயுண்டு காணகர்போய்
விடைபோ னடையொரு வேந்தன்பின் மேனசென்ற மெல்லியலா
ளிடைபோன்மற் றுள்ள வுறுப்பொன்றுங் கண்டில னென்பதற்கே.()



# மீட்சி.



தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்.

சேரா ருயிருண் டுழல்வடி வேலுடைச் செம்மலொடு
வாரா ரிளமுலை வெங்கான் கடந்து மருவினளின்
றோரார்த முள்ளத் தொளிப்பா னளிப்பா னுயிரளிக்கக்
காரார் களத்த னுறையு நிறையுங் கழுமலமே. (௪௨௧)

உடன்போய்வரைந்த நெடுந்தகை மீட்சியுரைத்தல்.

வண்டாள் குழலை வடிவே லவனருண் மாட்சியினந்
தொண்டாள் பரமன் புகலியிற் றன்மனை துன்னிமணம்
பண்டாள் விதஞ்செய் தமர்நாணம் மானம் பதிநினைத்துக்
கொண்டா னுணர்ந்தது மீண்டன னலக் குரிசிலின்றே. (௪௨௨)

தலைவன் தம்மூர்சார்ந்தமை சாற்றல்.

விதுகா ணரிய கழற்சண்பை நாயகர் வெற்பதுமற்
றதுகாணின் னுயத் துடனீ பகல்விளை யாடுமிட
மிதுகா ணுனைமுத னன்வந்து கண்ட விரும்புனமற்
றுதுகா ணிரவுக் குறிகொண்டு முன்பயி லோவிடமே. (௪௨௩)

### தலைவி முன்செல்வோர்தம்மோடு தம்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்.

பூமா னொடுகலை நாமான் மருவும் புகழ்ப்புகலி
யோமா னொடுபங் குமையையும் போற்றியெம் மூர்புகுவீர்
வாமா னொடுசம ரேற்குங்கண் ணுப மடந்தையர்க்குக்
கோமா னொடுசுரஞ் சென்றுள்வந் தாளென்று கூறிடுமே. (௪௨௪)

### முன்சேல்வோர் பாங்கியர்க்குணர்ந்தல்.

அருவார் சதுக்கொ ளுருவார் புகலியன் னீர்சுளுங்க
ளிருவார் முலையுஞ் செருவார் சிலைகொளொ ரேந்தலுமுள்
வெருவா ரணங்கு பொருவா ரொருவரை விட்டொருவ
ரொருவார் வழியில் வருவா ரிதுண்மை யுரைத்தனமே. (௪௨௫)

### பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தல்.

அன்னாய் முதலை கொடுபோன பிள்ளை யருட்புகலி
மின்னாய் சடைப்பெரு மான்றொழு ராற்பின்பு மீண்டதெனப்
பொன்னாய் கழல்வலி யோன்கொடு போயநின் பூங்கொடிமற்
றன்னாய் தருநன்மை யான்மீண் டனாளிவ் வரையுண்மையே. (௪௨௬)

### நற்றாய் தலைமகனுளங்கோள் வேலனைவினாதல்.

ஆலம் புனையுங் களத்தான் புகலியி லாய்ந்தொருமுக்
காலம் புனையு முணர்வுடை யீர்கழற் கால்விறலோ
னேலம் புனையுங் குழலா ளொடுமென திற்புகுமோ
கோலம் புனையுந் தனிற்புகு மோவுண்மை கூறுகவே. (௪௨௭)



## தன்மனைவரைதல்.



### நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினாதல்.

சிம்மனை வாயர வம்புனை வோன்வரைச் செல்வியெனு
மம்மனை வாய்திரு மேனிப் பிரானமர் காழியன்னாய்
நம்மனை வாயம்மி யோமண மாலை நகுபுயத்தார்
தம்மனை வாயம்மி யோமட மானடி தாங்குவதே. (௪௨௮)

### செவிலித்தா இதனை வரைந்தமையுணர்த்தல்

கண்டு வருந்திப் பியமொழி பாகன்றென் காழியுள்ளார்
மண்டு வருந்திப் புவிபுரப் பார்வரைந் தார்மணிவாய்த்
தண்டு வருந்திச் சுழியைபயென் றூர்வன் றனைமொழிகி
யுண்டு வருந்திப்பெற் றாட்கன்னை போயென் னுரைப்பதுவே. ()

### வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தல்.

பகலருங் கோளு மிகலரு நாளும் பலித்தனவென்
றகலருஞ் சீருடை யார்பரன் காழியி லாய்தொடியைப்
புகலருஞ் செல்வம் பொலியச்செய் தார்புதுப் பூங்கடியென்
றுகலரு மெய்ம்மொழி யோதுந ரன்னையெற் கோதினரே. (௪௬௰)

### தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கியம்புசென்றென்றல்.

தெங்குங் கமுகுங் கதலியுஞ் சூழுந் திருநகரிற்
பொங்கும் புகலிப் பிரானரு ளாலுங்கள் பூங்கொடியைத்
தங்கும் பெருமறை யந்தணர் சூழத் தழன்முனர்யா
மெங்கும் புகழ்மணஞ் செய்தாது மன்னைக் கியம்புகவே. (௪௬௧)

### தானது முன்னே சாற்றினனென்றல்.

வல்லாண்டு கொள்ளு முலையாளை மங்கல வாழ்த்துவிம்மப்
பல்லாண்டு மல்கப் பரன்காழி யின்மணப் பந்தர்நல்லோர்
சொல்லாண்டு நீமணஞ் செய்தாய்முன் னேயத் துணிபுணர்ந்தேன்
வில்லாண்டு வாழ்நுதற் றேமொளமர்க் கோதினன் வேலவனே. (௪௬௨)



## உடன்போக்கிடையீடு.



### நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவு உணர்த்திவிடுத்தல்.

ஒருவன் புடைகொள் கழுமல நின்றுமெம் மூர்புகுவீர்
மருவன் புடையென் றுணைவியர் பாலுங்கண் மங்கையென்பா
டருவன் புடைவனத் துங்களை யேநெஞ்சுட் டான்சுமந்தோர்
திருவன் புடையக லாதுசெல் வாளென்று செப்புமினே. (௪௬௩)

### தலைமகள் தன்செலவு ஈன்றட்கு உணர்த்திவிடுத்தல்.

தாவாத சண்டைச் சதாசிவற் றாழ்ந்தெழு தாழ்சடையீ
ரோவாத துன்பத் துழலுமென் றாய்முன முற்றுவகை
மேவாத வண்குடி யோர்ந்தொரு வேந்தன்பின் மேவினளை
யேவாத நின்மகள் சென்றாளென் றோது மிறைஞ்சுவனே. (௪௬௪)

### நற்றாய்க்கு அந்தணர்மொழிதல்.

அன்னாய் புகலி யரனடி யேமெங்க ளாசிகொண்மோ
மின்னாய் மருங்கு லொருவே லவனொடு மேவிநல்லோர்
முன்னாய் வழிச்செலக் கண்டே மனையண் முதுக்குறைவின்
றென்னாய் விளையுங்கொ லோவட மீனு மிறைஞ்சிடுமே. (௪௬௫)

நற்றாய் அறத்தொடுநிற்றலிற் றமர்பின்சேறலைத்
தலைவிகண்டு தலைவற்குரைத்தல்.

மூதண்ட கூட முடியாக வோங்கு முதல்வர்வெள்ளி
வேதண்ட வாணர் கழுமலஞ் சூழ்பெரு வீரையென
மாதண்ட நேர்புய மன்னுநின் மேலம்பு மாரிபெய்வான்
கோதண்டம் வாங்கி வளைந்தா ரெமரென் கொடுவினையே. (சகசு)

தமர்பின்சேறலைக் கண்டோர் இரங்கல்.

மெலியுங் கொடிநுண் ணிடையா ளொடுசெல் விடலையைப்பொன்
மலியும் புகலிப் பிரானையுன் னுனை வளைக்கும்வெய்ய
கலியுங் கடுவினை யும்போல் வளைந்தனர் கானவர்மேற்
பொலியுஞ் சமரிது பார்ப்பதிற் றேடம் புகும்புகுமே. (சகஎ)

தலைவியைத் தலைவன் விடுத்தகறல்.

தகையே மலிபுக லிச்சட்டை நாதர் தமதருளாற்
பகையே யெனில்வெங் களிற்றுக் குழாத்துட்பஞ் சானனம்பாய்
வகையே யெழுவனிற் பாய்வீ நுமரென வந்தமையான்
முகையே பொருமுலை யாயஞ்ச வேனிவர் முன்செலற்கே. (சகஅ)

தலைமகனுடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றுஅரற்றல்.

அரியார் மதலை யொடுசூழ் புகலி யமருமறைப்
பரியார் கயிலை வரைவா யெனைமுற் பயந்தவர்மு
னுரியார் வளைக்கவு மஞ்சினர் போலென் னுயிரனைய
பெரியார் புறங்கொடுத் தாரென்சொல் வேனிவர் பேறருளே. (சகக)



## வரைதல்.



சென்றோன்மீண்டுவந்து அந்தணரையும் சான்றோரையுமுன்னிட்டு
வரைந்துகொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துரைத்தல்.

அருகாத பூரணர் காழியிற் பாலுண்ட வையருமற்
றொருகா தலியு மணந்துட னேதம் முருக்குலைந்தார்
கருகாத மாலைப் புயவேந் தனுமிக் கனங்குழையுந்
தருகாத லின்மணந் தார்தளிர்த் தாருடன் றப்புருவே. (சசo)



## இல்வாழ்க்கை.



### தலைவன் தலைவிழன் பாங்கியைப்புகழ்தல்.

ஆன்மா புகலிப் பெருமா னடிக ளடையளவுந்
தான்மா முயற்சி தவாவருள் போற்றமி யேனறும்பூந்
தேன்மா வுணுங்குழன் மான்மா முலைத்துணை சேருமட்டு
மான்மா வனையகண் ணாய்முயன் றாயுன் மதிப்புநன்றே. (௪௪௧)

### தலைவனைப் பாங்கிபுகழ்தல்.

புடைக்குஞ் சிறுபசு வேய்முளை வானம் பொதுத்தெழுஞ்சீர்
படைக்கும் பணிவளை நன்னுடை வையர்சண் பைப்பெருநின்
னடைக்குநின் கேண்மைக் கொடைக்கு மவாவுபு நானறுஞ்சந்
துடைக்குங் குமமுலை நாணுமெண் ணேன்முய லுற்றனனே. (௪௪௨)

### தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

நாரலர் சிந்தை யகலார் புகலிமுன் னாளுரைத்த
சீரலர் சொற்படி பொன்புனைந் தேசெல்வி செல்வரின்று
வாரல ரென்றுகண் வாரல ரூருறை வாரலர்வேள்
போரலர் மாற்றிய நீவாழ்க வென்றும் புரவலனே. (௪௪௩)

### வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியைவினுதல்.

தடுப்பது முன்னி யிமைத்தலுந் தீர்ந்து தளவணங்கா
யுடுப்பது முண்பது மூன்னுது வந்தின் பொருங்குறுநீ
கடுப்பது தீர்பரன் காழியி லன்னையர் காவல்செய்நாள்
விடுப்ப திவர்செய்த நாளெங்ங னாற்றினை மெல்லியலே. (௪௪௪)

### தலைமகள் வருந்தாதிருந்ததற்குக் காரணங்கூறல்.

பூங்காது வார்குழை மாதொரு பாகர் புகலியிலெற்
றூங்கா தகன்றன ராயினுந் தாயினுந் தாமகத்தே
நீங்கா திவரிருந் தார்புறத் தேயொரு நீயிருந்தா
யேங்கா தியானுயிர் வாழ்ந்தேனிச் சார்புகொண் டேந்திழையே. ()

### பாங்கி தலைவனை வரையுநாளளவும் நிலைபெறவாற்றிய நிலைமைவினுதல்.

மோந்து மணைத்துந் தழுவியு நோக்கியு முத்தங்கொண்டுஞ்
சாந்தும் புழுகு மொழுகுமென் கொங்கைத் தலைதுயின்று
மேந்தும் பிறைச்சடை யார்காழி வாயிவ ளின்புறுநீ
நீந்தும் படியுற்ற தெவ்வாறு முன்ன நெடுந்தகையே. (௪௪௬)

### பாங்கி மணமனைச்சென்றசெவிலிக்கு இருவரன்புரைத்தல்.

நிகர்வா ரிலாத திருமலன் காழி நிறைவளையும்
புகர்வா ரயில்கொள் புயவேந் தனுமன்பிற் பூரணரே
நகர்வார் குழலிய ராடவர் போலலர் நாடினும்யார்
பகர்வார்மெய்ம் மாத்திரம் வேறிது நாஞ்செய்த பாக்கியமே. (௪௪௭)

### இல்வாழ்க்கை நன்றென்று பாங்கி செவிலிக்குணர்த்தல்.

மன்பா லடிசில் வறையல் கருனைகுய் வாய்புளிம்பா
கன்பானம் மான்கை துழந்தட்ட தேயிறை யார்தலினென்
றன்பா லருள்வைத்த கோன்காழி வாழ்பலர் தாநுகரு
மின்பாலன் னும்மிக வும்பொலி யாநின்ற தில்லறமே. (௪௪௮)

### மணமனைச்சென்றுவந்தசெவிலி பொற்றொடிகற்பியல் நற்றய்க்குணர்த்தல்.

விழியென்று தீநுதல் வைத்தோன் கழுமல வேதியர்த
முழியென்று பெய்யு மழையென்று கேட்ட வுலகமிகை
பழியென்று மோவுமன் னையின்றுன் செல்வி பயோதரமே
பொழியென்று கூறினப் போதே பொழியுஞ்செம் பொன்னையுமே.()

### செவிலி நன்மனைவாழ்க்கைத் தன்மையுரைத்தல்.

கொந்தார் குழலொரு பாலா ரார்வெங் குருநகர்வாய்ச்
சந்தார் வனமுலைத் தாழ்குழ னின்மக டன்மனைவாய்
வந்தார் பசித்தறி யாரொன் றும் பொங்கி வழிதரும்பா
லந்தா ரணிப்பொரு ளெல்லா மறையோன் றகங்கொண்டதே. ()

### செவிலி நற்றய்க்கு இருவர்காதலும் அறிவித்தல்.

காரிற் பொலிதண் பொழிற்பூந் தராய்ச்சங் கரனுமைபோ
லேரிற் பொலியுடம் பொன்றாக் குறையொன் றுண் டில்லிடத்தே
வாரிற் பொலிமுலை வைகுத லலண்ணன் மாற்றலர்வெம்
போரிற் பொலியவு மூர்மாவின் முன்னு றும் போதறினே. (௪௫௧)



## பரத்தையிற்பிரிவு.



### காதலன்பிரிவுழிக் கண்டோர் புலவிக்கு ஏதுவிதாமவ் விறைவிக்கென்றல்.

ஒண்மலர் தோறு நறவுண்டு வண்டுழ லூரனின்று
தண்மலர் வீதிவந் தான்முன்பு போந்துகை தாங்குவித்துக்
கண்மலர் நோக்கஞ்செய் தார்பான் காழிக்கண் ணாரிவனு
மெண்மலர் நோக்கஞ்செய் தான்மனை யூடுதற் கேதுவிதே. (௪௫௨)

### தனித்துழி இறைவி துனித்தழுதிரங்கல்.

நலத்தே வசிக்குங் குலபாதி னீத்து நவில்பதியில்
குலத்தே வசிக்கு மடவாரில் லேகுடி கொள்ளுதன்மும்
மலத்தே வசிக்கு மெமையெடுத் தாளும் வரதர்சண்பைத்
தலத்தே வசிக்கு மதுபோலு மானந் தலைவருக்கே. (௪௫௩)

### தலைவனைத் தலைவி கனவிற்கண்டிரங்கல்.

காணித் திலநகை யாயென வூரர் கனவில்வந்தார்
நாணித் தழுவ விழித்தேன் மறைந்தனர் நாடுறுங்காற்
பாணித்த தென்னென் றரன்காழி வாழும் பரத்தையருட்
கோணித் தமைமுனி வாரென் றுபோலுமுட் கொண்டதுவே. (௪௫௪)

### சேஞ்சூடர்க்குரைத்தல்.

முந்தாநம் மூரன் முகநோக்கி வாக்குநெய் முற்றுமுண்டு
நந்தா தெழுகூ வுரேயெனைப் போனிற்ற னன்மையென்றென்
சிந்தா குலமுள்ளா யூரர்பரன் காழிப்பல் செல்வர்நல்கு
மந்தார் புனையு மடவார்க்கு நீயுமுள் ளஞ்சினையே. (௪௫௫)

### வாரம்பகர்தல்.

காருந் தழுவப் பிறையுந் தழுவக் கழிதலையு
நீருந் தழுவப் படுசடை யார்சண்பை நீணகர்வாய்ப்
பாருந் தழுவப் பலருந் தழுவப் படுமடவார்
யாருந் தழுவக் கொடுத்தன ளோவென் னிறைவனையே. (௪௫௬)

### அடிசிலமைத்தமடவரலிரங்கல்.

ஆளும் பரமர்தென் காழியின் வாயிலை யாருணவு
வாளும் பணிகணல் லார்செவிக் கூட்டலின் மன்னுப்புகழ்
நீளுந் திருவள் ளுவர்சொற்ற வாறு நிலவகட்டுண்
மூளும் பசியிலை யாயிற்றம் மாநம் முதல்வருக்கே. (௪௫௭)

### தலைவன்பிரிந்தமைக்கு இரங்கல்.

மாவுங் கரியும் பரியும்பொற் றேருநம் மாளிகைமுன்
மேவும் படியி ரென்காழி யல்குல் விலைமடவார்
பாவுந் தெருவுறு மானல்ல காதன்மை பங்கயமென்
பூவும் புலவுங் கமழ்புன லூரனுட் புக்கதுவே. (௪௫௮)

### ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினாதல்.

பொன்னேயென் னுள்ளப் புனலோடிப் பாயும் புணரியெனுந்
தன்னே ரிலாவடி யோன்சண்பை வாய்பணந் தான்முடித்து
நன்னேய மிக்கன்பர் நல்கவு நீமுன்னை நாளிலின்னுங்
கொன்னே வருந்துவ தென்னே யெனக்குண்மை கூறுகவே. (௪௫௯)

### இறைமகன் புறத்தொழுக்கு இறைமகளுணர்த்தல்.

நேருங் கரும்பு பொழிசாறு நீத்து நெடும்பகடாங்
கூருங் கலங்கற் புனல்கொளு மூர ருபேந்திரன்முன்
யாருந் தொழும்பெரு மான்சண்பை வாய்ப்பொன் னெழின்மடவார்ச்
சாருந் தகைய ரெனைநீத் தனரின்று தாழ்குழலே. (௪௬௦)

### தலைவியைப்பாங்கிகழறல்.

ஆனுண்ட கேதனக் கார்காறி வாயிர வாம்பன்மலர்த்
தேனுண்ட வண்டு சிறுகாலை யிற்கஞ்சத் தேனுமுண் ணும்
வானுண்ட கீர்த்தி மகிழ்நர்பொல் லாங்கு மறந்துஞ்சொலல்
கூனுண்ட வாணுத லாய்குல மாதர்தங் கோளலவே. (௪௬௧)

### செவ்வணியணிந்து சேடியைவிடுக்கவென்றல்.

பவளம் புனைந்துசெம் பூமாலை சூட்டிச்செம் பட்டுடுத்தி
நவளம் படுங் குமம்பூசிப் பாகிலை நல்கிநனி
துவளங் கொடியிடை யாய்விடு சேடியைத் தோன்றறன்பாற்
கவளங் கொளுங்களிற் றீருரி யார்புகழ் காழிக்கின்றே. (௪௬௨)

### செவ்வணியணிந்து சேடியைவிடுத்தல்.

பாடியை யிந்திர கோபஞ் செறிந்த பசுங்கொடியு
மேடியை வண்கவிர் பூத்தபொற் கொம்பு மிணையமொரு
சேடியை விட்டனள் செங்கோலஞ் செய்து திருந்திழைவிண்
மாடியை மாடப் புகலிப் பிரானன்பர் மாடுறவே. (௪௬௩)

### அவ்வணி உழையர்கண்டு அழுங்கிக்கூறல்.

தோளா மணிதிருத் தோணி புரேசன் றுணைமலர்த்தாட்
காளா னவரை யடையா தழலு மறிவிலரிற்
கோளா டரவக லல்குலிம் மாதுசெங் கோலங்கொண்டு
வாளா விகழ்பவர் வீதியிற் போகுமிம் மாண்புநன்றே. (௪௬௪)

### பரத்தையர்கண்டு பழித்தல்.

தவந்தாள் பணித லெனக்கரு தேனுக்குந் தன்னருடந்
துவந்தாள் பரம னிகரில் புகலி யுரிமையுற்று
நிவந்தாள் சிறிது சிவந்தா ளதுநிக ழப்பெரிது
சிவந்தாடன் ஞணம் விளர்த்ததெண் ஞளித் தெருவகத்தே. (௪௬௫)

### பரத்தையர் உலகியனோக்கிவிடுத்தல்.

கல்லுக வீங்கு புயத்தாய் பரம்பரன் காழியினீர்
செல்லுக வாய்மலர் கின்றவ ஞளுந் திருந்தறமே
வெல்லுக வென்பவள் பூத்தன ளாம்விடை கொள்கசெல்க
புல்லுக பன்னிரு நாளுமப் பாலிங்குப் போதுகவே. (௪௬௬)

வரவுகண்டுவந்து வாயில்கள் மொழிதல்.

இமைய மடந்தை புணர்ந்தும் விகார மிலாமுதல்வ
னமையமை தங்கு கயிலைப் பிரான்சண்பை நங்கையர்பச்
சமையமை தோடாழ விக்கிடந் தாலுநம் மாயிழையார்
சமைய மறிந்துத வுந்தகை யாரிவர் சான்றவரே. (௬௬௭)

தலைமகன்வரவு பாங்கி தலைவிக்குணர்த்தல்.

முன்மா றொழுகினர் பின்னடைந் தாலின்ப முத்திதரு
மன்மா தவர்பெரு மான்காழி வாழி படப்பயிலை
பொன்மாலை மார்பர் புறத்தா றொழுகினும் பொற்பவந்தின்
றுன்மா ளிகைமுனின் றெதிர் கோட லுயர்வுறுமே. (௬௬௮)

தலைவனைத் தலைவி எதிர்கொண்டுபணிதல்.

ஊடா துவத்தலி னுண்டாகு மின்பமுன் னூடல்கொளில்
வாடா வவர்க்குக் குறையுள தோசண்பை வாழ்பரமர்
கூடா ரரணந் தழல்விளை யாடக் குறுநகைகொ
ளோடா ரிதழித் தொடையா ரநுரொன் றெதிர்கொள்வனே. (௬௬௯)

புணர்ச்சியின்மகிழ்தல்.

காரார் குழலியு நாமும் புணரின்பங் காப்புகலி
யூரார் முதலு முயிரும் புணரின்ப மொக்குமெனி
லோரா ரொருதலை யின்பே யதுமற் றிருதலையுஞ்
சேரா மருவின்ப மீதெனில் யாதினை செப்புவதே. (௬௭௦)

வெள்ளணியணிந்துவிடுத்தல்.

இருளுத யஞ்செய் மிடற்றர் கழுமல மெய்தலர்சேர்
மருளுத யஞ்செய் மனத்தார் முலைவளர் மன்னவற்குத்
தெருளுத யஞ்செய்வெண் பூடணி தூசு செறித்தடைந்தாள்
பொருளுத யஞ்செய் ததுபகல் வாவொரு பூங்கொடியே. (௬௭௧)

வெள்ளணியணிந்து விடுத்துழித் தலைமகன் வாயில்வேண்டல்.

யான்செய் பிழையை நினைந்து மறுமலின் றேன்செய்மொழி
மான்செய் விழியயிற் கோதுக தீதுக வல்லரைக்கன்
றான்செய் பிழைமறந் தொள்வாளு நாளுமுன் றந்தபிரான்
கூன்செய் பிறைமுடி யோன்காழி வாழி கொடியிடையே. (௬௭௨)

தலைவி நெய்யாடியது இகுளைசாற்றல்.

கையா டியமழு வோன்காழி நாதன் கருணையினன்
மையா டியகண் மயின்மணி போல மகவுயிர்த்து
நெய்யா டியமெய் யினள்கா ணறிவ ணெடுந்தகைநீ
பொய்யா டியமட வார்ப்புல்லு நீத்திங்குப் போந்ததுவே. (௬௭௩)

### தலைவன் தன்மனத்து உவகைகூர்தல்.

நாம்பா லுணுமழ வாகா தருள்புரி நம்பர்தமைப்
பாம்பா லலங்கரிப் பார்காழி வாயென்று பார்ப்பதுபோ
யாப்பா லடுநெய் யவிர்மெய்ப் பசப்பு மலர்முகமுந்
தீப்பால் பொழிகொங்கை யும்மக வேந்திய செங்கையுமே. (சஎச)

### தலைவிக்கு அவன்வரல் பாங்கியுணர்த்தல்.

ஒளிர்பறை பாணனொ ளொருசே யுளார்சண்பை யூரரின்று
தளிர்புரை மெல்லடி யாப்பச் சுடப்புந் தவாமகவுங்
குளிர்தரு பால்பொழி கொங்கையுங் காணக் குறுகுபுநின்
மிளிர்திரு மாளிகை வாயினின் றுரிதென் விண்ணப்பமே. (சஎரு)

### தலைவியுணர்ந்து தலைவனொடுபுலத்தல்.

மட்டார் கடுக்கை மலர்மாலை யார்சண்பை வாழுநல்லார்
விட்டார்கொ ணம்மைப் புரப்பாரெவ் வாறிங்கு மேவவுடன்
பட்டா ரவர்க்கிம் மனைவாயென் னுண்டு பழந்தொடர்பு
கட்டார் மகவுண்டு நானுண்டு காலங் கழிப்பனன்றே. (சஎசு)

### தலைவி பாணனைமறுத்தல்.

தோயு மகிழ்நர்மிக் கன்பினர் நீயென்னை சொல்லன்முல்லை
வீயு மருவும் பொலிதேத் தெருக்கலர் விற்கவந்தா
யேயும் பரமர்தென் காழியில் வீணை யிசைக்குங்கைபோல்
வாயுங் கொளும்புலைப் பாண்மக சேறியென் வாய்தல்விட்டே. (சஎஎ)

### வாயில்மறுக்கப்பட்ட பாணன்கூறல்.

தாயே தலைவற் புகழ்ந்தே னதற்கென் றலைதகர
நீயே கருங்கலை வீசினை வாருஞ்செந் நீர்முழுகி
யாயேகர் காழி யதுசெங்க லாயிற் றமையுமிதே
போயே விடுவல் விடாதோங் குககின் புலவியதே. (சஎஅ)

### விறலி வாயின்மறுத்தல்.

சேவுந் திருமறை மாவுஞ் செலுத்துந் திறத்தர்வளம்
பாவும் புகலி யடையாரி லொத்ததிப் பாவியில்லை
மாவுந் துணர்ப்பொலங் காவுமொப் பாங்கொடை யாளரென்று
மேவும் பரத்தையர் சேரியிற் பாடு விறலிசென்றே. (சஎகூ)

### கூத்தன் வாயின்மறுத்தல்.

முடித்திடு வேணிப் பிறையான் புகலி முதல்வன்மன்று
ணடித்திடுங் கூத்தன்றி நோக்கேனின் கூத்து நடிப்பதற்குத்
துடித்திடு கூத்தன் மகனே யகறிநந் தோன்றலுக்குத்
தடித்திடு மின்பந் தருமாதர் நோக்குவர் தாழ்வின்றியே. (சஅ0)

### பாங்கி வாயின்மறுத்தல்.

அளியுற்ற காழிப் பிரான்ரு யுருக்கொண் டடைந்துமிடைந்
தொளியுற்ற தெய்வச் சிராமலை மேவுத லோர்ந்தவரிங்
வெளியுற்ற சேய்வயிற் றுள்ளுற்ற போதிங் கிருந்துசென்று
வெளியுற்ற போதுவந் தார்நல்ல ரேயவர் மெல்லியலே. (௪௮௧)

### விருந்துடன்வந்துழிப் பொறுத்தல்.

உன்னுமுன் னுள்ளத் துறைவார் புகலிநல் லூரர்வந்தா
ரென்னுமுன் செங்கு வளையியல் பட்ட விருகண்களு
மின்னுமுன் றாழ்நுண் மருங்குனல் லாட்கு விருந்தொடென்று
பன்னுமுன் னம்ம கருங்கு வளையியல் பட்டனவே. (௪௮௨)

### விருந்தோடுவந்துழிப் பொறுத்தல்கண்டு தலைமகன்மகிழ்தல்.

முருந்தென்று பேசு நகைபாகர் சண்பையின் முற்றியது
வருந்தென் றெனைவைத்த தீவினை நல்வினை வந்ததன்றோ
விருந்தென்று கொண்டிடும் வீயாப் புலவியை வீப்பதற்கோர்
மருந்தென்று கொண்டனங் காண்போதும் மாதை மகவொடுமே. ()

### விருந்துகண்டொளித்தவூடல் பாளியிடத்துவெளிப்படல்.

அல்லார் களத்த னழலார் குளத்த னருட்புகலிப்
பல்லார் புகழப் படுவோயிப் பள்ளி பலர்தழுவு
மெல்லா ரொடுமென்னை யுஞ்சும வாதென் றிழிந்துநின்றாள்
கல்லார வோதி கருத்தென் விளைந்த கலைமென்னையே. (௪௮௪)

### தலைமகன் சீறேலென்று அவள் சீறடிதொழுதல்.

உணங்கா விளம்பொழிற் கூடற் பிரானுமை யூடற்கன்றி
வணங்கா முடித்தம் பிரான்காழி யூரன் மரைடிவீழ்ந்
தணங்கா வருத்தலென் வாய்முத்த நல்கி யருளுமெனக்
குணங்கா முறுமயில் கண்முத்த நல்கிக் கொதித்தனளே. (௪௮௫)

### இஃது எங்கையர்காணின் நன்றன்றென்றல்.

அண்மையின் மேவலென் பொற்றுணை பற்ற லடிபிடியல்
வண்மையி னீமகி ழப்பல பாற்கற்று வந்திலன்யான்
றிண்மைகொ டேவர் புகலியி னீயின்று செய்வதெல்லா
முண்மையென் றோர்ந்தெங்கை மார்வெகு ளாதிற்ப ருத்தமனே. ()

### நின்னலது அங்கவர்யாரையும் அறியேனென்றல்.

புல்லாது காலில் விழவுமெண் ணுது புழுங்கியெனைக்
கொல்லாது கொல்லுதல் குற்றமன் றோவெங் குருப்பரனைக்
கல்லாது வாடுநர் போனினைத் தாயென்னைக் காதனின்னை
யல்லா தொருவரை யும்மறி யேனுண்மை யாரணங்கே. (௪௮௭)

### காமக்கிழத்தியைக் கண்டமைபகர்தல்.

திருவன் புகலிப் பெருவீதி யிற்சிறு தேருருட்டு
மருவன் புறுநம் மகவைக்கண் டாள்கட்டி மார்பணைத்தா
ளொருவன் புடனது நோக்கிநின் றுயிவ ளோரினிவள்
பொருவன் பினர்பல ரென்று ளயலொரு பூங்கொடியே. (சஅஅ)

### தலைமகளைப் பாங்கி புலவிதணித்தல்.

உமைபொறுக் குங்க ணொருபா லுறவு மொளிர்முடியோர்
மமைபொறுக் குங்குழல் வைத்தார் புகலிநம் மன்னரின்றான்
ஞிமைமபொறுக் குர்முலை சேர்வான் வருந்துக லெண்ணிலேமுப்
பிமைபொறுக் கும்புன லென்பது மோர்ந்திலை பெண்ணணங்கே. ()

### தலைவி புலவிதணியாளாதல்.

மாறுறு பாகத்தர் காழிநல் லார்கள்செவ் வாயினிய
தேறுறு நிம்பநெய் நாறுமென் வாயவர் செய்பொன்முலை
மேறுறு நல்வினைப் பான்மக வுண்டு மிழத்திரிந்த
பாறுறு மென்முலை யென்னிலொவ் வாதுன் பகட்டினுக்கே. (சகூ0)

### தலைமகள் தணியாளாகத் தலைமகனூடல்.

மான்மே லெழுநஞ் சமுதா யதுசண் பை வள்ளலுக்குத்
தான்மேல் விழுந்து தமீஇநமக் கின்பந் தருமமுதங்
கான்மேல் விழுந்து கரைந்திரந் தாலுங் கனிதலின்றி
மேன்மேல் வருத்தும் விடமாயிற் றுனம் விதிவசமே. (சகூக)

### பாங்கி தலைவனை அன்பிலைகொடியையென்றல்.

பைதொட்ட நாகப் பணியார் புகலிப் பதியனையாள்
கைதொட்ட வேம்புங் கருப்பேயென் றீர்கட் கடைக்குறிப்பால்
வைதொட்ட வீங்கமு வாயேறி வைகவும் வல்லனென்றீர்
நைதொட்ட வன்ன டனியாகக் கண்டு நகைப்பிரின்றே. (சகூ௨)

### பாங்கி அன்பிலைகொடியையென்று தலைவனையிகழ்தல்

ஆரோடு சொற்று மிளங்கன்றை நாடி யணைபசுப்போல்
வாரோடு விம்மு முலைபா லிடிக்கடி வந்தருள்வீர்
நீரோடு கண்ணிமெய்ப் பீரோடு வாட நிமலர்சண்பைத்
தேரோடு வீதியு ளூரோடு மாதரிற் செல்லுவிரே. (சகூங)

### பள்ளியிடத்துத் தலைவி புறங்காட்டக்கண்டு தலைமகன்கூறல்.

அறங்காட்டி யென்னைப் புரப்பான் புகலி யனையவரே
நிறங்காட்டி யுங்கண் மதவேள் சினந்து நெடுஞ்சிலையின்
மறங்காட்டி நின்று சமராடு கால மதித்தெனக்குப்
புறங்காட்டி மெல்லிய லாரெனும் பேரைப் புதுக்கினிரே. (சகூச)

### காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

பிழையே செயினு நினக்கே பொறுத்தல் பெருங்கடன்வா
வுழையே யனையகண் ணாயெனைப் போலலை யூடனிறத்
திழையே புனையு மகவீன்றுங் கோட லியல்புகொலுட்
டழையேத நீத்துத் தழுவரன் காழித் தலைவனையே. (சகூரு)

### தலைவி காமக்கிழத்தியோடு பகர்தல்.

தண்ணார் புகலிப் பெருமானு மாயனுஞ் சம்புபல
கண்ணார் கரும்புங் கடுமூங்கி லுங்கழை காமரமென்
பண்ணார் மொழிமயி லேயானு மேய பரத்தையரு
மெண்ணார் பணியுநம் மூரற்கு மாத ரிதுமெய்ம்மையே. (சகூசா)

### பாங்கி வாயினேர்வித்தல்.

நீலம் பொலியும் விழியாய் புலவியை நீளவிட்டுத்
தாலம் பொலியுந் தலைவனை வாட்டுத றக்கதன்று
லாலம் பொலியு மிடற்றார்தென் காழிநல் லாடவருட்
சாலம் பொலியும் பொதுமாதர் தோடழு வாரெவரே. (சகூஎ)

### தலைவி மகவோடுபுலத்தல்.

உள்ளாய் பவருக் கொளியா யமரிறை யொண்புகலிக்
கள்ளாய் குழற்பொது மாதர்தம் பாற்செல்லுங் காதலனைத்
தள்ளா யழுதழைத் தொண்மார்பிற் சாந்தந் தழீஇயழித்துப்
பிள்ளாய் பிழைசெய்துள் ளாய்வந்த தாலொர் பெரும்பழியே. ( )

### மகற்கறிவுறுத்தல்.

எழுந்தே பணைத்த முலையார் பொதுநல மெய்துபுதி
கழுந்தே ஈடைத்திருத் தந்தையைச் சார்ந்துழுக் கட்பெருமான்
செழுந்தே மலர்ப்பொழிற் சீகாழி யிற்சிறு தேருருட்டுங்
கொழுந்தே யிதுபிது ராசார மென்றுபொய் கொள்ளற்கவே. (சகூகூ)

### மகற்பழித்தல்.

அம்பல வாணர் புகலிநல் லார்மென் றமைத்தபொதுத்
தம்பல மேவிற்றுன் வாயினுந் தந்தைமுத் தங்கொள்ளல்
வம்பல வாலென்றன் வாயினும் பூசவந் தாயுனைநல்
கும்பல மோமக னேயிது தானின் குலத்தியல்பே. (ரு௦௦)

### ஆயிழை மைந்தனும் ஆற்றமையும் வாயிலாக வரவெதிர்கோடல்

போதுசெய் கூந்தற் புணர்முலை பாகர்தென் பூம்புகலிச்
சூதுசெய் கொங்கைப் பொதுமட வாரிற் றுறந்தின்றுசெந்
தாதுசெய் பூணிளஞ் சேயையுந் தோளிற் றழுவிவந்தீ
ரேதுசெய் தாலு மியம்புந ராரெம் மிறையவரே. (ரு௦க)

மணந்தவன்போயபின் வந்தபாங்கியோடு இணங்கியமைந்தனை இனிதிற்புகழ்தல்.

களிமிகு மாமயிற் சாயனல் லாய்கடை யேனிதயத்
தளிமிகு வாழ்வுடை யோன்சண்பை யூரிற்றன் றந்தைதனை
யளிமிகு மாறு பொருமிப் பொருமி யழுதழைத்தா
னொளிமிகு ஞானசம் பந்தன்கொ லோவென் னொருமகனே. (டுOஉ)

தலைவி தலைவனைப் புகழ்தல்.

பெரியோர் பவஞ்சங் கலந்தமர்ந் தாலும் பெரும்புகலி
யரியோர் விடைய ரலர்தாட் கலப்படைந் தேயமர்வர்
கரியோர் தடங்கட் பொதுமாதர் கொங்கைக் கலப்புறினு
முரியோர்நங் கொங்கைக் கலப்பின்று காறு மொழிந்திலரே. (டுOஙு)

பாங்கி தலைவியைப் புகழ்தல்.

மாலே யணையநங் காவலர் மேவலர் வாழ்புரந்தீ
யாலே யழிய நகைத்தார்தென் காழி யமருநல்லார்
பாலே பயின்று வரக்கண்டு மேற்றருள் பண்பினிவள்
போலே பெருங்கற் புடையாரு முண்டுகொல் பூதலத்தே. (டுOச)

# கல்வியிற்பிரிவு.

கல்வியிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

வேய்பவ ரேபுரை தோளிடை யாய்வெவ் வினைமுழுதுங்
காய்பவ ரேசொல் கழுமல வாணர் கலைமடந்தை
யேய்பவ ரேயென் பவருட னய்ந்த வினியகல்வி
யாய்பவ ரேயற மாதியொர் நான்கு மடைபவரே. (டுOடு)

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

ஒங்கற்ற வாவில் லுடையார் புகலி யுறுநர்முன்போய்த்
தாங்கற்ற யாவுந் தகவுறாத் தேயவர் தாமுணர்ந்த
தீங்கற்ற யாவுந் தெரிந்துகொள் வான்சென்று ளார்பணியக்
கோங்கற்ற மோருங் குவிமுலை யாய்நின் கொழுநரின்றே. (டுOசு)

கார்ப்பருவங்கண்டு தலைவி வருந்தல்.

வெறுத்துப் புரப்பொடித் தார்காழி யூரில் வெளியெழுந்து
கறுத்துச் சிலையும் வளைத்தம்பு தூற்றுங் கனமுளெழுந்
தொறுத்துப் படர்செயு மவ்வா றொருவ னொருத்தியெங்ஙன்
பொறுத்துத் தனியிருப் பேன்வந்தி லார்கற்கப் போனவரே. (டுOஎ)

தலைமகளைப் பாங்கிஆற்றுவித்தல்.

சந்தார் தடம்புயத் தார்தடங் காழித் தனிமுதல்வர்
முந்தா ரருளின்முக் குற்றமு நீங்க முழுதுணர்ந்து
பந்தார் வனமுலை யாய்திரு ஞானசம் பந்தரொத்து
வந்தா ரெனச்சொல வந்தது காண்டிம் மழைமுகிலே. (ருoஅ)



## காவற்பிரிவு.



காவற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

தண்மலர் கோதை யொருபாகன் காழித் தனிமுதல்வன்
கண்மலர் நெற்றிப் பிரானரு ளானிலங் காவல்செய்வோ
ருண்மல ரச்சமைந் தாங்காங்குற் றருயிர்க் கோட்டிலரேற்
பண்மலர் சொல்லினல் லாயுறு வார்பெரும் பாதகமே. (ருoகூ)

பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

அடிமலர் மீதுதன் கண்மலர் சாத்து மரிக்குநெடுங்
கடிமல ராழிதந் தார்காழி நாதர் கருணையினான்
முடிமலர் மாலைநம் மன்னவர் நீதி முறைப்படியே
படிமலர் காவல்செய் வான்சென் றுளாரின்று பைந்தொடியே. (ருகo)

தலைமகள் கூதிர்ப்பருவங்கண்டு வருந்தல்.

மண்காவல் கொண்டவர் பெண்காவ னீத்தனர் வாடைவந்தென்
கண்காவல் கொண்ட தெதற்கஞ்சி யேதிருக் காழிப்பிரான்
புண்காவல் கொண்ட மருப்பும் பொருப்புரி போர்த்துமெய்
யொண்காவல் கொண்ட தழனின்று மாட்ட மொழிந்திலனே. (ருகக)

தலைமகளைப் பாங்கியாற்றுவித்தல்.

மூவலை யாறு திருப்புக லூர்குட மூக்குநணு
மேவலை யாதரிப் பார்காழி சூழ்பொழின் மென்பெடைகள்
சேவலை யாதரிக் குந்திற னோக்கித் திருப்பினர்மண்
காவலை யாதரித் தார்வாடை தீர்ந்தது கார்மயிலே. (ருகஉ)



## தூதிற்பிரிவு.



தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

கடல்சூழ் புவியி னிருபெரு வேந்தர் கலாமொழித்த
லடல்சூ ழரசர் குலத்துதித் தாருக் கறநெறிகை
விடல்சூழ் தராதெனை யாள்சண் பைநாதர் விரும்பருளான்
மடல்சூழ் துழாய்க்கண்ண னுந்தூது சென்றனன் மாமயிலே. (ருகங)

### பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

கலிக்காம ருக்கும்வன் றொண்டர்க்கும் வந்த களாமறவார்
கலிக்காழி நாத ரிடைநின்ற தேய்ப்பக் கறுத்துளத்தி
கலிக்கா சினியிற் பொருபிரு வேந்தர் கலப்புறுத்தக்
கலிக்கா மருகழன் மன்னர்சென் றாரின்று காரிகையே. (ருகச)

### தலைமகள் முன்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

இருகா வலர்வெம் பகைதணிப் பான்றுணிந் தெய்தியநம்
மொருகா வலர்வந் திலர்வந் ததுமுன் னுறுபனியே
யருகா வலர்செறி யும்பொழிற் காழி யரனருள்பால்
பருகா வலர்திரு நீலகண் டத்தமிழ் பாடுவமே. (ருகரு)

### தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தல்.

நீங்கா விருவர் பகைதணித் தேநெடுந் தேர்கடவி
நாங்கா முறுமன்னர் செங்கதிர் போல நணுகினர்பார்
வாங்கா வருள்கடை யேன்பாலும் வைத்தவம் மான்சண்பைவா
யேங்கா மெலியற்க முன்பனி செய்வதே னேந்திழையே. (ருகசு)



## துணைவயிற்பிரிவு.



### துணைவயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

கூற்றூ ருயிர்முன் குடித்தபொற் பாதன் குளிர்புகலி
யேற்றார் கொடியுடை யான்கயி லாயத் திளமயிலே
மாற்றா ரமருணி மெலியொரு வேந்தற்கு வான்றுணையாய்ப்
போற்றா ரிருந்து பிறந்தவ ரேயிப் புவியிடத்தே. (ருகஎ)

### பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

குன்றார் வனமுலைக் கோமள மேநின் கொழுநர்நண்பு
பொன்றார் துணையெனப் போயின ராலிப் பொழுதிகலி
நின்றா ருறையுர் புரமொரு மூவர் நிறைந்தபுர
மன்றார் முடிச்சண்பை யார்நகை நேருற்ற மைதபுறுமே. (ருகஅ)

### தலைமகள் பின்பனிப்பருவங்கண்டு வருந்தல்.

கட்டார் புனையுங் கருங்குழ லாய்நங் கணவர்தமை
நட்டார் துயரந் தணிக்கச்சென் றாரின்று நாமவர்க்கு
விட்டார்கொ ணந்துயர் தீர்ப்பவர் யார்சடை மேன்மதியம்
பெட்டார் புகலிப் பொழில்சூழ் வளைந்தது பின்பனியே. (ருகசு)

தலைவி பாணனைப் பாசறைவிடுத்தல்.

கண்புடை யார்தரு நீரோடு பீருங் கலந்தொருயான்
பெண்புடை யார்சண்பை யுன்னுறில் வாடுதல் பேசிடுக
நண்புடை யார்தமைக் காப்பான் றுணிந்து நமைக்கைவிட்ட
பண்புடை யார்தங்கு பாசறை வாய்ச்சென்று பாணவின்றே. (ருஉ0)

தலைவன் பாணனைவினுதல்.

தீராத காத லுடைப்பாண ரேநெடுஞ் சேரியொரீஇ
வாராத நீரெங்கு வந்தீர் மதிக்கும்வல் லாரறிவிற்
காராத வின்னமு தன்னார்பின் னார்மெய் யமலர்சண்பை
யோரா தவரினென் சொன்னாள்பொன் னொணழி லோரணங்கே. ()

தலைவனுக்குப் பாணன்கூறல்.

வரும்போது தண்டனிட் டேன்விடை தாபெரு மாட்டியென்றே
னரும்போது கொங்கை யமர்பாகன் காழியன் னார்புகன்றார்
சுரும்போது பண்பொலி சோலைநல் லூரர் துணையிற்சென்று
பெரும்போது நீட்டித்த லாலுயிர் நீட்டிக்கும் பேறின்றென்றே. ()

தலைவன் பாசறைப்புலம்பல்.

தனிவந்து கூடு மவர்க்கொளி யாம்பரன் சண்பையிற்பின்
பனிவந்து கூடும் பொழுதுணர்ந் தேங்கிப் பதைபதைத்திங்
கினிவந்து கூடுங்கொ லென்றழு மேபெழு மேவிழுமே
நனிவந்து கூடு மெழிற்கொம்பு போன்ற நறுநுதலே. (ருஉங)

பின்பனிப்பருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழிஆற்றுவித்தல்.

தன்பனி மாமலர்த் தாட்டா மரையென் றலைக்கணிவோன்
நன்பனி மால்வரை நங்கைபங் காள னருபுகலி
யன்பனி மாசலம் போன்மணித் தேரி னடைந்தனனிப்
பின்பனி மாதனை சூழ்ந்தினி யாவதென் பெண்ணரசே. (ருஉச)

---

## பொருள்வயிற்பிரிவு.

---

பொருள்வயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கு அறிவுறுத்தல்.

அல்லற வாள்விட் டவிர்மணி பாட மளாம்புகலி
நல்லற வாணர் பிரமலிங் கேசர் நகுமருள்சால்
சொல்லற வேதிய ராதியர் சூழ்தரச் சோர்வொழிப்ப
தில்லற மாமது பொன்னையல் லாதிய லாதணங்கே. (ருஉரு)

### பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்.

கல்லானை யுட்குறி யார்முறி யார்பொழிற் கச்சியுள்ளார்
வல்லானை மேன்மருந் துஞ்சுமென் காழி மடமயிலே
புல்லானை வாட்டுநங் காவலர் யாவரும் போற்றலின்றி
யில்லானை யெள்ளுவ ரென்றார் பொருள்குறித் தேகினரே. (நிஉசு)

### தலைவி இளவேனிற்பருவங்கண்டுவருந்தல்.

மனவாசை நாயிற் கடையேற் கொழிக்து வழுத்தடியா
ரினவாசை மேவவைத் தோன்காழி சூழ்பொழி லின்றளிர்நந்
நினவாசை போர்த்த திளவேனில் வந்திலர் செல்வரின்னுந்
தனவாசை யுற்றவர்க் கெவ்வாசை யுண்டுகொ றாழ்குழலே. (நிஉஎ)

### தோழி தலைவியை ஆற்றுவித்தல்.

பரவலர் தூய்வழி பாடுசெய் யேற்கும் பதமளிப்பா
ரரவலர் செஞ்சடை யார்காழி நாயக ராதருளா
னிரவலை ரேத்த வினைவளை யார்ப்ப விருநிதிசால்
புரவலர் வந்தன ராலிள வேனிற் பொலிவுணர்ந்தே. (நிஉஅ)

### தலைமகன் தலைமகளது உருவுவெளிப்பாடுகண்டு கூறல்.

பொன்னென்று மேனியன் சீகாழிநா தன் புரிந்தசடை
முன்னென்று பாதிப் பிறையு நிறையு முழுமதியும்
கொன்னென்று மேகமுங் கோபமுஞ் சாபமுங் கொண்டுபொலி
மின்னென்று பார்க்குந் திசைதொறுந் தோன்றும் வியப்பிதுவே. ( )

### பாசறைமுற்றி மீண்டு வரவயின் வந்ததலைவன் பாகற்குரைத்தல்.

ஈறென்ற தாதிபொ டில்லான் புகலி யிகல்வலவா
வாறென்ற காலுழ கார்ப்புயத் தாயிவ் வயிர்மணித்தே
ரேறென்ற நீயனி கிருக்குமுன் னேயிங் கிறங்குகென்றாய்
மாறென்ற நீருநின் கைகாலென் றேயுண் மதித்தனனே. (நிகூ0)

### தலைமகளோடு கூடியிருந்த தலைவன் கார்ப்பருவங்கண்டு மகிழ்ந்துரைத்தல்.

அந்தா மரைமுகத் தாயிழை யார்த மலர்முலைக
ணந்தா தரத்தி னகன்மார் பழுந்திட நன்குதழுவிச்
சந்தாபந் தீர்ந்து தழைத்தனம் யாமினிச் சண்டையெங்கள்
சிந்தா மணியருள் போற்பொழி வாழி செழுமுகிலே. (நிகூக)



## சீகாழிக்கோவை முற்றிற்று.

ஆபத்துக்காத்த விநாயகர்துணை.

# அரும்பதவுரை.



## காப்பு.

௧. இக்கோவை குருக் காழ்கொல் - இந்தக் கோவையானது நிறம்பொருந்திய மணிக்கோவையோ. இக்கோவையென்றது, ஆமையோடுகோத்த மாலையை. அலை கோடு உருக்கு ஆழிக்கு ஓவைச் செய் - அலைகளானவை கரையை அழிக்கின்ற கடலுக்கு ஒழிவைச் செய்த. விநாயகக்கடவுள் திருமாலின் அவதாரமாகிய கூர்மத்தை வென்று அதன் முதுகோட்டைச் சிவபிரானது திருமார்பில் மாலையாகப் பூட்டினரென்பதும் ஒருகாலத்தில் நீர்முழுவதையுமுகந்து கடலை வற்றச்செய்தனரென்பதும் சிவபுராணகதைகள். தருக்கு ஆழிக் கோவை - தருக்குற்ற திருமாலை; ஆழி - சக்கரம். குப்பாயம் - சட்டை; தரித்தவர் - சட்டைநாதர். உலகத்தையளந்த திரிவிக்கிரமமூர்த்தியை வென்று அவருடைய தோலைச் சிவபெருமான்கூறுகிய வயிரவக்கடவுள் சட்டையாக அணிந்துகொண்டாரென்னும் வரலாறு ஈண்டு உணரற்பாலது; சீகாழிப்புராணம் வடுகநாத அத்தியாயத்தைப் பார்க்க. களிறு, ஓட்டைக்குலைத்து திருக்காழிக்கோவைதனை அணியாக உவந்து செய்யுமென்க.

௨. தரக்கு - புலி. ஐவாய்விலங்கு யாளையாளி. சீயம் - சிங்கம். புலிமுதலியன இடையூறுகளுக்கு உவமைகள். தாய் உறுவ - தாவிவருவனவாகிய இடையூறுகளை. தூரக்கோ - செலுத்துவேனே. துணிக்கோ - வெட்டுவேனே. எண்காக்கோ - பிரமன். இத்தலத்திற் பிரமர்பற்பலர் சிவபிரானை வழிபட்டுய்ந்தனரென்பது புராணவரலாறு. பிரமபுரம் - சீகாழியின் பன்னிருநாமத்துள் ஒன்று. ஆண்டபோதகம், என்முனந்தோன்றிநின்று கோவையைப் பாடுவிக்குமென்க.

## அவையடக்கம்.

௩. அன்பர் - மாணிக்கவாசகரது. தீட்டுதல் - எழுதுதல். இருகோடு - இரண்டுகரை. நீர் - கங்கை. பிரியர் - கோவையிற்பிரியர். பொருகோடு - மோதுகின்றகிளை. புகலி - சீகாழி. ஒருகோட்டுமா - விநாயகக்கடவுள். மாவின் மேற் கோவைக்கொடி படருமென்பது மற்றொருபொருள்.

## நூல்.

௧. நிலைநங்கை - இத்தலத்துத் தேவியாருடைய திருநாமம். சிலம்பு - மலை. சிலம்பகத்துக் கொம்பர் வாய்ந்து உற்றது.

௨. வெள்ளாம்பலான் - இந்திரன்; ஆம்பல் - யானை. செந்தாமரையான் - பிரமதேவன். மேனி குவளை அன்னான் - திருமால். இவரென்றது தலைவியை. உஞற்றல் - செய்தல். நள் - நடு. நலத்தினன் - எழுவாய். இச்செய்யுளில் மலர்ப்பெயர்கள் தொனித்தல் காணக.

௩. உரிமைதோன்ற வேறுதலப்பெயர்களைக் கூறுதல் மரபாதலின், கழுக்குன்றம் கூறப்பட்டது. பின்னும் இப்படியேவருதல் காண்க. கோதை - மலர்மாலை. பூமகள் - பூமிதேவி, பூமியிலுள்ளமங்கை.

ச. சண்பை - சீகாழி. ஆயிழை மின்கொல், கொம்புகொல்.

ரு. சிவபெருமானுடைய வலக் கண் சூரியன்; இடக்கண் சந்திரன். தலைவியின் பார்வைகளுள் பொதுப் பார்வை வெப்பமும் சிறப்புப்பார்வை தட்பமும் உடையனவென்றபடி.

சு. மேக்கு - மேலிடம். கிழக்கு - கீழிடம். கழுமலம் - சீகாழி. இல் - இல்லாத. கிளை - மகளிர் கூட்டம். மினை - மின்னலைப் போன்ற தலைவியை. கழுமலத்தீசர் மேருமலையை வில்லாகவளைத்து அதன்மேலிடத்துள்ள தேவர்களும் கீழிடத்துள்ள நாகர்களும் தம்முட் கலக்கும்படி செய்தாற்போல இம்மின்போல்வாளைக் கிளையிற்பிரித்து என்னை அடையச் செய்தருளினர்.

எ. அம் கால் - அழகைக்காலு கின்ற. வில் - ஒளி. பிறரென்றது, சிவபெருமானை. செல் - மேகம். பரவையாருடைய இன்பத்தை அடைதற்குச் சுந்தரமூர்த்திநாயனர் சிவபெருமானைப் பணிந்தார். 'சாக்ஷிக்காரன்காலில் விழுவதைக்காட்டிலும் சண்டைக்காரன் காலில்விழுதல் நலம்' என்பது பழமொழி.

அ. திருஞானசம்பந்தர் திருத்தோணிமுன்சென்று பரஞானப்பாலுண்டது, முதலிரண்டடியின் குறிப்புப்பொருள். எண் பரவு ஆய - எண்ணத்திற் பரவுதலுடையதாகிய. பண் பரவு ஆய - இசை துதித்தலைச்செய்தற்குரிய. மறீர் - மறுநீர்.

கூ. நாகம்-விண்ணுலகம். சிரபுரம்-சீகாழி. கோகம் - சக்கரவாகப்புள். ஏகம் - தனிமை. யோகம் - சேர்க்கை.

க0. உம்பெயர் யாது? அளியென்றல் பொய்ம்மை; அருளில்லாமையாலென்றபடி. இடை அனுரும் தீதும் பட. சிலீமுகம் - அம்பும் வண்டும்.

கக. எய் - எம்மையறிவாய். மெய் - யான்கூறுவது மெய்யே. அது கைதவம் - அதுபொய்.

க உ. நிலையாள் - அம்பிகைபெயர். ஆமா - ஆகுமாறு.

க௩. வில் ஆர் - ஒளிபொருந்திய. கலவாத கா உண்டு.

க ச. விரைவாய் - மணம்பொருந்திய. 'லஜ்ஜா' என்பது ஸ்த்ரீலிங்கம். கண் இயலாம் - கண்போன்றதாகும். அஃது இலச்சை.

க ரு. கையிற் கொள்வார். பவர் - கொடி; சடைக்கு உவமம். பாலம் - நெற்றி. பாணி - நீரும், கையும். நீலம் - கருங்குவளையும், கண்ணும். நீருக்குள்ளே நீலத்தை வைத்தீரென்பது மற்றொருபொருள்.

க சு. பரமரருளால். ஐயர் - திருஞானசம்பந்தர். தென்னற்கு - கூன் பாண்டியனுக்கு. நோய் - சுரநோய். அது - அந்நோய். ஐயர் தென்னற்குப் புகுத்திய சுரநோயை அவரே தீர்த்ததுபோல, இவர் எனக்குப் புகுத்திய காமநோயை இவரே தீர்த்தற்குரியர்.

க எ. சீரியலன்பர் - திருஞானசம்பந்தர். ஏடுபோல - ஏடு வையைநீரை எதிர்த்துச்சென்றதுபோல. நாணம் கழிந்தது. கரைவது என் - இனிச் சொல்வது யாது.

க அ. புலவர்முன் - சுந்தரமூர்த்திநாயனரதுமுன்பு. நஞ்சு அருந்தும் பிரான் - சிவபெருமான். நகை மூளைத்தது.

க கூ. துடியிடையார் புரிந்த குறுநகை உயச்செய்தது.

உ0. அருளனையாரென்றது, தலைவியை.

உ க. தண்ணியநாள் இதுவே. எண் ஆளி - எண்ணத்தை யாள்பவன். மைக்கண்ணாள் தன்னை அளிக்க.

உ உ. தார் - மார்பின்மாலை. தனிவிழி - நெற்றிக்கண்; சுரத்திற்குவமை. தவம் புரிந்தாலும். எனை அடிமை கொண்டார் - தலைவி.

உ௩. ஐம்பாலில் தொடை

உ ச. மறியையும் வாளையும். எறிவாள் - வீசுகின்ற ஒளி. எல்லாக்கலன்களையும். குறிவாள் - குறிக்கப்படும் ஒளி. நாணத்தையும் அச்சத்தையும் கொள்ளாதே.

உ௫. கலர் - கீழ்மக்கள். பாழி - பெருமை.

உ௬. தருவின - தேடிய. தோணிபுரம் - சீகாழி. இருவின - இருத்திய. இஃது - இச்சேர்க்கையை. வலியினர் யார்.

உ௭. பயல் - பாதி. பாணித்து - தாமதித்து. புகுந்து அமரும் அயலார்.

உ௮. உயிர்நில்லாது. வல் - சூதாடு கருவி. ஒற்றித்து - ஒன்றுபட்டு.

உ௯. புகலும்படி புகல்வார் - விரும்பும்படி துதிப்பார். புகலாய - புகலிடமாகிய. புகலி - சீகாழி. புனலை அகலின், மீன் எத்தன்மைத்தோ. அற்று - அத்தன்மைத்து. சாரினும் உறின் ஆருயிர் அற்று.

௩0. வரி ஏல் - வரிகள் பொருந்திய. சங்கிலி - சங்கிலியார். மகிழ் - மகிழமரம். பெற்றதை - இரண்டுகண்களும் ஒளியிழந்த துயரத்தை.

௩க. இறை - சிவபெருமான். திருந்தும் பொழில். கண் இமை பொருந்துமுன்.

௩உ. கொடியான் - மன்மதன். பயல் - பாதி. வஞ்சி - ஒருவகைக் கொடி. ஆண் - ஒருவகைமரம்.

௩௩. உழை - மான். தன்மை இல் - தன்மையில்லாத. கூற்றம் - இயமன், சொல். மேற்று - மேலது.

௩௫. அல் தேம் மலர்க்குழலை. உயிர்த்துணை - தலைவி.

௩௬. தமக்கும் திருநிலையம்மைக்கும் இடையே சேய் மேவ; சேய் - முருகக்கடவுள்.

௩௭. இலம்பாடு - வறுமை. நலம்பாடு - நலம் உண்டாதல். நிலம்பாடும் - உலகந்துதிக்கும். இனிச் சஞ்சலத்தையும் வருத்தத்தையும் கொள்ளுவோம்.

௩௮. தலைவியின் கண், ஒருமாதருடைய நோக்கத்தை அவாவியது; அம்மாதரே மயலுக்கு மருந்து; மானனது பார்வைமிருகமொன்றை அவாவியதென்பது மற்றொருபொருள்.

௩௯. அம்புணர் - அழகுபொருந்திய. விதி - பிரமன்.

௪0. கழிபடு - கழிக்கப்பட்ட வடதிசைமூர்த்தி - குபேரன். விழிபடுமேனியன் - இந்திரன். வழிபடு தெய்வம் - தலைவி. தந்தார், மூன்றும் விராய் வாழ்க.

௪க. மனம்போல் - மனம்அடைந்ததுபோல. தயில் அடைந்தது. கனம் - மேகம். களம் - கழுத்து.

௪உ. வல் தந்தம் - வலியகொம்பு. என்று - சூரியன். என்று கெடுத்துக் கொடுக்கும். துணையை. சேறும்-செல்வோம்.

௪௪. நீன்மணி - நீலமணி; மணியாகிய குழல். மூங்கிலாகிய தோள். குவடு - சிகரம். காந்தள்மலராகியகை. வெங்குரு - சீகாழி.

௪௫. இத்தலத்திற்குப் பன்னிரண்டு திருநாமங்களுள்ளன.

௪௬. அன்னோ - ஐயோ; வியப்பின்கட்குறிப்பு. அகம் - உள்ளிடம், மனம். முடிமாணிக்கம் - சூடாமணி. கற்புடைமையால் தலைவனை யன்றி வேறொருவனாஉட்கொள்ளாததலைவி, செவ்வொளியுடைமையால் தன்னுள் வேறொன்று புகுதற்கிடங்கொடாத மாணிக்கமாக உருவகிக்கப்பட்டனள்.

௪௭. அசோகு - அசோகமரம். இவர் யோகியரே. நால்வர் - சனகாதியர். ஆல் - கல்லாலமரம். மேவுயோகி - சிவபெருமான். சோகத்தை நீக்குதல் புலப்பட அசோகத்தின் கீழ்நிற்றலும் தனிமையுடைமையும் மிகுதிக்குக்காரணம்.

௪௮. கவுணியர் - திருஞானசம்பந்தமூர்த்தி. பெருமணம் - இவருக்குத் திருமணம் நடந்த பெருமணநல்லூர். ஒருமான் - நம்பாண்டார் நம்பியாருடைய புதல்வியார். உற்ற இன்புமூத்தியின்பம். மேவருமான இன்பம் - அடைதற்கரிய பெருமையையுடைய இன்பம்.

௪௯. பா-பாக்கள். தேவு இயல்-தெய்வத்தன்மை பொருந்திய. திரிநேத்திரம்-முக்கண். மேவியது-தேங்காய்.

௫0. அதிர் - முழங்குதல். முதிர் - முதிர்ச்சி. கமலமும் மயிலும் மெய்யன்பரும் ஆயத்திற்கு உவமை.

௫க. பற்று - பருவமில்லாத. மறையோன் - பார்ப்பனப் பாங்கன்.

௫உ. அடங்கலர் - பகைவர். விண்ணீந்தனேயோ. எண்கொண்டவை - திறை. எறும் - வலி.

௫ங. கலை - வித்தை, கிரணம்.

௫ச. வரம்பு ஒருவி - எல்லைகடந்து. அறை - பாறை. எயில் - முப்புரம். எழிலி - மேகம். கோளினது - வலியையுடைய காமம்.

௫௫. அரும்பைப் பொரும் உள் - கூம்பிய உள்ளம். சிதல் - கறையான். இது தகுமே-இங்ஙனமெலிதல் தகாது.

௫சு. திருவெழுகூற்றிருக்கைப் பதி - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச்செய்த திருவெழுகூற்றிருக்கையென்னும் தேவாரத்தையுடைய சீகாழி, பற்றுடையாரருளின்.

௫எ. ஆலடி - கல்லாலினடி. நன்றுறைவார். அமைத்தமதில் - அமைத்தாற்போன்ற மதில். கொடுங்குன்று - பிரான்மலை.

௫அ. எண்மை - எளிமை. கொச்சை - சீகாழி.

௫கூ. இரியா வெப்பு - நீங்காத சுரநோய். அரி ஆ - திருமாலாகிய இடபம். அஞர் - வருத்தம்.

சுO. குறிஞ்சிக்கொடி - குறிஞ்சிநிலத்துள்ள கொடிபோல்வாள்; தலைவி. முடிபுனை களிறு - தலைவன்; வடதிருமுல்லை வாயிலில் தொண்டைமானுடைய யானையைமுல்லைக்கொடிதடுத்த வரலாறு இங்கே அறியற்பாலது.

சுக. மங்கு ஊற்றம் தீர் - குறைதற்குக் காரணமாகிய இடையூறுகள் நீங்கிய.பெருமானென்றது, தலைவனை. செங்கூற்றம் - செவ்வியமொழி. கருங்கூற்றம் - யமன். ஊற்ற ஆழி - ஊறுதலையுடையகடல்.

சுஉ. கனைாயிலாவலி. நரை - வெள்ளை. ஓதிமன் - அன்னவாகனத்தையுடைய பிரமன். விரை - நறுமணம். ஓவருங்குழல்-நீங்காத கூந்தல். உரை - சொல்லுவாய்.

சுங. ஓர்முளை - திருஞானசம்பந்தர். உமையினர்தரு. யானத் தரளம் - சிவிகையிலுள்ள முத்து. பொருபால் - ஒக்கும்பகுதி. வெற்றியே பொலிவு. இவை இயலென ஒருசொல் வருவிக்க. இதில் திருஞானசம்பந்தர் பெற்றருளிய ஞானப்பால் முதலியவற்றையே தலைவியின் மொழி முதலிய வற்றிற்கு உவமை கூறியிருத்தல் காண்க.

சுச. உலம் - உருண்டகல். குயிலைக்கண்டு மீள்வல், விடைகொடுத்து இவண் உறைவாயாக.

சு௫. வண்டலாட்டு - விளையாட்டு. கோனுள் - தலைவனுள்ளத்தை.

சுசு. முகில் - கூந்தல். பாய்மா - பாய்கின்ற வண்டும் குதிரையும். கண்ணுகிய அம்பு. ஆருயிர் தோன்றும். சுறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருளன.

சுஎ. வேணுபுரம் - சீகாழி. பண்டால், ஆல் - அசை. கழி அவலம் - மிக்க சோர்வு.

சுஅ. உழல்வு - உழலுகின்ற அம்பு. மதமா - யானை. காமதேனுவையொத்த வண்மையயான் - தலைவன்.

எO. மண்ணுது - கழுவாமல். கண்ணுது - கருதாமல்.

எக. ஊர் - திரிபுரங்கள். நகையாளில் - நகையையுடையசிவபெருமான்போல. எதி - ஆயுதம். ஆயுதமின்றி யானையையும் சிங்கத்தையும் வென்ற சிவபெருமான் தலைவனுக்கு உவமம்.

எஉ. மறி - மான். வலம் - இடம். பொறி - வண்டு. வன்பூ - பூவி.

எங. நிலவு ஆதவன் - சந்திரனும் சூரியனும்.

எச. விழைய - ஒப்ப.

எ௫. கன்று - வளையல்.

எசு. விறல் எதிர் - வெற்றியை ஏற்றுக்கொண்ட. அழுதோடுவந்து. பசியுற்ற சுந்தரமூர்த்திநாயனார் வருமுன்பு திருக்குருகாவூரிற் பந்தரின் கீழ்ச் சிவபெருமான் கட்டமுதோடு எழுந்தருளியிருந்தமை, வேட்கையுற்ற தலைவன் வருமுன்பு பொழிலில் தலைவிவந்திருந்தமைக்கு உவமை.

எஎ. பலம் - பிரயோசனம். வம்பு அலர் - வாசனைபரந்த.

எஅ. குருகு ஆல் - பறவைகள் ஒலிக்கின்ற. தலைவிபால் ஒருமுறை தூதுசென்று என் வருத்தந்தணித்த ஒருவன் பரவையார்பால் இருமுறை தூதுசென்று தன்றோழன் வருத்தத் தைக்கெடுத்த சிவபெருமானினும் சிற ந்தவனென்றபடி.

எகூ. நறை - நறுமணம்.

அ0. அமை - மூங்கில். புறவம்- சீகாழி. கமை - க்ஷமை. இருளை - தோழி.

அக. உடு - நக்ஷத்திரம். கடு - விடம். கொடு வேதனை - கொடிய பிரிவுத்துன்பம். நடு - இடை.

அஉ. அடையார் - பகைவர். பவர் - சிவபெருமான். கடி - நறுமணம். மலைதல் - சூடுதல், மாறுபடுதல்.

அரு. துணைத்து - ஒன்றை ஒன்று ஒத்து. மெல்கி - மெத்தென்று.

அச. கோடு ஆள் முகன் - விநாய கர். குறிஞ்சி - குறிஞ்சிப்பண். பந்து ஆடாள். ஆயது என்னே.

அடு. உண்கமா, மா - வியங்கோ ளசை. கழுமலத்தாருணவு - விடம்.

அசு. மறைநுனி - உபநிடதம். அவனி ஏகம் என்னும் நம்மையும்.

அஎ. உண்மை நன்குணர்ந்தார் - சிவஞானிகள்.

அஅ. அலைத்து அலைகொண்டு எழு கின்றபால். மலைத்தலையான்-சட்டை நாதர்.

அகூ. திருமாலைமாற்றென்னும் தே வாரம்பெற்ற தலம் - சீகாழி. வில் தோணி - வில்லையும் அம்பையும்; என்றது, புருவங்களையும் கண்களை யும்.

கூ0. ஏலம் - மயிர்ச்சாந்து.

கூக. நிழல்சடை - வினைத்தொகை; நிழன்ற, நிழலுகின்ற, நிழலுமெனவிரி யும்.

கூஉ. கருநீலம் செம்பவளஞ்செய் து - கண்களைச்சிவப்பித்து. குழல் - விளி. செம்பவளத்தை முத்தஞ்செ ய்து - கீழுதட்டை விளர்ப்பித்து. தேத்து - இடத்து. ஆழ்சுனை - ஆழ்ந்தசுனை. இச்செய்யுளில் மணிப் பெயர்கள்சில தோன்றுதல்காண்க.

கூரு. எம்பெருமாட்டி - விளி.

கூச. வளம் உலையாத. தளம் - பூவிதழ். சுனை நல்கிடுமேல்.

கூடு. ஒத்தீர் - ஒத்தீராய்.

கூசு. கோட்டுவார்சிலை - வளைக்கப் படுகின்ற நீண்டவில். பங்கு ஓட்டு வார் - பாகத்தை அளித்தருள்பவர்.

கூஎ. இன்பு - முத்தியின்பம். இச் சையார் அருள்பற்றுதல்போல் யான் தோழியார் பற்று மேவுவன்.

கூஅ. ஒற்றி-திருவொற்றியூர். ஆரூ ரர் - சுந்தரமூர்த்திநாயனார். இறை - கை.

கூகூ. சிவம் - மங்களம், முத்தி.

க00. சீர் ஆயினும் - சீரையுடைய தாயைக்காட்டிலும். பீழை - துன்பம்.

க0க. கனக்கா அலர் செறி - மே கம்தவழும் சோலையில் மலர்கள்நெருங் கிய. இனக்கு - இனத்திற்கு. ஆவ லர் - ஆசையையுடையார். தனக் கா வலர் - தனத்தையுடையஅரசர்.

க0உ. பை நாகம் - படத்தையு டையபாம்பு. கபாய் - சட்டை. கை நாகம் - கையையுடையமலை. மை நாகம் - மைநாகமலை. உம்முடைய கொங்கைகளை. ஒளி தை நாகம் ஒன்று - ஒளிபொருந்திய யானையொ ன்று.

க0ரு. பிரான் சே-திருமால். உண் டுமிழ்ந்தது - உலகம். பதம்நாடியது - திருவடிகளைநாடிய திருமாலாகியவரா கத்தை. ஏ - அம்பு.

க0ச. நும் செவ்வாம்பல் மலர்த் திடும் - நும்முடைய வாயைத்திறவும். தாமரை - தாவுகின்றமரையென்னும் விலங்கு, தாமரைப்பூ.

க0டு. கான் - மணம்; காடுமாம். பூணி - இடபம். உம் கட்பகையாய் - உம்முடைய கண்ணுக்குப்பகையாய். சரி - வழி.

க0சு. பாலார்மொழி-பால்போன்ற மொழியையுடைய உமாதேவியார். பாலார்-பக்கத்திலுடையவர். சாரலில்.

மால் - மயக்கம். இடை நேர் என்மனம். ஆல் - ஆலிலை.

க0எ. ஆயினும் பழி இடையா. விழி - முச்சுடர்கள். ஊர் இடையாததுவோ. ஒழியாய் இனும் உனக்கு இங்கு என் என்றுது - நீங்குவாயாக, இன்னமும் உனக்கு இங்கே யாதுகாரியமுளது என்று கூறிஎன்னை விலக்கிவிடாமல்.

க0அ. அறல் - நீர். வளை - சங்கு. வளை தேக்கி நீந்தும்.

க0கூ. செய்யோன் - செம்மைநிறமுடையோன். வெய்யோன் - கொடியவன், சூரியன்.

கக0. எல் - ஒளி. அல் - இருள்.

கக்க. அவா - ஆசை. வன்றி - பன்றி. ஊரவா, ஏனையவா. அன்பர் - கண்ணப்பர். நம்மானென்றது தலைவியை. சான்று - சாக்ஷி.

ககஉ. தாவா - கெடாத. மேவா - விரும்பி.

ககங. நன்மை - பிரதியுபகாரம். குரல் - தினைக்கதிர். நம் கட்புலம் - நமது கண்ணறிவு. ஏனற்புனம் - தினைக்கொல்லை. ஏனற்புனத்தினுக்கு என்னநன்மை செய்வாம்.

ககச. அருமையைத்தேரான். பயந்தான் - பெற்றதந்தை. மலர்த்தாரான் - சண்டேசநாயனார். எச்சதத்தன் - அவருடையதந்தையார்.

ககரு. வெண்கூட்டுநங்கை - சிறுத்தொண்டருடைய மனைவியார். சந்தனத்தார் - அவருடைய தாதியார். விழைதர - ஒப்ப. ஆலோலம் - புட்களை ஒட்டும்ஒலி. என்று அழைப்பீர். தலைவியின்குரலைத் தம்மினத்தின் குரலென்றுகருதிக் கிளிகள் வருகின்றனவென்றபடி.

ககசு. நீர் - முன்னிலைப் பன்மைப் பெயர், தண்ணீர். வன்னி - கிளி, நெருப்பு. நீர்வளையும்பொழுது நெருப்பு எங்ஙனம் நெருங்குமென்பது மற்றொருபொருள். வழுவை - யானை.

ககஎ. தன்னம் - அற்பம். கோலம் - பன்றி. இதிற்பூக்களின் பெயர்கள் தோன்றுதல்காண்க.

ககஅ. சொல் - புகழ். காப்பதும் வருவதும் கொண்டதாம்.

ககக. சேல் - திருமாலாகியசேல். ஆழி - மோதிரம். பாலாழி - பாற்கடல். மதிப்பால்-சந்திரனிடத்துள்ள. சோல் - வளைந்த. மால் - மயக்கம். எனக்கு அருள்வீர்.

கஉ0. நலத்தை வேட்டல் நன்றே. கோள் - சொலை. 'புலிபசித்தாற் புல்லைத்தின்னுது' என்பது பழமொழி.

கஉக. தருக்களையுடையவிண்ணுலகம் வாடும். ஸ்ரீதியாகேசர் விண்ணுலகிலிருந்து திருவாரூர்க்கு எழுந்தருளின வரலாறு இங்கேஅறியற்பாலது. கோடு - யானைக்கொம்பு. குறத்தி - வள்ளியம்மை.

கஉங. யாத்த - கட்டிய. சிவபெருமான் அணிந்தருளிய பொருள்களே இதில் உவமைகூறப்பட்டமையறிக.

கஉச. இருதேவியர்-பரவையாரும் சங்கிலியாரும். பொருட்குரியார் - குபேரன். மகள், அருட்குரியார்க்கே எளியள்.

கஉரு. ஆராவமுதம்-தெவிட்டாத அமுதம்; தலைவி.

கஉசு. நவையாறு - குற்றவழி. செவை - செவ்வை.

கஉஎ. இளங்கான் - இளங்காடு. எய்த்தது ஏனோ.

கஉஅ. மதியமுகிழ்த்தார் - இளம் பிறையாகியமாலை. ஓவம் - சித்திரம். நின் உட்டுயர் தேராள்.

கஉக. நன்று - அருள்; அதற்கு எதிர் - மருள். நீலமலரைத் தாமரை மலரிலமைத்து. அகவை - பிராயம். உண்டுளார் - திருஞானசம்பந்தர்.

கங0. அனுஞை - கட்டளை. சுயமே - தானே.

கஙஉ. அமர்தற்கே தாகமுற்றவர். வரைதல் - மணஞ்செய்தல். என்பைப் போதாக அணிவார். இவ்விதி - வரைதல்.

கஙங. கிடை - ஒப்பு.

கஙச. ஈசர்மொழி - வேதாகமம்.

கஙரு. நமர் உனையும் கொடுமைபுரிவர். வையும் - வைவாள்.

கஈசு. செவ்வருவி-சிந்தூர அருவி. சிந்தா. நாம. க௪0-ம், கவியுரைபார்க்க.

கஈஎ. அண்டார் - பகைவர். அச்சழக்கருக்கு எண்ணலேது.

கஈஅ. விழையுமனம், குழையுமனம். மேகமும் மனமெலியும் கண்டத்தினர். வணங்கலர் மனத்தைப்போல்; தழையுமனம், குழையுமனம்.

கஈகூ. திதிக்கும்-காக்கும். துதிக்கும் சூரியன் குன்றெழுகாலையில்.

க௪0. தழாய்க்கோலம்-திருமாலாகிய வராகத்தை. தாலம் - பனை. பனையின் அடியில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலங்கள் திருப்பனந்தாள், திருப்பனையூர் முதலியன.

க௪க. கலைமதியை வித்தைகளையுடைய புத்தியை, கிரணங்களையுடைய சந்திரனை. மதியை விழுங்கியதேல். உழிஞை - சிறுபூளை.

க௪உ. ஒன்பானுருவம்-அருவத்திருமேனி ௪, உருவத்திருமேனி ௪, அருவுருவத்திருமேனி க. நன்பால் - நல்லபகுதி. கையேற்றது - உருவமெழுதிய படம்.

க௪ஈ. குவலயம்-நீலோற்பலம், பூமி. கமலம் - தாமரைமலர், நீர். வன்னி - கிளி, தீ. கொண்டல் - மேகம், காற்று. உயிர் - சுவாசம், ஆன்மா. மெய்யெட்டு - அட்டமூர்த்தம்.

க௪௪. 'ஏர்மிடையும் அடையும் இருபிடி' என்பன கண்டோர் கூற்று. அவற்றுள், 'மிடையும்' என்பது செய்யுமென்னுமுற்று, 'அடையும்' என்பது முன்னிலைப்பன்மையேவல். மற்றை இரண்டும் ஒருமையேவல். ஒருபிடி, பிடி - கைப்பிடி, பெண்ணனை.

க௪ரு. உலா - ஆதியுலா. படர்ந்தவர் - சேரமான் பெருமாணுயனுர்; எழுவாய். அலங்கல் - பனைமாலை. மேவார் - விரும்பார். வரைப் பெண்ணை வேட்டு - மலையிலுள்ள மங்கையை விரும்பி. கடற்பெண்ணை - கடற்கரைப்பனையை. வெட்டுதற்கு மேவார்.

க௪சு. நேர் - நேர்மை; உடன்பாடு. போந்து - பனை.

க௪எ. பொறி-திருமகள். நிறம்-மார்பு.

க௪அ. ஒருவர் - சிவபெருமான். முகத்திரு பார்வை - சூரியசந்திரர். என் தரு பார்வையோ - எதனைத் தருகின்ற பார்வையோ.

கரு0. பார் ஆய்கின்ற. ஆராய்பவள் தழுவிக்கொள்ளுவாள்.

கருக. உடம்படுமெய் பாங்கிக்கு உவமை.

கருஉ. சூல்-சூலம். வெப்பார்பிணி- சுரநோய்; 'போன சுரத்தைப் புளியிட்டழை' என்பது பழமொழி.

கரு௩. வெறு அகடு - பசியுள்ள வயிறு. எனக்கு உற்ற கட்டு - எனக்குள்ள பாசபந்தத்தை. வேலைச்செற்ற கண்ணையும் துக்கமுறாத இடையையுமுடைய.

கருரு. துருத்தி - திருத்துருத்தியென்னுந்தலம்; குற்றாலம்.

கருசு. முருகு - முருகக்கடவுள். புரிதும் - செய்வேம்.

கருஎ. காம்பு - மூங்கில். வீழி - திருவீழிமிழலை. கூம்பு அணிகை - குவித்தகை. சிவபெருமான் தாம் சீகாழியில் திருத்தோணியின் மேல் எழுந்தருளியிருக்கும் கோலத்தைத் திருஞானசம்பந்தர்க்குத் திருவீழிமிழலையிற் காட்டியருளினார்.

கருஅ. தலையான் - முதன்மையையுடையவன். ஐயைந்தின் - இருபத்தைந்து தத்துவத்தின்; 'ஐயைந்தினப்புறத் தானும்' என்பர். ஐயைந்துமெய் - இருபத்தைந்து மூர்த்தம். எண்ணெண்கலை- சு௪ கலை. ஐயாறு‍ஒன்று ஆறு - ஈசு தத்துவம்.

கசு0. மாட்டு இரு. மேவரும் - மேவும். கருமாட்டி-பிறவியை ஒழித்து.

கசுக. குரவு - நறுமணம். புரவு - காத்தல். திருமாலின்மார்பு முன்புள்ள கௌத்துவமணியை நீக்கி இம்மணியை விரும்புமென்றபடி.

கசுஉ. விண்டு ஆர் முளை - மூங்கின்முளை.

கசுசு. திருவார்த்தை - வேதம். இப்போது ஏதிலனெனக் கொண்டாய்.

கசுஎ. வரின் அலர் சிலவாம். கொளலால் - தலைவர்கொள்ளுதலால்.

கசுஅ. இந்திரன் துருவாசமுனிவர்தந்த பூவினிடத்து அன்புவையாமையால், அவராற்சாபமுற்று வருந்தினுனென்பது புராணகதை. தழுவினள் இது மெய்யே.

கசுகூ. மதியின், இன் - ஒப்பு. ஆர் - நிறைவு.

கஎ0. சுனைநீர், இப்பொழுதே என்குறையைத் தீரென்னும்.

கஎக. மயில் ஆடி உவகைசெயும். இவண் நில்.

கஎங. குளம் - நெற்றி. உள்தளம் - இதயகமலம்.

கஎச. நன்கு ஓடி. தென் - தென்னை. கருவூலம் - நிதியறை. நிதியங்கள் - சங்கநிதி, பதுமநிதி; இவை முறையே கழுத்தும் முகமுமெனக் கொள்க

கஎரு. உழை - மான். திருத்தோணியப்பர்க்கு மானும் பிறையுமில்லை.

கஎசு. கலர் - கீழ்மக்கள். ஒருவேன் வருத்தத்தைத் தணித்தநீர் பலர்வருத்தத்தைத் தணிப்பீர்.

கஎஎ. போனவர் - தலைவர்.

கஎஅ. கோகு - கழுதை. அநகம் குறித்தாலும் - பாவமின்மையைக் கருதினுலும். அருள்சேர். கநகக்குவைம்சிலை - மேருவில். கோகம் - சக்கரவாகப்புள். நகம் - மலை. பொறி - வண்டு.

கஎகூ. கருந்தலை - இழிந்ததலை.

கஅ0. நீதமுறு - நீதியுற்று.

கஅக. அன்பர்-கண்ணப்பநாயனுர்.

கஅங. இல்லாக்கொங்கை. [illegible] - செல்லுதல். ஊழ் - சூரியன். முடிப்பான் - கொல்லும்பொருட்டு. ஒருவன் - மன்மதன். நார் - அன்பு. முடித்துக்கொள்ளும்பொருட்டு ஒருவன் மலர்களை நாரில்லாமலே பெரியமாலையாகத் தொடுத்தானென்பது மற்றொருபொருள்.

கஅச. வண்டுகள் ஆய்கின்ற. அழுவம் - பரப்பு. கவி - வாலியை. எய்தவன் - இராமன்.

கஅரு. வேதர்தலையை முடிமேலும், பாரளந்தார் கண்ணை அடிமேலும் தரிப்பவர். ஓ - வியப்பின்கட் குறிப்பு. கழைக் கோட் போது அரிப்பார் - கரும்புவில்லின்கட் கொண்ட மலரம்பால் வருத்துதலையுடையவர்; மன்மதன். பூந்தோணி - மலரம்பு. தோணி புனலில் அழுத்துமென்பது மற்றொரு பொருள்.

கஅசு. கமை - க்ஷமை. இனனும் கரமுங்கொல்-சூரியனும்கிரணமுமோ.

கஅஎ. முன்னம் - குறிப்பு.

கஅஅ. சிரபுரம் - சீகாழி. கட்கு - கண்ணுக்கு. கண்டகம் - முள்.

கஅகூ. ஒருகதிரென்றது தலைவனை. ஒழிவில்கதிர் - தினைக்கதிர். கொள் - கொள்ளுவாய்.

ககூ0. ஓங்கு ஐ முகவர். தழல் - கொடிகருவி. வேங்கை சிவந்தது - வேங்கைமரம்பூத்தது. மான் - தலைவி. வேங்கை கோபித்ததாதலால் மான் இங்கு வருதலரிதென்பது மற்றொரு பொருள்.

ககூங. புனல் - ஆகாயகங்கை. எண்ணுடையார் - வேடர்.

ககூச. விரையாக்கலி - ஆஜ்ஞை= ஆணை. வாட்புலியார் - வாளாகிய புலியார்; வாட்படையென்றபடி. கோட்புலியார் மாய்த்தாலென. செவ்வேட்புலியார் - செவ்வேளாகிய புலியார்; முருகக்கடவுள். தாட்புலியார் - தாளாற்புலியார்; வியாக்கிரபாதர். சிவபெருமானுடைய அமுதுபடிக்காகத் தாம் வைத்த நெல்லைக் கைக்கொண்டு உண்டகுற்றத்தானைக் கோட்புலிநாயனுர் வெட்டியது, இங்கே தினைக்கதிர் கொய்ததற்கு உவமை.

ககூரு. தழைவேணி; ஆற்று வேணி. பழையாறு - ஒருதிருப்பதி. அமர்ந்தவர் - திருநாவுக்கரசர்.

ககூசு. கள்வன் - இராவணன்.

ககூஎ. பாவேட்ட - பாக்களைவிரும்பிய. புனிற்று - அன்னைக்குவமை.

ககூஅ. விடத்தேசு - விடத்தின் ஒளி. ஓர்பாதிப்பசப்பு. மடம் - தலைமைக்கு அடை. ஆய் - தாய். வருதல் இயல்பல்ல.

ககூகூ. தென் - அழகு. நாவலூரர்-

சுந்தரமூர்த்திநாயனார். இன்னு - கண்கள் ஒளிகுறைந்த துன்பம்.

உ0௦. குழல்-இசிகடிகருவி; அது மூங்கிலாற் செய்யப்படுவது.

உ0க. இதண் - பரண். ஆள்பவ ரென்றது,. தலைவியை.

உ0உ. வடுகன் - சட்டைநாதர். மாலையதாய - இயல்பையுடையதாகிய. மயில் - தலைவி.

உ0௩. இடைக்காடருடைய பிணக்கைத் தீர்த்தற்குச் சோமசுந்தரக்கடவுள் நீங்கிய இந்திரவிமானம், தலைவியில்லாத பாணுக்கு உவமை.

உ0௪. புகழான் ஆன் உயர்த்தவன். கவலையாகிய கிழங்கு; கவலைக்கிழங் கென்பது மற்றொருபொருள்.

உ0௫. பொன்னங்கவர்மலை - கவர்த்தபொன்மலை. உள்மூளைப்பது - இருள்; ஒடு - எண்ணொடு. பன் அங்கு அவர்வினை. உங்கள் அன்னம் - தலைவிக்கும் சோற்றிற்கும் சிலேடை.

உ0௬. சடிலம் - சடை. கலுழி - காட்டாறு. 'சடிலமடங்காக்கலுழி' என்றது கங்கையினும் பெரியதென்றபடி. பஞ்சானனம் - சிங்கம். 'கையஞ்சரும்' என்பதைப் புலிமுதலியவற்றோடுங் கூட்டுக.

உ0௭. 'புல்', 'அறுகு', 'ஆம்பல்' என்பன, முறையே புலி, சிங்கம், யானைஇவற்றின் பெயர்கள்; வன்மையில்லாத மற்றொரு பொருளை யுணர்த்தித் தலைவனுற்றலைப் புலப்படுத்தி னின்றன. பாறுவலோ-அஞ்சி ஓடுவேனோ.

உ0௮. புரவு-பாதுகாத்தல். சரவு-முதலை.

உ0௯. பண்ணை - விளையாட்டு. காவிற் பண்ணை எதுசெய்வர். விரை - வாசனைப்பொருள். பண்ணையுடையபா.

உக0. குழல்-விளி. திகிரிப்பிரான் - திருமால். கூற்றம் - விடம். நின்னுடைய நாட்டின்.

உகக. கணிப்பூ - வேங்கைப்பூ. குறிஞ்சிபேசுவர் - குறிஞ்சிப்பண்ணைப் பாடுவோர். தெளிமோ - தெளி; மோ - முன்னிலையசை.

உகஉ. உள் அவாவும். ஓம்பல் - பாதுகாத்தல். செவ்வாம்பல் - வாய். குவளையம் ஆளும் அளி அரசு - பூமியை ஆளும் அளியையுடைய அரசன். கருங்குவளைப் பூவையாளும் வண்டின் அரசானது செவ்வாம்பற்பூவை அவாவுமென்பது மற்றொருபொருள்.

உக௩. உமாதேவியார் சிவபெருமானுடைய முகக்கண்களைப் புதைத்தபொழுது பேரிருளுண்டானதைக் காஞ்சிப்புராணம், திருக்கண்புதைத்த படலத்தாலுணர்க. குருட்டிருள் - குருட்டுத்தன்மையைச் செய்யும் இருட்டு. வனவெங்கொடுமா - காட்டு மிருகங்கள். வட்டை - வழி.

உக௪. ஒருபாற்பெண் - உமாதேவியார். குழல்வீழளி - முருகக்கடவுளாகியவண்டு; உமாதேவியாருடைய கூந்தலில் முருகக்கடவுள் வண்டு வடிவங்கொண்டிருந்தனரென்பது புராண கதை. கல்லாரம் - செங்கழுநீர்.

உக௫. நாமப்புனல் - அச்சத்தைச் செய்யும் புனல்; நாமென்பது சுறு திரிந்தது; நாம் அப்புனல் விழுநாளென்று பகுத்துப் பொருள்கூறுவதுமுண்டு. கைதவம் - வஞ்சனை. தாமம் - கொன்றைமலர். சோமப்புனல் - கள்ளாகிய புனல்.

உக௬. பிறை - நடுக்கம். வடுகப்பிரான் - சட்டைநாதர். பறைதல் - சொல்லுதல். எதுபு - சிறிதும். அறை எய் - சொல்லுதல் பொருந்திய. போது - மலரும்பருவமுள்ள அரும்பு.

உக௭. பாதம் கம் - பாதத்தையும் தலையையும். அவர்தமாது அங்கம் பூண்டவன் - அவ்விருவர்களுடைய என்புகளை அணிந்தவர். தப்பாது அங்கு அவாவி. மாதங்கம் - யானை. வேங்கை - வேங்கைமரமும் புலியும்.

உக௮. கலை - பதினெண்குவித்தைகள்; அறுபத்துநான்கு கலைகளுமாம். அன்பர் கடந்து வந்தனர்.

உக௯. விட்கு-விண்ணுலகத்திற்கு. கட்கு - கண்களுக்கு. பட்கு - பண்ணுக்கு. மொழி - விளி. நீலம் வருவான் மலர்ந்து பயிலும். உட்குஎதிராக -

அச்சத்தை ஏற்றுக்கொள்ள.

௨௨௦. சிவை - உமை. பேடைவை - பேடுகள். நில் - நிற்பாய். அங்கு உற்று.

௨௨௧. சகலமொடுகேவலம் - சகலாவத்தையும் கேவலாவத்தையும். நும் மாளிகை பொற்பங்கயமோ.

௨௨௨. கடியாளர் - காவலாளர். எதிராயது உற்றதுபோலும்.

௨௨௪. செவ்வாய்மலர்நூல் - இறையனாரகப்பொருள்.

௨௨௫. முன் ஊனுற்று. முன்பு - வலி. நான்கு - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்.

௨௨௬. சமயம், விசேடம், நிருவாணமென்பன தீக்ஷாவிசேடங்கள்.

௨௨௭. அடிப்பார்க்குப்பாதம் அருள்வார். சிரபூதரம் - திரிசிராமலை. ஓதம் - வெள்ளம். வழுவை - யானை. ஏதம் - துன்பம். ஏதும் எண்ணல். இரவால் - இரவில்வாராதொழிக.

௨௨௮. முன் நீண்டுநின்றோன். அவர் மெய்ப்பூணைப் புனைந்தோன். அவர்ப்புணர்வார் - திருமகளும் கலைமகளும். நாண் - மாங்கல்யசூத்திரம். துயர்தாய் - வருந்துகின்றதாய். தாய் தேடுமுன். அங்கு அணைந்தருள்.

௨௨௯. சேற்பாலென்றது கண்களின் பக்கத்தனவாகிய காதுகளை. அருகுமலரொனச்சூட்டுக; என்றது செவிப்பூவை. நாற்பால்மலர் - கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூஎன்பன. ஐம்பால் - கூந்தல். கால் - வாய்க்கால். வளை - சங்கு. தருக்கோல் பால் அம் தேன் - மரங்களின் கிளைகளிடத்தேவைக்கப்பட்டுள்ள அழகிய தேனை.

௨௩௦. பழிப்பை ஆளுகின்ற. பகிரண்டம் - வெளியேஉள்ள அண்டங்கள். அழிப்பு ஆள் அருளுடையான். தெழிப்பாள் - அதட்டுவாள்.

௨௩௧. எருது ஏழ் பொரும்ஆன் - எழெருதுகளைப் பொருது தழுவிய திருமாலாகிய இடபம்; நக்கினசித்தென்னும் அரசனுடையமகளை மணப்பதற்கு அவன்வளர்த்திருந்த எழெருதுகளைக் கண்ணபிரான் தழுவி அடக்கினுரென்பது ஸ்ரீ பாகவதபுராண கதை. அருமான் - அரியமகான். கருமான் - யானை.

௨௩௨. சே - இடபம். கோ - தலைவன்.

௨௩௩. பல தழுவும் - பலவாச்சியங்களையும் தழுவிய. கோதையின் - சேரமான்பெருமாணயனாரைப்போல; இவர் சிவபெருமானை அருச்சித்து அவருடைய திருவடிச் சிலம்போசையைக்கேட்டே உண்பது நியமம். கோடு - கொம்பு. எங்கள்கோதைக்கு - எங்கள் தலைவிக்கு.

௨௩௫. துகிரங்கொடி - பவழக்கொடி. அனம் - அன்னப்புள். மலரோ இலையோ - மலரும் இலையும். ஏது - காரணம்.

௨௩௬. வெளியேயுரைசெயின் நாண்கேடு - வெளியே சொன்னுல் வெட்கக்கேடு. அளி - அன்பாற்செய்யும் ஒலி. இளி - ஒருபண்.

௨௩௭. கருத்துமுதல் வெளியா - கருத்துமுதலியவைகள் வெளிப்பட. விழைய - ஒப்ப. முளியா - உலராத. சேர்ப்பர் - நெய்தனிலத்தலைவர்.

௨௩௮. முட்கடம் - முள்ளையுடைய காடு. விடத்து இடத்து - விஷத்தையுடைய பாம்புகள் மிக்க இடத்தில். மாலாகிய அம்பு இயலுகின்ற.

௨௩௯. தாயை. வேய்ந்தமணமாலையை. மாணி - பிரமசாரி; சண்டேசுவரநாயனர். சேர்ப்பருடைய தாளை. புன்னையே, முதல்வாரது மாலையைச் கொள்ளு மாணியையொப்பச் சேர்ப்பரது தாளை நீயோ கொண்டாய்.

௨௪௦. வானப்பிறைக்குணம் - வளர்ச்சி. சடைக்கானப் பிறைக்குணம் - ஒரேநிலை. குழற்றுணைப்பிறை - பொன்னுலாகிய பிறை; அதன்குணம் தேய்தல். தேன் அப்பு - தேனாகிய நீர்.

௨௪௧. மதன் - மதம். கமலை - திருவாரூரில். விண்வாழ் சிதல் நீள்வன்மீகத்து உறைவார் - விண்ணில் வாழுகின்ற (தேவர்களாகிய) சுறையான்கள்மிக்க புற்றில் எழுந்தருளியிருப்ப

வர். பதன்-இன்பம். முதல்நீள் தழை-
தாழை. அவ்விதம் நீள்கவியை - காவி
யை=கருங்குவளைமலரை. முடிக்கொ
ளுமே - முடிக்கொள்ளுமா. அஷ்டபு
ஷ்பங்களுள், கருங்குவளை சிவபெரு
மானுடைய திருவடிக்குரியது.

உசஉ. படரும் கறி-படர்ந்துசெல்
லும் மிளகுகொடி. சந்து-சந்தனமரம்.

உசங. உழை-(மாரீசனாகிய) மான்.
உழன்றவன் - திருமால். என்பு இழை
யாகவர.

உசச. ஒருகால் - ஒருகாற்று.
ஒருகால் கொல் - ஒரு முறைதானு.
ஒரு கால் மிசை முக் கிளையோன் -
சூலப்படையினை யுடையார்; ஏகபாத
ருத்திர மூர்த்தியாக எழுந்தருளியவ
ரொன்றுமாம்; "கண்ணு தற்பிரான்
மருங்கிரு கடவுளர் கப்புவிட் டெனத்
தோன்றும், வண்ண முத்தலைப்படை"
என்னும் திருவிளையாடற் புராணச்
செய்யுளாலுணர்க.

உசரு. புகல்வாய் - புகுதல்வாய்ந்த.
உண்மையெனப் புரிந்திருந்தும்.

உசஎ. சோறுமுதல் மூன்றும்
ஓர்ந்தனன் - அமுதென்னுஞ் சொல்
லுக்குப் பொருள் சோறு, நீர், மரு
ணவு என்கிற மூன்றுமென்று அறிந்
தேன்.

உசஅ. திரையன்னை - திரைதலை
யுடைய தாய். எழுந்து - தொய்யில்.
நல்லிருளோ - சிவராத்திரியோ.

உசகூ. போந்தின்கருக்கு - பனங்
கருக்கு. கல்வி கேள்வி களில்லாரு
டையவுரை நாயின் குரைப்பிற்குவமை.

உருo. மலையையும் பிரமன் தலை
யையும் கையிற்கொண்டார். விதி -
பிரமன். அவர்கூத்தோ - அவரு
டைய தாண்டவமோ.

உருக. சேல் தந்த - சேலையொத்த.
தளியுள் எறிய. இப்பறை - காவலர்
கைப்பறை. தோல் தந்த எறும் -
தோலைக்கொடுத்த இடபமும். கோல்-
அடிக்குங்குணில். வாழிய வாழியவெ
ன்னும் அடுக்கு, அழிக அழிகவென்
னும் பொருளைத்தருவது.

உருஉ. நங்குலக்கோதை - வள்ளி
யம்மை. கேள்வன் - முருகக்கடவுள்.
நற்றாய் - உமாதேவியார். நிதியை
ஒத்த அடக்கம்.

உருங. வலக்கண் - சூரியன்.
புரை - குற்றம். ஒல்லாதவரில் - பகை
வரைப்போல. கூகாய்- கூகையே.

உருச. கோழ் இக்கு - கொழுவிய
கரும்புவில்லை யுடைய. கொம்பில்
கோழி - காழி. கோழி - உறையூர்.

உருரு. அன்பர் என்று - தலைவரா
கிய சூரியனை. உடைஎன - உடைவா
யென்று. சொல்லாகியபணி. உடை
யென உலாயதுவோ.

உருசு. கொண்டலும் அழகியபானை
லும். விண்தலம் - விண்ணுலகம்.
பனித்தேன் - துளித்தேன். அலம்பு
ஆவலின். கன்றே என்னென்ன.

உருஎ. பாசமொராரைந்து - பஞ்சபா
சம். நிலவும் ஆயும் நகரும் நாயும்
காவலருமாகிய காவலைந்திற்கும் ஐந்து
பாசங்களும் உவமை.

உருஅ. அன்பர்சேரூர் - தலைவர்தங்
கிய ஊர். சிறந்தவரை - தலைவரை.
மூன்றும்மூரெதுவென்று யான் கேட்
ப். பன்னிரண்டு பேரையுடைய ஊ
ரொன்றூர்; சீகாழியென்றபடி; பெரிய
பன்னிரண்டு ஊரொன்றும் மற்றொரு
பொருள்.

உருகூ. நன்கு அண்மை. மலரை
யுடைய புன்கின் அண்மையாளர்; சிவ
பிரான் புன்கமரத்தின் அடியில்
எழுந்தருளியிருக்கும் தலம் திருப்புன்
கூர். நின்கண் மையாத்தலுடையா
ரின் - உன்னிடத்து மயக்கமுடையா
ரைப்போல. முற்றும்பூலம் - முதல்
தாம்பூலம்.

உகo. நம்பால் மகிழ்நர் கருணை
யிலராகுதல்.

உகக. மூந்நாவலர் - திருஞானசம்
பந்தமூர்த்தி முதலிய மூவர். ஆதி
யர் - மாணிக்கவாசகர் முதலியோர்.

உகஉ. வன்பேயுருவம் - வலிய
பேயினுருவம். ஒருமின் - காரைக்கா
லம்மையார்.

உகங. திறத்தன் - திருமால். ஏ
வாய்விழி - அம்பின்தன்மைவாய்த்த

விழியினையுடையாள்; பிருகுமுனிவருடையபத்தினி. மா வாய் கதை - பெருமைவாய்ந்த கதை. பாவாய் - பாவையே.

௨௬௪. அங்கு - அவ் வுள்ளத்தில். எம்முதல் - எமது முதல்வன்.

௨௬௫. நல்லாரொருவர் - சாக்கிய நாயனார். ஒருவர் - மன்மதன். அலர்- பூ, பழிமொழி. அவர் - மன்மதன்.

௨௬௬. தோளாமணி - புரையில்லாத மாணிக்கம். ஆளானவர்- தலைவர்.

௨௬௭. நிலாம்அனமே - விளங்குகின்ற அன்னப்புள்ளே. நில்லாமனம் பிறிது ஆகும். குயில் கரும்பனைக் கூவும். பரவு அலையே. வாரேகொள் வார் அலரே - நீர்கொண்ட நீண்டமலர்களே.

௨௬௮. நின் ஆகம். அசைந்து - அசைவுற்று, மெலிந்து. கண்ணீர் - கள்ளாகியநீர், கண்ணினீர். கரும்பனையலர் - கரியபனையினதுமலரில், கரும்புவில்லையுடைய மன்மதனது ஐந்து அம்பாகிய பூக்களில். புன்னாகம் - புன்னை.

௨௬௯. கொடுவரி - புலி. வாரற்க- வாராதொழிக. காவலர்க்குச் சொல்லுக.

௨௭௦. அரவையணிந்த அரையையுடைய. வேரல் - மூங்கில்.

௨௭௨. புரி - முறுக்கு. கூழை - கூந்தல். விரி - விரிதல். அரி - சிங்கம்.

௨௭௩. நீங்கு ஒய். தாங்கு ஒய் வரு. பாங்கோய் - பாங்கிலுள்ளாய்.

௨௭௪. நீர் - தன்மை. என்னை நோக்கியென ஒருசொல்வருவிக்க. சிற்றில்லத்தின் இயல்பு. அன்னை என்னென யான் கூறினன்.

௨௭௫. தன்மாலை - தன் னியல்பு. நின்மாலை - உன்மயக்கத்தை.

௨௭௬. நன்கு அண்மொழி. நாவல்- நாவன்மரம். புன்கு - புன்கமரம். பொன் - பசலை.

௨௭௭. அசத்துக்கு - தீயவனுக்கு, ஆட்டிற்கு. மயக்கமுற்று அவசத்து.

௨௭௮. குருலிங்கசங்கமக்ஷேத்திரமென்பது சீகாழியின் திருநாமம். அத்திருமாது - திருமகள். இத்திருமாது - தலைவி.

௨௭௯. முருகோடு - முருகக்கடவுளோடு. திருகோடு - மாறுபாட்டோடு. கோடு கோடு - வளைந்தகொம்பு. எழுதரிற் சிறப்பளிப்பார்.

௨௮௦. ஆர் - ஆத்தி. கமலம் - நீர்; கங்கை. வேங்கை பூத்தலும், சந்திரன் பரிவேடமுறுதலும் உள்ளநாளே குறிஞ்சி நிலமாக்களுக்குக் கலியாண நாள்.

௨௮௧. சீர் - கீர்த்தி. பீர் - பசலை.

௨௮௨. மருவார் - பகைவர். ஒருவார் - நீங்கார்.

௨௮௩. கடைக்கணித்த - கடைக்கண் பார்வைசெய்த. கொதிவாய் - கொதித்தல்வாய்ந்த.

௨௮௪. மிகல் - மிகுதல். நலம் - இன்பம்.

௨௮௫. அன்புநகலும் - அன்பு விளங்கியவுடன். பகடு - யானை.

௨௮௬. வாயலர் - வாயிற்றோன்றும் பழிமொழி. கண்ணலர் - கண்ணீர்.

௨௮௭. கொன் - அச்சம். தண்டா - அமையாத. மணஞ்செயும் - மணக்கும்; விளங்குமென்றபடி.

௨௮௮. இன்பம்வேட்டு. புலியரவோ - வியாக்கிரபாதரும் பதஞ்சலியுமோ.

௨௮௯. கலந்து சீறும்.

௨௯௦. கொன் ஆகாது - பயனின்மையை உடையதாகாமல்.

௨௯௧. நட்கும் - விரும்பும். நல்லெழுதும் உட்கும் - நல்லெழுதத்தையும் அஞ்சுவாள். வருக்கை - பலா. பெட்கும் - விரும்பும்.

௨௯௨. புனவேய் - கொல்லைகளிலுள்ள மூங்கிலை. அலரோவலிற் சிறந்ததென்பாள். அதை - அக்கனவை.

௨௯௩. உலாம் - உலாவும். பொரும் அந்தகாரம்.

௨௯௪. தென் - தென்னை. மரையிதழ் - கண்ணிமை.

௨௯௫. விடைக்கு உறை கொட்டில். இண்டை - தாமரை. பாசடை

க்கு - பசிய இலைக்கு. உறை - நீர்த்துளி. அடைவு அழகே - அடைதலழகே. படைக்கு உறை.

உகூசு. ஆரை - ஆத்தியை.

உகூஎ. கோள் - கொள்கை.

உகூஅ. துயராது - துயரமடையாமல். விடையேறி - சிவபெருமான். அறுப்பான் - முடிக்கும் பொருட்டு. சங்கம் ஈனும். குழை - குண்டலம். காவலர் சென்றார்.

உகூகூ. துன்றேறி - உமாதேவியார். வில் - மேரு.

௩௦௦. இரவுஅலரே - இரவிற்குரிய மலர்களே. விரவலர் - பகைவர். ஊர் கழி அலர் பகரும் - ஊரிலுள்ளார் மிக்க பழிமொழிகளைக் கூறுநிற்பர். வெஞ்சிறைக்கு உருகு - வெவ்விய காவலுக்கு உருகுவாயாக. வரைநீர் - எல்லையில்லாத. வெள் வார்குழையே - வெள்ளிய நீரின்முழக்கமே. உள்வார்க்கு உரை - நினைக்கின்ற தலைவர்க்கு உரைப்பாயாக.

௩௦க. புகலியை. குடிஞை - ஆறு. ஓ - இரக்கக்குறிப்பு. சங்கொடு முத்தையும். வாசங்கொடு - மணத்தைக்கொண்டு.

௩௦௩. அஞ்சேல் என்றார்வழி - அஞ்சாதே யென்றுசொல்லாத தலைவரிடத்து. வஞ்சு - வஞ்சனை.

௩௦ச. நஞ்சத்தை. பொருந்து இயலைநோக்கி. முருகக்கடவுள் வேலாற் கடலைவற்றச்செய்தனர்.

௩௦ரு. மூவல் - மூவலூர்; ஒரு திருப்பதி. வெண்ணாவல் செய் வார் நிழல் - திருவானைக்கா. எற் காவல்செய் வார் - தலைவர்.

௩௦சு. வரைப் பெண்ணான்றிப்பிரியாவொவர்கொல். அசிப்பர் - அவமதித்துச்சிரிப்பர். உறுதவம் என்னே.

௩௦அ. முத்தமாகியமணல். சுழிக்கும் - சுழிப்பாள்.

௩௦கூ. மெய்யென்று எய்த்தார் - மெய்யென்று அறிந்தார்.

௩க௦. போதில். முருகு - வாசனை.

௩கஉ. கழல்வளை - வினைத்தொகை. மோ - முன்னிலையசை.

௩க௩. சினை வில் நுதல் - சினைத்தையுடைய வில்லைப்போன்ற நெற்றி.

௩கச. பாய்அலர் - பாய்கின்ற மலரம்பு.

௩கரு. மயிர் முடியாவிதம் - கூந்தலை முடித்துக்கொள்ளாதவண்ணம்.

௩கசு. போய் விலையைக்கொண்டு வருவேன்.

௩கஅ. பிரான் மதுரையிற் சொல்லிய முதற்செய்யுளைப் பெற்ற நூல் - திருக்குறள். நூலின் இடைநிலை - பொருள். மற்று இருநிலை - அறமும் இன்பமும். கழுத்திற் பொன் - மாங்கலியம்.

௩உ௦. என்னை ஒருபெண்ணுக்கவும்.

௩உக. மேவியதை ஓர்வாயாக.

௩உ௩. வீழி - விழுதிப்பழம். பூழி- புழுதி.

௩உச. தளவம் - முல்லை; நீற்றில் தளவம்விளர்த்தன; பூத்தன. வலத்திற் சிவந்தன.

௩உரு. வருவி - வருவிப்பாய். நம்பு ஏர் - விரும்புகின்ற அழகை.

௩உசு. வந்தி - மலடி.

௩உஅ. தலைவர் சொல்லை வேதமெனத் துணிந்தேன்.

௩௩க. அம்பிகையின் திருக்கரத்திற் றோன்றிய நீர்-கங்கை.

௩௩உ. காவல் அம்பு - காத்தலையுடைய அம்பாகிய திருமாலின். உரிமெய்க்கு இடு-தோலை மெய்யினுக்குச் சட்டையாகத்தரித்த. நினக்கு அவலம்புரி ஏதம். ஆர்க்கின்றதை ஓர்.

௩௩௩. அங்கம் - என்பு. சங்கம் திருச்சின்னம் போன்று விளங்குக.

௩௩ச. கடம் - காடு. உம்முடைய கலக்கமற்ற நெஞ்சிடத்தே.

௩௩ரு. தாழ்குழலே, ஓர்வாயாக. திடந்தொறும், தொறும் - அசைநிலை.

௩௩சு. மயில் - விளி. யான்நம்பினின்று.

௩௩எ. உடல்சூழ்வது - உடலுதலைச்சூழ்தல். மயிலினை அளித்தேன்.

௩௩அ. வில் - மேரு. குண்டையூர்க்கிழவர் கொடுத்தநெல் பொன்னிற்

கும் பூதங்கள் களிறுகளுக்கும் உவமை. நம்முடைய ஒப்பற்ற ஊரில். பொன்னை இறக்கின.

௩௩௯. மேனை - இமவான்மனைவி. கண்டு ஆய் மகிழ்தரும்.

௩௪௧. ஒரவு - வலி. உருவரிலார் முரசு - கடல்.

௩௪௨. கடவூரில் - திருக்கடவூரில். ஒருவற்கு - மார்க்கண்டருக்காக. இம்மாது உயிர்க்கு ஊற்றம் - இம்மாதின் உயிர்க்கு வந்த இடையூற்றை.

௩௪௩. திருவடிகளை. அஞ்சனம் போலவும் கண்களையுடையாள்.

௩௪௪. மைந்நாய - கருமைபரந்த. ஒதன்மை - ஒதற்றன்மை. தீது அன்மை-நன்மை. நம்காதன்மை வஞ்சமே.

௩௪௫. கோலத்து இன் கிள்ளை. கடும்பு - சுற்றம். நிலம் - கண்கள். முத்துண்டாகு மிடங்களுள் நீலமலர் ஒன்றன்று.

௩௪௬. ஆக்கி - ஆக்கியவன்; பெயர். இறைவனை. கைகள் வளைகளை ஒரீஇ ஒவுமென்று. எண் - நிலைபேறு. பதுமாதனி - திருமகள்.

௩௪௭. புகார் - காவிரிப்பூம் பட்டினம். கொன்னேயல - பயனுள்ளவையே.

௩௪௯. வடுகநாதக் கடவுள் - சட்டைநாதர். மயிலே தக்கண முன்னிசைத்துப் பின்னர் அயர்ந்தாரென்னின் இவரோ தக்கவர்.

௩௫௧. நொதுமலர் - அயலார். விது - சந்திரன். புழுகு அப்பி.

௩௫௨. சுற்றை - சூழ்ந்த இடங்களை. எய்த்தனள் - அறிந்தனள். ஒற்றைத்திகிரியுள்ளார் - தலைவர்.

௩௫௩. அற்புதத்தை வாய்ந்த முருகக்கடவுள்.

௩௫௪. வளையினம்.

௩௫௫. பல்லவம்-தளிர். தகர்- ஆடு.

௩௫௬. குறிஆட்டை - குறிக்கப்படும் நடனத்தை. செறியாட்டை- நெருங்கிய வருடங்களை.

௩௫௭. வரன் ஆர் - விசேடமார்ந்த. கைதைமடலைக் குருகு என்றனள். தாழம்பூவை முறித்து.

௩௫௮. திருவிடைமருதூர்த்தல விருக்ஷம் மருது. அத்தலத்தில் ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு ஏகநாயகனென்பது திருநாமம்.

௩௬௦. அற்றூர்க்கு - பற்றொழிந்தவர்களுக்கு. நூல் - இறையனாரகப் பொருள்.

௩௬௧. காதரம் - அச்சம்.

௩௬௨. நாறு - நாற்று, நாறு முதிர் சூலுற்றென்ன. தக்கசெய்கை-மணஞ்செய்தல்.

௩௬௩. தென்மருத்து - தென்றல். கோயில் கொள் காழி. நமர்காள் கடிமணம் ஆற்றும்.

௩௬௫. வடி ஐந்து பால் குழல் - வடிக்கப்பட்ட ஐந்து பகுதியினையுடையகூந்தல். கடி ஐந்துடைய விரதியர்-கடியப்பட்ட ஐம்பொறிகளையுடைய முனிவர்.

௩௬௬. ஆலை - கரும்பு. வேலை- காலம்.

௩௬௭. வெப்பம் - சுரநோய். வழுதி - கூன்பாண்டியன்.

௩௬௮. எற்பு - என்பு. அன்னம் பாலை அவாவுங்கொல் - தலைவி பாலை நிலத்தை விரும்புவாளா; அன்னமானது பாலினை விரும்புமா வென்பது மற்றொருபொருள்.

௩௬௯. நாண் நண் பிறப்பை - நாணம் நண்ணிய பிறப்பினை.

௩௭௧. குறிப்பும் - குறிப்புச்சொல்லும்.

௩௭௨. கழங்கு - கழற்காய். பொழிற்குக்கூறினள்.

௩௭௩. குறை - மனக்குறை.

௩௭௫. தாயைநமரை. கௌவை - பழிமொழி.

௩௭௭. ஞானசம்பந்தர்க்குத்தோன்றும் பந்தர் - முத்துப்பந்தர். நிழல் இன்பம் தரு சோலை. படர் - துன்பம்.

௩௭௮. புனல் - வேர்வை. இருக்கு ஓலமிடும். திருக்கோலக்கா - அழகியசோலை, சீகாழிக்கு மேற்கேயுள்ள ஒருதிருப்பதி.

௩௭௯. புத்தேள் - பிரமன். என்கையோ.

௩அ0. மலம் - மூலமலம். அருளிய நிலைபெற்ற முருகனே; மூளை - புத்திரன். அல் மூளையா - இருளில் தோன்றுத.

௩அக. தோளன் பின் செல்லுவான். பிணி - கட்டு.

௩அ௨. பணி - கட்டளை. இடந்தாளலள் - பெயர்த்தாளல்லள்.

௩அ௩. அகம் விழுந்தான்.

௩அ௪. திருக்கழிப்பாலை, திருமூல்லைவாயி லிரண்டும் சீகாழிக்கு அருகேயுள்ள திருப்பதிகள்.

௩அ௫. உதை - அந்தவியாதியை. திருவேளூர் - வைத்தீசுவரன் கோயில். நோயுடையார்க்கு (மண்ணுகிய) திருச்சாந்துண்டைக ளளித்து உண்பித்து வியாதிகளைப் போக்குதல் ஸ்ரீவைத்தீசுவரர் ஸந்நிதியில் இன்றும் வழக்கமாக இருக்கிறது.

௩அ௬. வல்லாய்கொடி - வலிய ஆராய்கின்ற கொடிகள்.

௩அ௭. அப்பெயர்த்தீர்த்தம்-பிரமதீர்த்தம். பிரமலிங்கேசரில், இல் - திருக்கோயில். எற்கு அகழும் - எனக்கு நீக்கும்.

௩அஅ. வல்லியம் - புலி.

௩அ௯. விழியில்லா முகம்போல்.

௩௯0. நமர் ஏற்றிலர்.

௩௯க. அறவேதனை உளை - மிகத்துன்பமுள்ளாய். அயலுறவே - வேறு உறவையே.

௩௯௨. புகர் - குற்றம். ஆய்பவர்க்குப் புகர் ஒழிப்பார். ஆயினும் நிகரில். முருகோடு சென்றதற்கு. அம்முன்னம் - அந்தக் குறிப்பை.

௩௯௩. கொடுமுடி - முருகக்கடவுளுடைய திருப்பதிகளுள் ஒன்று. தொழும்பு - அடிமை.

௩௯௪. மின்பயலார் - உமாதேவியாரைத் திருமேனியின் பாதியிலுள்ளவர்.

௩௯௬. காவாய் - சோலைகள் பொருந்திய.

௩௯௭. மறியா - மானுக.

௩௯அ. பற்று - விருப்பம். பதிப்பற்று - கணவன்மேல் விருப்பம்.

௩௯௯. பாங்கி வதனம் சிறுகவும்.

௪00. வள்ளாய் - வளவிய தாய். தள்ளாய் - தாயே.

௪0௨. கொடியே - காக்கையே.

௪0௪. கதிரே - சூரியனே. மலர்த்து.

௪0௫. அணவு - அளாவுகின்ற. காளை நாம் மேலுமைப்பது என். நடப்பதற்கு ஆமே.

௪0௬. பதம் - சோறு. முன் தானென.

௪0௭. ஈசை - உமை.

௪0௯. தரீஇ - தேடி. அற்பு - அன்பு.

௪க0. திரிபதார்த்த இலக்கணங்களை அறிந்து பிறப்பை ஒழித்தவர்களே. காளை - பாலைநிலத்தலைவன்.

௪கக. பஞ்சவடி - மயிராலே அகலமாகச் செய்யப்பட்டு மார்பிலே பூணூலாகத் தரிக்கப்படும் வடமாம். பஞ்சமுத்திரை- உலோகத்தாலே பஞ்சாயுதவடிவங்களாகச்செய்துகோத்து அணியப்படுவதோர் காலணி. எற்பணி - என்பு அணி. வழியில்.

௪க௩. விரும்புநர்க்கே உரியன வென்று ஒருசொல் வருவிக்க.

௪க௪. அவனியைஉண்ட திருமாலின் மார்பிலுள்ள பாவை - திருமகள். வேங்கைப்பல் - புலியின்பல்லை.

௪க௫. தற்றாய் - தன்னைப் பெற்றதாய்.

௪க௬. ஒருவகைப் புறவுக்கு உணவு கற்கள்.

௪க௭. சிற்பம் - சிற்பநூல்விதி. கற்பம் - ஒருவகைத் திருநீறு. அற்பம் - சிறுமை.

௪கஅ. மொழி ஒன்றை. வன்பார்-வலிய பாரில். தோன்றல் - பாலைநிலத்தலைவன். என்னையும் ஆத்தி மலரையும்.

௪க௯. கரிய மேகத்தை யொத்த கண்டன், கழுமலம் இன்றுசார்வர்.

௪௨0. கடை - கீழ்மகன்.

௪௨௨. மாட்சிமையில்லாத நம் தொண்டு. மணஞ்செய்து.

௪௨௩. விது - திருமால்.

௪௨௪. ஓம் மான் - பிரணவப் பொருளாகிய மகான்.

௪௨௫. சதுக்கொள் - நான்காகக் கொண்ட. அணங்கு பொருவார் - தெய்வத்தை ஒப்பவர்கள்.

௪௨௬. இதில், சுந்தரமூர்த்திநாய ஞர் அவிநாசியில் முதலையுண்டபா லனை அழைத்தது உவமையாகக் கூற ப்பட்டது.

௪௨௮. சி மன் - சிகாரத்தின் தலை வன், ஐந்தெழுத்தினுள் சிகாரத்திற் குப் பொருள் சிவமென்று உணர்க. ஐந்துவாயையுடையஅரவம். அம்மனை- தாய்.

௪௨௯. கண்டுவரும் - கற்கண்டின் இனிமை தோன்றும். மண்டு உவர் உந்தி - மிக்க உவரையுடைய கடல் சூழ்ந்த. தண் துவர் உந்திச் சுழியை - தண்ணியபவளம் போன்ற உந்திச்சுழி யுடையாளை. சுழியை வரைந்தார்.

௪௩௩. புடை கொள் கழுமலம் - இடமாகக்கொண்ட சீகாழி. தரு வன் புடை - மரங்களின் வன்மையையு டைய.

௪௩௪. நினை யேவாத நின் மகளெ ன்றது, 'ஏவாமக்கள்' என்பதைப் புலப்படுத்தியபடி.

௪௩௫. வடமீன் - அருந்ததி.

௪௩௬. வேதண்டம் -மலை. வீரை- கடல்.

௪௩௭. சலி - ஏறுமை. தோடம் - தோஷம்.

௪௩௮. பஞ்சானனம் - சிங்கம். முகை - அரும்பு.

௪௩௯. மதலை - ஈண்டுப் பிரமதே வர்.

௪௪0. திருஞானசம்பந்தரும் அ வர் காதலியாரும் மணஞ்செய்துகொ ண்டு உடனே முத்தி பெற்றமையின் 'தம் உருக்குலைந்தார்' என்றார்.

௪௪௧. மாமுயற்சி - மிக்கமுயற்சி. தேனைவண்டுகள் உண்ணும். மானை யும்மாவடுவையும் அனைய.

௪௪௨. புடைக்கும் - பருக்கும். பொதுத்து - துளைத்து. நின்பெரு நடைக்கும்.

௪௪௩. உரைத்த சொல் - வேதம். செல்வி, எழுவாய். கண்வார் அலர் - கண்கள் வார்க்கின்ற நீர்.

௪௪௪. கடுப்பது - ஒப்பு; அது பகுதிப்பொருள் விகுதி. கருனை - பொரிக்கறி. குய் வாய் புளிம்பாகு - நறும்புகைவாய்ந்த புளிங்கறி. துழந்து அட்டதே - துழாவிச்சமைத்த உண வையே.

௪௪௯. "தெய்வந்தொழாஅள்" என்னும் திருக்குறளின் கருத்து இதில் அமைந்துள்ளது.

௪௫௧. ஒன்று - ஒன்றுபடாத. போதுஅறின் - சூரியன் அத்தமித் தால்.

௪௫௨. ஊரன் - மருதநிலத்தலை வன். மனை - மனைவி.

௪௫௩. பதியில்குலம் - கணவனில் லாதகுலம். மடவார் - பரத்தையர்.

௪௫௪. நித்தில நகையாய் காணெ ன்று. தழுவுதற்கு விழித்தேன்.

௪௫௫. சுடரோ - தீபமே.

௪௫௭. நல்லார் - பரத்தையர். இசையுணவைச் செவிக்கூட்டலிற் பசி இல்லையாயிற்று. திருவள்ளுவர் சொற்றது, "செவிக்குணவில்லாத போழ்து" என்னுந் திருக்குறள்.

௪௫௮. மேவும்படி இல்லை. நல்ல காதன்மை உள்புக்கது.

௪௬0. பகடு - எருமைக்கடா. பொன்னெழில் மடவார் - பரத்தையர்.

௪௬௧. கேதனம் - கொடி.

௪௬௨. நவளம் - சிறப்பையுடைய அழகு; ந - சிறப்புப்பொருளைத் தருவ தோரிடைச்சொல். பாகுஇலை - பாக் கும் வெற்றிலையும். சேடியைவிடு.

௪௬௩. பாடுஇயை - பெருமை இயைந்த. எடு - இதழ். கவிர் -முருள் முருங்கைமரம். இணைய - ஒப்ப.

௪௬௪. வாளா - சும்மா. இச்செய் யுள், 'வெறுவாயை மெல்லுவோனு க்கு அவல் கிடைத்ததுபோலும்' என் னும் பழமொழியின் கருத்து.

௪௬௫. தாள் பணிதலே தவம்.

௪௬௬. நீர் செல் உக வாய்மலர்கி ன்றவள் - நீரானது மேகத்தில்நின்றும்

உரும்படி பெய்யென்று சொல்லுப வள்; தலைவியின் கற்புடைமையை விளக்கியபடி.

சகூஎ. நமை - ஒருவகைமரம். அமை - மூங்கில்.

சகூஅ. மாறு ஒழுகினர் - பகையா கநடந்தவர். மன் - தலைவன்.

சகூகூ. உண்டாகும், முற்று.

சஎ0. ஒருதலையின்பமே அம்மு த்தியின்பம்; இதனை, "அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே னியாதுநீ பெற்றதொன் றென்பால்" என்னும் அருமைத்திருவாக்காலுணர்க. திருவா சகம், கோயிற்றிருப்பதிகம், க0. ஈது - நாம்பெற்ற இன்பம்.

சஎக. பொருள் - புத்திரன்.

சஎஉ. மருமல் ஓதுக. வல்லரக் கன் - இராவணன். அவன் செய்பி ழை - கைலாயமலையைப் பெயர்க்கத் தொடங்கியகுற்றம். நாள் - வாழ்நாள்.

சஎஙூ. போந்ததை அறிவள்.

சஎச. பசப்பு முதலியவற்றை நாம் போய்ப்பார்ப்பது என்று.

சஎரு. மட்டு - தேன். கட்டார் மகவு - தழுவிக் கொள்ளுதலார்ந்த குழந்தை.

சஎஎ. நீ சொல்லல் என்னை. வீ - மலர். வீணை இசைத்தல் - வீணைவா சித்தல், வீண்மொழியைப் பேசுதல். வாயும், உம் - இறந்ததுதழீஇயது. சேறி - செல்வாய்.

சஎஅ. கருங்கலை-கருங்கல்லினை. செந்நீர் - இரத்தம். ஆய் ஏகர்.

சஎகூ. மறைமா - வேதக்குதிரை. பாவும் - பரவிய. அடையாதவரது இல்லினை. என்றும் - எந்நாளும்.

சஅக. சிராமலையிற் சிவபெரு மான் கருவுற்றுப் பொறையுயிர்க்க வருந்திய செட்டிப்பெண் ஒருத்தியை அவளுடைய தாய்வடிவங்கொண்டு சென்று பாதுகாத்தருளின ரென்பது புராணகதை.

சஅஉ. மின்னும் - மின்னலும்.

சஅஙூ. தீவினை முற்றியது - தீ வினை முடிந்தது.

சஅச. கலாம் - பிணக்கு.

சஅரு. அணங்கா வருத்தல் என் - வருந்தி வருத்துவது யாது. கண் முத்தம் நல்கி-கண்ணீரைப் பெருக்கி.

சஅகூ. மேவல், பற்றல், பிடிய லென்பன எதிர்மறை வியங்கோள். எங்கைமாரென்றது பரத்தையரை.

சஅஅ. மருவு அன்புறு. ஒருவு அன்புடன் - நீங்கிய அன்போடும்.

சஅகூ. முடி - முடியில். மழை பொறுக்குங்குழல் - கங்கையை. 'தண் ணீரும் முப்பிழை பொறுக்கும்' என் பது பழமொழி.

சகூ0. நிம்பநெய் - வேப்பநெய். விரைப்பால் - வாசனைப்பகுதிகள்.

சகூக. மால்மேல் - திருமாலின் மேல். இன்பந்தரும் அமுதமென்றது தலைவியை.

சகூஉ. நைதொட்ட - நைதல் பொருந்திய.

சகூஙூ. ஆரோடு சொற்றும் - யா ரோடு சொல்லுவேம். கண்ணிவாட. நார் ஓவும் மாதர் - அன்புநீங்கிய பரத் தையர்.

சகூரு. ஊடல்கோடல் இயல்பு கொல். தலைவனைத்தழுவு.

சகூஎ. சாலம் - மாயவித்தை. ஆட வருள் தழுவார் எவர்.

சகூஅ. தள்ளாய் - நீக்காயாய். பிள் ளாய் - பிள்ளையே.

சகூகூ. திகழுந்தேசு - விளங்கும் ஒளி. கொழுந்தேயென்றதுமகனை. சார்ந்து கொளளற்க.

ரு00. கொளலால்மேவிற்று.உனை நல்கும் பலமோ-உனைப்பெற்றபயனோ.

ரு0க. செந்தாது - பொன்.

ரு0உ. தளி - கோயில். திருஞான சம்பந்தர் அழுது சிவபெருமானை அ ழைத்தது இங்கே உவமை.

ரு0ஙூ. அரி ஓர் விடையர் - திரு மாலை ஒப்பற்ற விடையாக உடையார். உரியோர் - தலைவர்.

ரு0ரு. வேய்புரைதோளையும் பவர் புரை இடையையும் உடையாய்; பவர்-கொடி. கலைமடந்தை எய்பவர் - சங்கப்புலவர்கள். கழுமலவாணராய்ந் த கல்வியை யென்க.

௫0௬. ஓங்கலைத் தவாத வில்லாக வுடையார். நீங்கு அற்ற யாவும் - குற்றமற்ற நூற்பொருள்கள் யாவற்றையும். கோங்கு அற்றம் ஒரும் - கோங்கரும்பு சமயம் பார்க்கும். கொழுநர் சென்றுளார்.

௫0௭. கனம் - மேகம்; கனம் தூற்றும். உள்ளெழுந்து - மனத்தே தோன்றி. ஒருவன் - மன்மதன்.

௫0௮. முக்குற்றம் - ஐயம், திரிபு, அறியாமை.

௫0௯. அரசர், தம்மாலும் தம்முடைய பரிசனங்களாலும் பகைவராலும் திருடர்களாலும் மற்ற உயிர்களாலும் உண்டாகும் பயம் ஐந்தினையும் உயிர்களுக்கு நீக்கி அரசாளவேண்டுமென்பது அறநூற்றுணிபு; இதனை "மாநிலங்காவலனாவான்" என்னும் பெரியபுராணச் செய்யுளால் உணர்க.

௫௧0. கடி - விளக்கம். நீதி - நீதிநூல்.

௫௧௧. மருப்புப் பொருப்புரிபோர்த்து - யானைத்தோலைப் போர்த்தி. மெய்யாட்டம். பிரான் போர்த்துப் நின்றும் ஆட்டம் ஒழிந்திலன்.

௫௧௨. மூவல் - மூவலூர். ஐயாறு - திருவையாறு. குடமூக்கு - கும்பகோணம். நணு - பவானிகூடல்.

௫௧௩. ஒழித்தல் அறநெறி. கண்ணபிரான் பஞ்சவர்க்காக நூற்றுவர்பால் தூதுசென்றான்.

௫௧௪. கலிக்காமர் - ஏயர்கோன் கலிக்காமநாயனார்; இவர், சிவபெருமானைப் பரவையார்பால் தூதுவிடுத்ததுபற்றி வன்றொண்டர்பாற் கொண்ட கோபத்தைச் சிவபெருமான் இடையே நின்று மாற்றியருளினார். ஆர்கலி - கடல். உளத்து இகலி. கலிக் காமரு கழல் - முழங்குதலையுடைய அழகிய கழல்.

௫௧௫. அருகா அலர் செறியும் - குறையாத மலர்கள் நெருங்கிய. பருகு ஆவலர் - திருஞானசம்பந்தர். திருநீலகண்டத்தமிழ் - திருநீலகண்டப்பதிகம்; இது, பனியாலுண்டாகுந்துயரம் தீர்தற்பொருட்டு அவரால் அருளிச் செய்யப்பட்டது.

௫௧௬. இருவருடைய நீங்காப்பகை. ஏங்கா - ஏங்கி.

௫௧௮. மூவர்புரம் நகைநேருற்றதைப் பகைவருறையும் புரமுறும்.

௫௧௯. கட்டார் - கள்ளையுடைய மாலை. விட்டார்கொல் - பகைவரோ.

௫௨௧. பொன்னாண் எழில்.

௫௨௩. நனி வந்து கூடும் கொம்பு - மிகவும் காற்றுக் கூடப்பெற்ற கொம்பு.

௫௨௪. அன்பன் இமாசலம். பெரிய தனையை.

௫௨௬. வல்லானை, ஆனை - மதிலுறுப்பு. "இல்லானை யெல்லாருமெள்ளுவர்" என்பது திருக்குறள்.

௫௨௭. தளிர்நந்தின - தளிர்கள் மிக்கன. ஆசை - திசை.

௫௩0. ஆறென்றகால் - வண்டு. நின்கை காவென்றே - உன்கையைக் காற்றென்றே.

௫௩௧. சந்தாபம் - துக்கம், வெப்பம். துக்கமொழிந்துவாழ்ந்தனம்.

ஆபத்துக்காத்த விநாயகர்துணை.

——•••••——

# செய்யுள் முதற்குறிப்பகராதி.



## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௧ ௫ | ௮ ௯ | ௩ | மிவட் | மிவர்க் |
| ௨ ௮ | ௧ ௮ ௧ | ௧ | திறமாய் | திறலாய் |
| ௪ ௧ | ௨ ௬ ௯ | ௪ | நீயென் | நீரென் |
| ௫ ௭ | ௩ ௭ ௬ | ௨ | று கோ | றுக் கோ |
| ௬ ௨ | ௪ ௧ ௦ | ௧ | று ப | றுப் ப |
| ௭ ௨ | ௪ ௭ ௧ | ௨ | வற்கு | வர்க்கு |